எ.—'అగ్నయే స్విష్టకృతే స్వాహా' 'ஸூர்யாயஸ்வாஹா - அக்நயேஸ்விஷ்டக்ருதேஸ்வாஹா, அக்நயேஸ்வாஹா - அக்நயேஸ்விஷ்டக்ருதேஸ்வாஹா' (உஉங) என்னும் மந்த்ரங்களைச்சொல்லி, ப்ராதஸ்ஸாயங்களில் ஆஹுதிகளைப்பண்ணக்கடவள்" என்று ஶாஸ்த்ரம் சொல்லாநின்றது என்று ஶிஷ்டாசாரமுண்டாயிருந்தது. யாகபூமியை உழுகிறபோது, கர்ஷகன், "లాఙ్గలం పవీరవం సుశేవం సుమతిత్సరు" "லாங்கலம்பவீரவம்ஸுஶேவம்ஸோமபித்ஸரு" (உஉச) என்னும் ரிக்கைச்சொல்லி உழவேணும் என்று சொல்லுகையாலேயும், உத்ஸர்க்காபவாத ந்யாயத்தாலே க்ருத்ஸ்ந வேதாதிகாரமன்றிக்கே, யத்கிஞ்சிததிகாரமுண்டாயிருந்தது.

ப்ரம்ஹாண்டபுராணே கோதாவரீமாஹாத்ம்யே ஸநத்குமாரதக்ஷிணாமூர்த்திஸம்வாதே ஸப்தசதுஶ்ஶததமாத்யாயே, "జ్యోతిష్టోమాదియజ్ఞేషు కేషాంచిదధికారతా । శ్రీమద్రామాయణే కావ్యే చతుర్ణామధికారతా" "ஜ்யோதிஷ்டோமாதியஜ்ஞேஷு கேஷாம்சிததிகாரதா - ஶ்ரீமத்ராமாயணேகாவ்யே சதுர்ணாமதிகாரதா" (உஉரு) என்றும், வ்யோமஸம்ஹிதாயாம், "స్త్రీశూద్రబ్రహ్మబన్ధూనాం తన్త్రజ్ఞానేధికారతా। ఏకదేశే పరోక్షే తు న తు గ్రన్థపురస్సరే॥ త్రైవర్ణికానాం వేదోక్తసమ్యగ్భక్తిమతాం హరౌ । ఆహురప్యుత్తమస్త్రీణామధికారం తు వైదికే" "ஸ்த்ரீஶூத்ரப்ரம்ஹபந்தூநாம் தந்த்ரஜ்ஞாநேதிகாரதா - ஏகதேஶேபரோக்ஷேது நதுக்ரந்த புரஸ்ஸரே - த்ரைவர்ணிகாநாம் வேதோக்த ஸம்யக்பக்திமதாம்ஹரௌ-ஆஹுரப்யுத்தமஸ்த்ரீணா மதிகாரம்து வைதிகே" (உஉசு) என்னும் இத்யாதி வசநங்களாலே - "ஸ்த்ரீஶூத்ராதிகளுக்கு சில அம்ஶங்களில் வைதிகாதிகாரமுண்டு" என்பர்கள்.

பராஶரஸம்ஹிதாயாம், "భగవద్దాస్యవృత్తిశ్చ భగవత్కీర్తనాదికమ్ । సదా ప్రణవసంయుక్తమూలమన్త్రద్వయాదికమ్॥ వేదస్వరాదివర్జ్యం స్యాచ్ఛూద్రాణాం మన్త్రజాపనే। దీక్షాయాం ప్రణవాది స్యాత్సర్వదాగమలాసన" "பகவத்தாஸ்யவ்ருத்திஶ்ச பகவத்கீர்த்தநாதிகம் - ஸதாப்ரணவஸம்யுக்த மூலமந்த்ரத்வயாதிகம் - வேதஸ்வராதி வர்ஜ்யம்ஸ்யாச்சூத்ராணாம் மந்த்ரஜாபநே - தீக்ஷாயாம்ப்ரணவாதிஸ்யாத் ஸர்வதாகமலாஸந" (உஉஎ) என்று பகவான்தானே யருளிச்செய்தானிறே. "ப்ரணவத்தையொழிய அஷ்டாக்ஷரம்சொல்லுகிறபக்ஷம் அவைதிகமாகையாலே அநாதரணீயம்" என்று இவர்தாமே யருளிச்செய்கையாலே, ப்ரணவவிஶிஷ்டமான மந்த்ரமே ஆதரணீயம் என்றதாய்த்து. "గతిరష్టాక్షరో నౄణామపునర్భవకాఙ్క్షిణామ్" "கதிரஷ்டாக்ஷரோந்ரூணாமபுநர்ப்பவ காங்க்ஷிணாம்" (உஉஅ) என்று விஶேஷநிர்த்தேஶம்பண்ணாதே, ஸாமாந்யேந, "అపునర్భవకాఙ్క్షిణామ్-నౄణామ్-అష్టాక్షర ఏవ-గతిః" "அபுநர்ப்பவகாங்க்ஷிணாம்-ந்ரூணாம்-அஷ்டாக்ஷர ஏவ-கதிः" என்று விதிக்கையாலே, "ஸர்வாதிகாரம்" என்னக் குறையில்லை.

ஆகையாலே, இவ்வசநங்களுக்கு விஷயம்- முமுக்ஷுக்கள். "న స్వరః ప్రణవోఽఙ్గాని" "நஸ்வரःப்ரணவோங்காநி" (உஉக)இத்யாதி வசநங்களுக்கு முமுக்ஷையில்லாதார் விஷயம்.

மூ.—அதில் ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்.

---

வ்யா.—இனி, அந்த ரஹஸ்யத்ரயத்திலும் ப்ரதமரஹஸ்யமேதென்னும் ஆகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார்,

(அதில் ப்ரதமரஹஸ்யம்திருமந்த்ரம்) என்று. அதாவது- அந்த ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு, இவ்வதிகாரிக்கு ப்ரதமம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யம்,

---

எ.—பாத்மே, "[illegible]" "ஸ்வபாவாத்ப்ரணவஸ்தஸ்மிந்மூலமந்த்ரோ ப்ரதிஷ்டிதம்" (உ௬0) என்று துடங்கி, பதவிபாகத்தையும்செய்து, பதங்கள்தோறும் அர்த்தவிஶேஷங்களையும் பரக்க ஓரத்யாயமாக பார்வதிக்கு ருத்ரனுபதேஶித்தான்; ஆகையாலேயிறே "[illegible]" "ஶிவம்மஹாபாகவதம்ஸ்மராமி' (உ௬௩) என்று ரிஷிகள் கொண்டாடினார்கள். அலமதிப்ரஸங்கேந.

"[முமுக்ஷுவுக்கு]- பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸாரஸப்தவாச்யங்களான அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்த விமோசநத்திலே யிச்சைபிறந்தவனுக்கு, [ரஹஸ்யம்மூன்று] - ஸ்வரூபோபாய புருஷார்த்த யாதாத்ம்யப்ரதிபாதகமான ரஹஸ்யத்ரயமானது, [அறியவேண்டும்]-அவஶ்யம் அறியத்தக்கது" என்று மூலார்த்தம்.

உ.—இனி, மேல்வாக்யத்துக்கும் இதுக்கும் ஸங்கதியருளிச்செய்கிறார் (இனி) என்று துடங்கி. (இனி) என்றது - அதிகாரிநிர்த்தேஶமும் ஜ்ஞாதவ்யநிர்த்தேஶமும் பண்ணின வநந்தரமென்றபடி. (அந்தரஹஸ்யத்ரயத்திலும்) என்றது - அவஶ்யம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யத்ரயத்திலுமென்றபடி. (ப்ரதமரஹஸ்யமேது) என்றது - ப்ரதமம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யமேதென்றபடி. (ஆகாங்க்ஷை) யாவது - பதஸ்யபதாந்தர வ்யதிரேகேணாந்வயாநுபபத்தி:. ஶங்கையிலேயென்னவுமாம். (அருளிச்செய்கிறார்) என்றது - ஶங்கைக்கு ஸமாதாநமருளிச்செய்கிறாரென்றபடி.

(அதாவது) என்றது - [அதில் ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்] என்று சொன்னதாவதென்றபடி. (அந்தரஹஸ்யத்ரயத்திலும்) என்றது - ஸ்வரூபோபாய புருஷார்த்த யாதாத்ம்யப்ரதிபாதகதயா அவஶ்யம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யத்ரயத்திலுமென்றபடி. (வைத்துக்கொண்டு) என்றது-சாரியைச்சொல் - வாக்யாலங்காரம்-அவ்யயம்-அர்த்தமில்லை. (இவ்வதிகாரிக்கு) என்றது — பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸாரநிவ்ருத்தியிலே இச்சையுடையுனாய் ப்ரஸ்துதனான அதிகாரிக்கென்றபடி.

---

தொ-அ.—உ. மேல்வாக்யத்துக்கு அவதாரிகை (இனியித்யாதி.)

(வைத்துக்கொண்டு) என்றது - சாரியைச்சொல். அதுக்கு அர்த்தமில்லை. (இவ்வதிகாரிக்கு) என்றது - பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸாரநிவ்ருத்தியிலே யிச்சையுடைய இவ்வதிகாரிக் கென்றபடி.

வ்யா.—ஸ்வரூப யாதாத்ம்யபரமாய் த்யாஜ்யோபாதேய † விபாக ஜ்ஞாநத்தை பரிபூர்ணமாகப் பிறப்பிக்குமதான திருமந்த்ரமென்கை. அநந்யார்ஹஶேஷத்வம் அநந்யஶரணத்வம் அநந்யபோகத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே.

---

ஏ.—(ஸ்வரூபயாதாத்ம்ய பரமாய்)என்றது – ஸ்வரூபயாதாத்ம்ய ப்ரதிபாதக பரமாயென்றபடி. (பரம்) - அவ்யயம். (பரமாய்)-ஸமர்த்தமாயென்றபடி. (விபாகஜ்ஞாநத்தை) என்றது-விபாகவிஷயகஜ்ஞாநத்தையென்றபடி. (பரிபூர்ணமாக) என்றது - "[Grantha]" "அநுக்தமந்யதோக்ராஹ்யம்"(உகஉ) என்கிறபடியன்றிக்கே, ஸம்பூர்ணமாக வென்றபடி. (என்கை) என்றது - என்று சொல்லுகையென்றபடி. "இத்யுக்தம்" என்னுமாப்போலே.

"[அதில்]-அவஶ்யம் ஜ்ஞாதவ்யமான அந்தரஹஸ்யத்ரயத்திலும், [ப்ரதமரஹஸ்யம்]-ப்ரஸ்துதனான வதிகாரிக்கு ப்ரதமத்திலே அறியத்தக்க ரஹஸ்யம்,ஸ்வரூபயாதாத்ம்யபரமாய் த்யாஜ்யோபாதேய விபாகஜ்ஞாநத்தை பரிபூர்ணமாகப் பிறப்பிக்குமதான திருமந்த்ரமாயிருக்கும்"என்று மூலார்த்தம்.

திருமந்த்ரம் ஸ்வரூபயாதாத்ம்யபரமானவாறே ப்ரதமரஹஸ்யமாமோவென்னில்; அருளிச்செய்கிறார் (அநந்யார்ஹஶேஷத்வம்) என்றுதுடங்கி. "[Grantha]" "விஷ்ணோரநந்யஶேஷத்வம்ததைவாநந்யஸாதநம் - ததைவாநந்யபோக்யத்வம்இதாகாரத்ரயம்ஸ்ம்ருதம்" (உகங) என்று ஹாரீதஸ்ம்ருதியில் சொல்லுகிறபடியே, அநந்யார்ஹஶேஷத்வ அநந்யஶரணத்வ அநந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கையாலே என்றபடி.

அத்ராயம்விவேகः—திருமந்த்ரமானது, ப்ரதமபதமான ப்ரணவத்தாலே - "மகாரவாச்யனான சேதநன் அகாரவாச்யனான ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷம், அந்யருக்கு ஶேஷமன்று" என்று உகாரம்வ்யவச்சேதிக்கையாலே, அநந்யார்ஹஶேஷத்வத்தையும்; இரண்டாம்பதமான நமஸ்ஸாலே - [மஃ-ந]

---

தொ.—(ஸ்வரூபயாதாத்ம்யபரமாய்) என்றது - அநந்யார்ஹஶேஷத்வாத்யாகாரத்ரய ப்ரதிபாதகபரமா யென்றபடி.(த்யாஜ்யோபாதேய விபாகஜ்ஞாநத்தை) என்றது-அநந்யார்ஹஶேஷத்வாத்யாகாரத்ரயத்துக்கும் அநுரூபங்களான த்யாஜ்யோபாதேயங்களுடைய விபாகஜ்ஞாநத்தை யென்றபடி. அவையாவன - தேவதாந்தர ஶேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும், ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமும், உபேயாந்தரப்ராவண்யமும், கைங்கர்யத்தில் ஸ்வயம்கர்த்ருத்வமும், ஸ்வயம்போக்த்ருத்வமும், பாகவதவிஷயத்தில் அநந்யார்ஹஶேஷத்வாத்யாகார த்ரயமும்.

திருமந்த்ரம் ஸ்வரூபயாதாத்ம்யாதி பரமானவாறே ப்ரதமரஹஸ்யமாமோவென்ன வருளிச்செய்கிறார் (அநந்யார்ஹ) இத்யாதியால். (விபாகத்தை) என்றது - விபாகஜ்ஞாநத்தை யென்றபடி.

---

பி.—த்வயம்சரமஶ்லோகமிருக்க, திருமந்த்ரத்தை ப்ரதமரஹஸ்யமென்பானென்னென்னவருளிச்செய்கிறார் (அநந்யார்ஹஶேஷத்வம்) இத்யாதி.

---

† "விபாகத்தை" என்று தொட்டாசார்யாரும்பதத்தில்பாடம்.

வ்யா.—சேதநஸ்வரூபயாதாத்ம்ய ப்ரதிபாதகபரமாய், ததநுகுண மான த்யாஜ்யோபாதேய விபாகத்தையும் ஸுஸ்பஷ்டமாகப்ரதிபாதியா நின்றுள்ள இம்மந்த்ரத்தாலே ஸுஶிக்ஷிதனானவனுக்கிறே மற்றரஹஸ்யங்க ளிரண்டிலும் ப்ரதிபாதிக்கப்படுகிற உபாயோபேயங்களில் அபேக்ஷ ஜநிப் பது. ஆகையாலே,

---

ஏ.—என்று - ஸ்வரக்ஷணேஸ்வாந்வயநிவ்ருத்தி சொல்லுகையாலே, அர்த்தாத் ஸ்வரக்ஷணார்த்தமாக ஸாதநாந்தரநிவ்ருத்தி ஸித்திக்கையாலே, அநந்யஶரணத்வத்தையும்; த்ருதீயபதமான நாராயணபதத்தில் - கைங்க ர்யப்ரார்த்தநாப்ரகாஶகமான வ்யக்தசதுர்த்தியாலே - அக்கைங்கர்யத்துக்கு ஆஶ்ரயமான சேதநனை "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" (உஙச) என்கிற ஶ்ருதி போக்யனாகச்சொல்லுகையாலே ஸித்தித்த அநந்யபோக்யத்வத்தையும் ப்ரதிபாதிக்கையாலே, சேதநஸ்வரூபயாதாத்ம் ய ப்ரதிபாதகபரமாயிருக்கும். இத்தால் - பக்தஸ்வரூபவ்யாவ்ருத்தி ஸித் தித்ததாய்த்து.

(ததநுகுணமான) என்றது-பூர்வோக்தாகாரத்ரயாநுகுணமான வென் றபடி. (த்யாஜ்யோபாதேயேத்யாதி) த்யாஜ்யாம்ஶங்களாவன - தேஹாத் மாபிமானமும், ஸ்வஸ்வாதந்த்ரயமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமும், அபந்துஸங்கமும், விஷயசாபல்யமும். உபாதேயாம்ஶங்க ளாவன - லக்ஷ்மீஶேஷத்வமும், ததேகோபாயத்வமும், பாகவதஶேஷத்வ மும், பகவத்பாகவதகைங்கர்ய ப்ரார்த்தனையும், இவற்றினுடைய விபாக விஷயஜ்ஞானத்தை ப்ரணவத்தில் த்ருதீய ப்ரதமத்விதீயபதங்களாலும் நமஸ் ஸாலும் வ்யக்தசதுர்த்தியாலும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியாநின்றுள்ள வென்றபடி. (ஸுஶிக்ஷிதனானவனுக்கிறே) என்றது- நன்றாக ஶிக்ஷிதனான வனுக்கன்றோ வென்றபடி. (மற்றரஹஸ்யங்களிரண்டிலும்) என்றது - ஶேஷித்த த்வய சரமஶ்லோக ரஹஸ்யங்களிரண்டிலு மென்றபடி. (உபா யோபேயங்களில் அபேக்ஷஜநிப்பது) என்றது - பகவானாகிற வுபாயத்தி லும் பகவத்கைங்கர்யமாகிற உபேயத்திலும் அபேக்ஷயுண்டாகிறதென்ற படி. (ஆகையாலே) என்றது - உபாயோபேயங்களில் அபேக்ஷஜநிப்பது ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாகையாலே யென்றபடி. ஸ்வரூபயாதாத் ம்ய ஜ்ஞானமன்றியிலே ஸ்வரூபாநுரூபோபாயோபேயங்களில் அபேக்ஷ ஜநியாமையாலே என்னவுமாம்.

---

தொ.—(ரஹஸ்யங்களிரண்டிலும்) என்றது - த்வயசரமஶ்லோகங்களி ரண்டிலு மென்றபடி. சரமஶ்லோகமும் உபாயமாமோவென்னில், ஆம்; நைர்பர்யப்ரதிபாதக மாகையாலே. நைர்பர்யமாவது - பூர்த்தி; இதுக்குமேற் பட உபாயமில்லையிறே.

(ஆகையாலே) என்றது - ஸ்வரூபாநுரூபங்களான உபாயோபேயங்க ளிலபேக்ஷஜநிப்பது ஸ்வரூபஜ்ஞாந பூர்வகமாகையாலே யென்றபடி.

---

பி.—(ததநுகுணமான) - ஸ்வரூபாநுகுணமான,

வ்யா.—ஸ்வரூபயாதாத்ம்யபரமான திருமந்த்ரம் ப்ரதமரஹஸ்யமென்னக் குறையில்லை.

இன்னமும், ப்ரணவத்துக்கு மந்த்ரஶேஷம்

---

எ.—(ஸ்வரூபயாதாத்ம்யபரமான திருமந்த்ரம்ப்ரதமரஹஸ்யமென்னக் குறையில்லை) என்றது - ப்ரதமம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யம் திருமந்த்ரமென்றுசொல்லுகையில் ஸம்ஶயமில்லையென்றபடி.

(அநந்யார்ஹஶேஷத்வம்)இத்யாதி வாக்யங்களுக்கு, "திருமந்த்ரம், ப்ரணவத்தாலே - பகவச்சேஷத்வத்துக்கு விரோதியான அஹங்காரத்தைக் கழித்துக்கொடுக்கும் அநந்யார்ஹஶேஷத்வத்தையும், நமஸ்ஸாலே - ஶரண்யனானவனைக்குறித்துண்டான ரக்ஷணத்துக்கு விரோதியான அர்த்தத்ருஷ்ணையைக்கழித்துக்கொடுக்கும் அநந்யஶரணத்வத்தையும், நாராயணபதத்தாலே – போக்யபூதனானவனைப்பற்றி யுண்டான அநுபவத்துக்கு விரோதியான விஷயாந்தரருசியைக் கழிந்துக்கொடுக்கும் அநந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கும்" என்றும், த்யாஜ்யோபாதேய விஷயங்களுக்கு " అహంకారార్థకామేషు ప్రీతిరద్యైవనశ్యతు । త్వాంప్రపన్నస్యమే దేవవర్ధతాంశ్రీమతీత్వయి" "அஹங்காரார்த்தகாமேஷுப்ரீதிரத்யைவநஶ்யது - த்வாம்ப்ரபந்நஸ்யமே தேவவர்த்ததாம்ஶ்ரீமதித்வயி" (உ௬ரு)என்கிற ஜிதந்தாஸ்தோத்ரஶ்லோகத்தை உதாஹரித்து, "பதத்ரயத்தாலும் ப்ரதிபாதிக்கப்பட்ட அநந்யார்ஹஶேஷத்வாதியான ஸ்வபாவத்ரயத்துக்கு விரோதியான அஹங்காரார்த்தகாமவிஷயமான ப்ரீதியானதுஇப்போதேநசித்துப்போகவேணும், ஶேஷியாய் ஶரண்யனாய் ப்ராப்யனான வுன்னை ஸர்வப்ரகாரத்தாலும் ப்ரபந்நனாயிருக்கிற வெனக்கு அஹங்காராதித்ரயவிஷய ப்ரீதியானது அப்ருதக்ஸித்தஸம்பந்த நிபந்தநமான ஶரீராத்மபாவத்தாலேயுண்டான ஐக்யத்தாலே அஹம்ப்ரத்யயாதிவிஷய மாகையாலும், அநவரதகமநீய ஸத்யகாமத்வாலும்,அஹங்காரார்த்தகாமரூபேண நிற்கும் ஸ்வபாவத்தையுடையனாயிருக்கிற ஸ்ரீமானானவுன்பக்கலிலே நிரவதிகபக்தி ரூபமாய்க்கொண்டு நிற்கவேணும்" என்றும், ஆசார்யவர்யரான நைனாராச்சான்பிள்ளை வ்யாக்யாநம் செய்தருளினாரிறே.

ஹேத்வந்தரத்தாலும் இதினுடைய ப்ராதம்யத்தை யருளிச்செய்கிறார் (இன்னமும்) என்றுதுடங்கி. (இன்னமும்) என்றது - கீழ்ச்சொன்ன ஹேதுக்களன்றிக்கே ஹேத்வந்தரத்தாலுமென்றபடி. (மந்த்ரஶேஷம்) என்கிறது - "ఓమిత్యేకాక్షరంమన్త్రమ్" "ஓமித்யேகாக்ஷரம்மந்த்ரம்" (உ௬௬) என்கிறபடியே, மந்த்ரமென்றுசொல்லப்பட்ட ப்ரணவத்துக்கு ஶேஷமென்றபடி.

---

தொ.—கீழ், ஸ்வரூபயாதாத்ம்ய பரத்தாலே-திருமந்த்ரத்தினுடைய ப்ராதம்யத்தை யருளிச்செய்து, இனி, விவரண விவரணீபாவத்தாலும் - திருமந்த்ரத்தினுடைய ப்ராதம்யத்தை யருளிச்செய்கிறார் (இன்னமும்) இத்யாதியால். (மந்த்ரஶேஷம்) என்றது - நமஃபதமும், நாராயணபதமுமென்றபடி.

---

9.—(மந்த்ரஶேஷம்)-நமஸ்ஸும், நாராயணபதமும்.

வ்யா.—விவரணமானுப்போலே மந்த்ரஶேஷத்துக்கு த்வயம் விவரணமாய், த்வயத்துக்கு † சரமஶ்லோகம்விவரணமாயிறேயிருப்பது. அந்த ந்யாயத்தாலும் இதினுடைய ப்ராதம்யம் ஸித்தமிறே.

† ஆக, இவையெல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியாய்த்து (ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம்) என்று இவரருளிச்செய்தது.

இத்தை (மந்த்ரம்) என்கிறது,

எ.—(ஶேஷம்) என்கிறது-அதுக்கு வ்யாப்யமாகையாலே. இவ்விடத்தில், (மந்த்ரஶேஷம்) என்கிறது-நமஃபதத்தையும், நாராயணபதத்தையும். (விவரண) மாவது-"விவ்ருஞோதீதிவிவரணம்" என்று வ்யுத்பத்தியாய், ப்ரணவத்தில்சொன்ன அர்த்தத்தை விவரிக்கை. அதாவது-அந்யயோகவ்யவச்சேதகமான உகாரம் - உபாயாந்தரஸம்பந்தத்தையும் ஆர்த்தமாக வ்யவச்சேதிக்கையாலே அர்த்தாத் அவனேஉபாயமென்றும், மகாரம் - "நாகிஞ்சித் குர்வதஶ்ஶேஷத்வம்" என்கிறந்யாயத்தாலே - ஶேஷத்வகார்ய மாகிற ப்ராப்யத்துக்கும் அர்த்தாத் ஆஶ்ரயமாயிருக்கையாலே ப்ராப்யத்தைச் சொல்லுகிறதென்றும் கொள்ளவேணும். இப்படி கொள்ளாதபோது, இங்குச்சொல்லுகிற விவரண விவரணிபாவத்துக்குச் சேராது. மந்த்ரஶேஷமான நமஃபத நாராயணபதங்களுக்கு வாக்யத்வயாத்மகமான த்வயம் விவரணமாயிருக்குமென்றபடி. (த்வயத்துக்கு சரமஶ்லோகம் விவரணமா) கையாவது-வாக்யத்வயாத்மகமான த்வயத்துக்கு பூர்வோத்தரார்த்த த்வயாத்மகமான சரமஶ்லோகம் விவரணமாயிருக்குமென்றபடி. (இறே) என்றது - ப்ரஸித்தமென்றபடி. விவரண விவரணீபாவக்ரமத்தை [இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது] என்னுமிடத்திலும், த்வயத்துக் கர்த்தமருளிச்செய்கிறவிடத்திலும், சரமஶ்லோகத்துக் கர்த்தமருளிச்செய்கிற விடத்திலும், இவர்தாமே ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்கிறாராகையால், அந்தஸ்தலங்களிலே கண்டுகொள்வது.

(ஆக) என்றது – இவ்வளவாகவென்றபடி. (இவையெல்லாவற்றையும்) என்றது-பூர்வோக்தங்களான அர்த்தங்கள் எல்லாவற்றையுமென்றபடி.

இவ்வளவாக, [ப்ரதமரஹஸ்யம்] என்றருளிச்செய்ததுக்கு அர்த்தமருளிச்செய்து, இனி, [திருமந்த்ரம்] என்றதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (இத்தை) என்றுதுடங்கி.

தொ.—(† அதுக்கு) என்றது-த்வயத்துக்கென்றபடி.

(அந்தந்யாயத்தாலும்) என்றது - விவரண விவரணீ ந்யாயத்தாலுமென்றபடி.

(†ஆகையால்) என்றது-ஜ்ஞாதவ்யத்வே ப்ராதமிகத்தாலும், விவரணத்வே ப்ரதமமாகையாலு மென்றபடி. (இவையெல்லாவற்றையும்) என்றது - ஜ்ஞாதவ்யத்வே ப்ராதமயத்தையும், விவரணத்வே ப்ராதம்யத்தையு மென்றபடி.

இவ்வஷ்டாக்ஷரிக்கு [மந்த்ரம்] என்கிறபேர் வருகைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (இத்தை) இத்யாதியால்.

† "அதுக்கு" என்றும், "ஆகையால்" என்றும் தொட்டாசார்யரும்பதத்தில் பாடம்.

வ்யா.—“మన్తారం త్రాయత ఇతి మన్త్రః” “மந்தாரம்த்ராயதஇதிமந்த்ரః” (ச) என்கிறபடியே - ஶப்தஶக்தியாலும் அர்த்தபோதகத்தாலும் தன்னை யநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமாகையாலே. ஶப்தஶக்தியாலே ரக்ஷகமாம் ஜபஹோமாதிகளாலே கார்யங்கொள்ளும் உபாஸகர்க்கு; அர்த்தபோதகத்தாலே ரக்ஷகமாம் “ஈஶ்வரனே உபாயோபேயம்” என்றிருக்கும் ப்ரபந்நர்க்கு†.

---

எ.—“[திருமந்த்ரம்] என்று சொன்னது-‘శ్రీమదష్టాక్షరం మన్త్రమభ్యసేద్ద్విజసత్తమ’ ‘ஸ்ரீமதஷ்டாக்ஷரம் மந்த்ரமப்யஸேத்த்விஜஸத்தம’ (உ௬எ) என்னும் ப்ரமாணத்தைத் திருவுள்ளம்பற்றி, பேரருளாளனுக்கு ப்ரதிஷ்டாமந்த்ர மாகையாலே கௌரவித்தருளிச்செய்கிறார்” என்றும் ஸம்ப்ரதாயம்.

(மந்தாரம்)-அநுஸந்தாதாரமென்றபடி. (ஶப்த)த்துக்கு (ஶக்தி)யாவது-பலப்ரதாநஸாமர்த்யம். ஶப்தஶக்தியாலே ஆருக்கு ரக்ஷகமாம்? அர்த்தபோதகத்தாலே ஆருக்கு ரக்ஷகமாம்? என்கிற ஶங்கையிலே, அருளிச்செய்கிறார் (ஶப்தஶக்தியாலே) என்றுதுடங்கி. (ஆதி) ஶப்தத்தாலே-தர்ப்பண ப்ராஹ்மணபோஜந தக்ஷிணைகளைச் சொல்லுகிறது. “చతురన్తాం మహీం భోక్తుం ప్రాప్తుం వామరరాజతామ్। అష్టాక్షరో హ్యుపాయస్స్యాత్ త్రివర్గస్య తు కిం పునః॥ బహవో హి మహాత్మానో మునయస్సనకాదయః। అష్టాక్షరం సమాశ్రిత్య తేజస్వైష్ణవం పదమ్” “சதுரந்தாம் மஹீம்போக்தும்ப்ராப்தும்வாமரராஜதாம்-அஷ்டாக்ஷரோஹ்யுபாயஸ்ஸ்யாத் த்ரிவர்க்கஸ்யதுகிம்புநः-பஹவோஹிமஹாத்மாநோமுநயஸ்ஸநகாதயः-அஷ்டாக்ஷரம்ஸமாஶ்ரித்ய தேஜக்முர்வைஷ்ணவம்பதம்” (உ௬அ) என்னக்கடவதிறே.

அர்த்தபோதக)மாவது-தன்னிடத்திலுண்டான அர்த்தங்களை யறிவிப்பிக்கை. (ஈஶ்வரனே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நாதிகாரிகளுக்கு†) என்றது-“విష్ణూపాయోన్యఫలస్సోధమః పరికీర్తితః। అన్యోపాయో విష్ణుఫలో మధ్యమః పరికీర్తితః॥ మాధవాఙ్ఘ్రిద్వయోపాయో మాధవాఙ్ఘ్రిప్రయోజనః। యస్స ఏవోత్తమః ప్రోక్తో మాధవేనైవ తేన వై” “விஷ்ணூபாயோந்யபலஸ்ஸோதமः பரிகீர்த்திதः - அந்யோபாயோவிஷ்ணுபலः மத்யமः பரிகீர்த்திதः - மாதவாங்க்ரித்வயோபாயோ மாதவாங்க்ரிப்ரயோஜநः - யஸ்ஸஏவோத்தமःப்ரோக்தோ மாதவேநைவதேந வை” (உ௬௯) என்கிறபடியே-“ஈஶ்வரனேஉபாயோபேயம்” என்றிருக்கும் உத்தமாதிகாரிகளான ப்ரபந்நாதிகாரிகளுக்கு அர்த்தபோதகத்தாலே ரக்ஷகமென்றபடி.

---

தொ.—இதினுடையமந்த்ரரக்ஷணக்ரமத்தை விஷயபேதேந வகுத்தருளிச்செய்கிறார் (ஶப்தஶக்தியாலே) இத்யாதியால். (ஜபஹோமாதிகளாலே) என்கிறவிடத்தில், ஆதிஶப்தத்தாலே - தர்ப்பண ப்ராம்ஹணபோஜநங்களைச் சொல்லுகிறது.

---

பி.—“மந்தாரம் த்ராயதே” என்கிறவிடத்திலே, மந்தாஎன்று-மநநசீலன் அநுஸந்தாதாவைச்சொல்லுகிறது.

---

† “ப்ரபந்நாதிகாரிகளுக்கு” என்னும் பாடம் கோஶாந்தரங்களிற்காண்க.

வ்யா.—அர்த்தபோதகத்தாலே ‡ரக்ஷகமாகையாவது - “దేహాసక్తాత్మబుద్ధిర్యదిభవతిపదం సాధువిద్యాత్తృతీయం స్వాతన్త్ర్యాన్ధో యదిస్యాత్ప్రథమమితరశేషత్వధీశ్చేద్ద్వితీయమ్। ఆత్మత్రాణోన్ముఖశ్చేన్నమ ఇతి చ పదం బాన్ధవాభాసలోలశ్శబ్దం నారాయణాఖ్యం విషయచపలధీశ్చేచ్చతుర్థీం ప్రపన్నః” “தேஹாஸக்தாத்மபுத்திர்யதி பவதிபதம் ஸாதுவித்யாத்த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோயதிஸ்யாத் ப்ரதமமிதர ஶேஷத்வதீஶ்சேத்த்விதீயம் - ஆத்மத்ராணோந்முகஶ்சேந்நமஇதிசபதம் பாந்தவாபாஸலோலஶ்ஶப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீஶ்சேச்சதுர்த்திம்ப்ரபந்ந:” (ரு) என்று பட்டரருளிச்செய்தபடியே, தன்னை அநுஸந்திப்பார்க்கு தேஹாத்மாபிமாநமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமும், அபந்துஸங்கமும், விஷயப்ராவண்யமும் மேலிடாதபடிபண்ணி, ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நோக்குகை.

---

எ.—அதுதன்னை ப்ரமாணபூர்வகமாகவருளிச்செய்கிறார் (அர்த்தபோதகத்தாலே) என்றுதுடங்கி. ப்ரமாணத்துக்குத் தாத்பர்யார்த்தமருளிச்செய்கிறார் (தேஹாத்மாபிமாநம்) என்றுதுடங்கி. திருமந்த்ரமானது, ப்ரணவத்தில் த்ருதீயபதமான மகாரத்தாலே - தேஹாத்மாபிமாநமும், லுப்தசதுர்த்தீ விபக்திஸஹிதமாய் ப்ரதமபதமான அகாரத்தாலே - ஸ்வாதந்த்ர்யாபிமாநமும், த்விதீயபதமான் உகாரத்தாலே - அந்யஶேஷத்வமும், நம:பதத்தாலே - ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமும், நாராயணபதத்தாலே - அபந்துஸங்கமும், வ்யக்தசதுர்த்தியாலே - விஷயப்ராவண்யமும், ப்ரபந்நாதிகாரிகளுக்கு மேலிடாதபடிபண்ணி, ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி ரக்ஷிக்கை.

(ஸ்வரூபாநுரூபமாகநடக்கும்படி) பண்ணுகையாவது - ஶேஷத்வ பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கநுரூபமாக † யதேஷ்டவிநியோகார்ஹமாய், யதேஷ்டவிநியுஜ்யமாநனாய், அநந்யபோக்யனாய் நடக்கும்படிபண்ணி நோக்குகை.

ஶ்லோகவ்யாக்யாநம்—ப்ரபந்நனென்கிறான்-ஸ்வஸ்வரூபபரஸ்வரூபாதிகளை உள்ளபடியறியுமவன். இப்படி ப்ரபந்நனானவன், கதாசித் தேஹத்தில் ஆத்ம புத்தியுடையவனானாகில்; ப்ரணவத்தில் த்ருதீயபதமாய், “மநஜ்ஞானே” (உசo) “மதிஹர்ஷே” (உசக) “மநஅவபோதநே” (உசஉ) “மதிபரிமாணே” (உசந)

---

தொ.—அர்த்தபோதகத்தாலே ரக்ஷிக்கும்படியை யருளிச்செய்கிறார் (அர்த்தபோதகத்தாலே) இத்யாதியால்.

(தேஹாத்மாபிமாநமும்) என்றது - தேஹத்திலே ஆத்மாவென்கிற ப்ரதிஸ்யப்ரீதிரூபமான ஜ்ஞாநமென்றபடி. (அபந்துஸங்கமும்) என்றது - தேஹஸம்பந்த விஷயத்தில் ப்ரீதியு மென்றபடி. (விஷயப்ராவண்யமும்) என்றது - க்ஷுத்ரவிஷயப்ராவண்யமு மென்றபடி. (நோக்குகை) என்றது-ரக்ஷிக்கை யென்றபடி.

---

பி.—அர்த்தபோதகத்தாலே ரக்ஷகமாவதுக்கு ப்ரமாணம் (தேஹாஸக்தாத்மபுத்திரித்யாதி.) (அபந்துஸங்கம்) - ஆபாஸபந்துஸங்கம்.

---

‡ “ரக்ஷிக்கையாவது” என்றும் பாடம். † “அநுகுணமாக” என்றும் பாடம்.

எ.—என்கிற தாதுக்களில் நிஷ்பந்நமாய், ஜடத்வாசேதநத்வ ஸ்தூலத்வஹ்ரஸ்வத்வ துக்கரூபத்வ விஶிஷ்டதேஹத்திற்காட்டில் விலக்ஷணமாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபத்வ ஜ்ஞாநகுணகத்வ அணுத்வவிஶிஷ்டப்ரதிபாதகமாய்,ப்ரணவத்தில் த்ருதீயபதமான மகாரார்த்தத்தை நன்றாகவறிந்தானாகில்; தேஹத்தில் ஆத்மபுத்தி நிவ்ருத்தமாய்விடும். ஸ்வாதந்த்ர்யபுத்தியால் திரோஹிதமான பகவச்சேஷத்வஜ்ஞாநத்தை யுடையவனானாகில், ப்ரணவத்தில் முதல்பதமாய்,"அவரக்ஷணகதிஹீம்ஸாதிப்ய:"(உசச)என்கிற தாதுவில் உத்பந்நமாய்,ஸர்வகாரணத்வஸர்வரக்ஷகத்வ ஸர்வஸம்ஹாரத்வ லக்ஷ்மீபதித்வ ஸர்வஶேஷித்வ ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வ விஶிஷ்டமான விஷ்ணுவை ப்ரதிபாதியாநிற்கிற லுப்ததாதர்த்ய சதுர்த்தீவிபக்திகமான அகாரார்த்தத்தை நன்றாகவறிந்தானாகில், தானவனுக்கு ஶேஷமாகச்சொல்லப்படுகிறானாகையாலே ஸ்வஸ்வாதந்த்ர்யப்ரமம் நிவ்ருத்தமாய்விடும்.பகவத்வ்யதிரிக்ததேவதாந்தர ஶேஷத்வபுத்தியுடையவனானாகில்; ப்ரணவத்திலிரண்டாம் பதமாய் அவதாரணார்த்தகமாய் அந்யஶேஷத்வநிவர்த்தகமான உகாராந்விதமான அகாரார்த்தத்தை நன்றாகவறிந்தானாகில், இதரஶேஷத்வப்ரமம் நிவ்ருத்தமாய்விடும். தன்னுடைய ரக்ஷணத்தில் தான் உந்முகனானாகில்; அநந்யஶரணத்வப்ரதிபாதகமான நம: பதார்த்தத்தை நன்றாகவறிந்தானாகில், "ஈஶ்வரனன்றுரக்ஷகன், நானெனக்கு ரக்ஷகன்" என்கிறப்ரமம் நிவ்ருத்தமாய்விடும். ஆபத்யரக்ஷகராய் ஸம்பதிஸர்வஸ்வாபஹாரிகளாய் பந்துக்கள் போலே தோன்றாநிற்கிற தேஹபந்துக்களிடத்தில் சபலனானாகில்; நாராயணஶப்தத்தில் தத்புருஷ ஸமாஸத்தில் கர்மணிவ்யுத்பந்நமான அயநபதத்தாலே எம்பெருமானுடைய நிருபாதிக ஸகலவித பந்துத்வ ப்ராப்யத்வப்ரதிபாதகமான அயநபதத்தை நன்றாக வறிந்தானாகில், ஸோபாதிகபந்துக்களிடத்தில் சாபல்யம் நிவ்ருத்தமாய்விடும். விஹிதநிஷித்தபேதத்தாலே நாநாவாயிருக்கிற ஶப்தாதிவிஷயங்களிலே ஸாபிலாஷபுத்தியையுடையனானாகில்; நாராயண ஶப்தோபரிஸ்த்திதையாய் குணநுபவஜநிதப்ரீதிகாரிதாஶேஷாவஸ்த்தோசிதாஶேஷ ஶேஷதைகரதிரூப நித்யநிரதிஶயபோக்ய பகவத்கைங்கர்யப்ரார்த்தநா ப்ரகாஶகமாயிருக்கிற வ்யக்தசதுர்த்த்யர்த்தத்தை நன்றாகவறிந்தானாகில், சதுர்த்தியில் சொல்லப்படுகிற கைங்கர்யம் எம்பெருமானுக்கே! எனக்கன்று என்று ஸ்வபோக்த்ருத்வ புத்திநிவ்ருத்தமாய், ஸ்வார்த்ததயா அத்யந்தஸ்வரூபவிருத்தமான விஷயாந்தர நிவ்ருத்தியுண்டாம். விஹிதவிஷயப்ராவண்யமும் ப்ரபந்நாதிகாரிக்கு ஸ்வரூபமன்று.

கிந்து, அநுமதமாயிருக்கும். "ఋతావుపేయాత్" "ருதாவுபேயாத்" (உசரு)என்னுமதினுங் காட்டில் ததோப்யதிகவிஷயலாபத்தில் கீழ்ச்சொன்னது நிவ்ருத்தமாய்விடும்.

அத ஏவ, மநு: "నమాంసభక్షణేదోషో నమద్యేనచమైథునే। ప్రవృత్తిరేషాభూతానాం నివృత్తిస్తుమహాఫలా" "நமாம்ஸபக்ஷணேதோஷோ நமத்யேநசமைதுநே-

எ.—ப்ரவ்ருத்திரோஷாபூதாநாம் நிவ்ருத்திஸ்து மஹாபலா" (உசகூ) இதி. ஆகையாலே, அநந்யபோக்யத்வஸ்வரூபவிருத்தமான விஷயாந்தரப்ராவண்யம் ப்ரபந்நனுக்கு த்யாஜ்யமென்றதாய்த்து.

"ఋతాద్య తే[illegible]" "ருதாத்ருதேப்ருணஹா" (உசள)இத்யாதி வசநம் † ஸ்வதார விஷயம்.

ப்ரபந்நாதிகாரிக்கு காதாசித்கமாய் வரும் ஸ்வதாரப்ரவ்ருத்தியும் அபசாரமாய், விஶேஷப்ரவ்ருத்தி யுண்டாகில் ஸ்வரூபநாஶகமாய்விடும். எங்ஙனே யென்னில்; ப்ரபந்நனுக்கு விஹிதவிஷயநிவ்ருத்தி தன்னேற்றம்; ப்ரதிகூல விஷயஸ்பர்ஶம் விஷஸ்பர்ஶம்போலே; அநுகூலவிஷயஸ்பர்ஶம் விஷமிஶ்ரபோஜநம்போலே. ப்ரதிகூல விஷயமாவது - லோக விருத்தமுமாய் நரகஹேதுவுமாயிருந்துள்ள நிஷித்த விஷயம்; தத்ஸ்பர்ஶம் விஷஸ்பர்ஶம் போலே யென்றது - ப்ராணபாதகத்வேந ப்ரஸித்தமாகையாலே ப்ராதிகூல்யம் தோற்றநின்று ப்ராணனை முடிக்கிற விஷஸ்பர்ஶம்போலே ஶாஸ்த்ரநிஷித்ததயா ப்ரஸித்தமாகையாலே ப்ராதிகூல்யமென்று தோற்றியிருந்து ஸ்வரூபநாஶத்தைப்பண்ணுகையாலே. அநுகூலவிஷயமாவது - லோகவிருத்தமுமன்றிக்கே, நரகஹேதுவுமன்றிக்கே, விஶிஷ்டவேஷாநுகூலமாயிருந்துள்ள விஹிதவிஷயம்; தத்ஸ்பர்ஶம் விஷமிஶ்ரபோஜநம்போலே யென்றது - விஷமிஶ்ராந்ந போஜநம் அதறியாதவனுக்கு அநுகூலமென்று தோற்றவிருந்து அவன்ப்ராணனை முடித்துவிடுமாப்போலே, ஶாஸ்த்ரவிஹிததயா ப்ரஸித்தமாகையாலே அநுகூலம்போலே தோற்றவிருந்து ஆத்மாவினுடைய அநந்யபோக்யத்வரூபமான ஸ்வரூபத்தை நஶிப்பிக்கையாலே.

"விஷயங்கள் ஸ்வரூபநாஶகம்" என்றதுக்கு ப்ரமாணம்:—"విషస్య విషయాణాంచ దూరమత్యన్తమన్తరమ్। ఉపభుక్తం విషం హన్తి విషయాస్స్మరణాదపి" "விஷஸ்யவிஷயாணாஞ்சதூரமத்யந்தமந்த்ரம் - உபபுக்தம் விஷம் ஹந்தி விஷயாஸ்ஸ்மரணாதபி" (உசஅ). இப்படி விநாஶகரமான விஷயங்களிலே ப்ரவணனாய் ஸுகிக்கநினைக்கை விபரீதஜ்ஞாநகார்ய மென்னுமிடத்தில்ப்ரமாணம்:- "ఆస్వాద్యదహనజ్వాలాం ఉదన్యాశమనం యథా। తథా విషయసంసర్గాత్సుఖమిచ్ఛాశరీరిణః॥ విషయాణాంసంసర్గాద్యోభిభర్తిసుఖంనరః। నృత్యత్ఫణిజనచ్ఛాయాం విశ్రమాయాశ్రయేత్సః" "ஆஸ்வாத்யதஹநஜ்வாலாம் உதந்யாஶமநம்யதா - ததாவிஷயஸம்ஸர்க்காத்ஸுகமிச்சாஶரீரிண:-விஷயாணாந்துஸம்ஸர்க்காத்யோபிபர்த்திஸுகந்நர:-ந்ருத்யத:பணிநஶ்சாயாம் விஶ்ரமாயாஶ்ரயேதஸ:" (உசகூ) "தண்ணீர்க்கு விடாய்ப்பட்டவன் விபரீதஜ்ஞாநத்தாலே தாபஹேதுவான அக்நிஜ்வாலையை விழுங்கி தான் விடாய்தீர நினைக்குமாப்போலேயும், ஆதித்யகிரணங்களாலே அதிமாத்ரதப்தனானவன் அந்ததாபத்தை ஆற்றுகைக்காக நிழல் என்கிற மாத்ரத்தைக்கொண்டு ஆகாம்யநர்த்தத்தை நிரூபியாதே, அத்யந்தகுபிதமாய்ப் படத்தைவிரித்து நின்றாடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாப்போலேயும் இருப்பதொன்றன்றோ" என்று பாதகமான விஷயங்களை

† "ஸ்வதாரவிஷயம் என்று சில ஶ்ரீகோஶங்கள்.

மூ.—௩.—திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப்

---

வ்யா.—௩.—இனிமேல் இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை விஸ்தரேண ப்ரதிபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதினுடைய அநுஸந்தாந க்ரமகதநமுகத்தாலே இதின்வைபவத்தை யருளிச்செய்கிறார்,

(திருமந்த்ரத்தினுடைய) என்று தொடங்கி. திருமந்த்ரத்துக்குச் சீர்மையாவது- "ఋచో యజూంషి సామాని తథైవాథర్వణాని చ। సర్వమష్టాక్షరాన్తస్థం యచ్చాన్యదపి వాఙ్మయమ్" "ருசோயஜூம்ஷிஸாமாநி ததைவாதர்வணாநிச - ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்யச்சாந்யதபிவாங்மயம்" (௬) என்கிறபடியே ஸகலவேத ஸங்க்ரஹமாய், "மற்றெல்லாம்பேசிலும்" (எ) என்கிறபடியே,

---

எ.—ஸூகாவஹமாகப் ரமித்து, அவற்றில் ப்ரவணனாய் அவற்றை அநுபவித்து ஸூகிக்கினைக்கை என்று ஶாஸ்த்ரம் சொல்லிற்றிறே.

இஶ்ஶ்லோகத்தாலே - (ததநுகுணமான த்யாஜ்யோபாதேயங்கள்) என்கிறவிடத்தில், த்யாஜ்யாம்ஶம் ஸூசிதமாய்த்தாகையாலே, உபாதேயாம்ஶத்துக்கு "ఈశానాం జగతామ్" "ஈஶாநாம்ஜகதாம்" (உ௰) என்கிற ஶ்லோகம் உதாஹரணமாகக்கடவது.

௩.—இப்படி [ப்ரதமாஹஸ்யம் திருமந்த்ரம்] என்கிறவாக்யத்துக்கு அர்த்தமருளிச்செய்து, மேல்வாக்யத்துக்கும் இதுக்கும் ஸங்கதி யருளிச்செய்கிறார் (இனிமேல்) என்றுதொடங்கி.

அர்த்தமருளிச்செய்கிறார் (திருமந்த்ரத்துக்குச் சீர்மையாவது) என்றுதொடங்கி. [சீர்மை] யாவது - (கௌரவம்.) கௌரவவிஷயத்தில் ப்ரமாணோபந்யாஸம் செய்தருளுகிறார் ("ருசோயஜூம்ஷிஸாமாநிததைவாதர்வணாநிச - ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம் யச்சாந்யதபிவாங்மயம்") என்று. ருக்குக்களும் யஜூஸ்ஸூக்களும் ஸாமங்களும் அப்படியே அதர்வணங்களும் மற்றுமுண்டான ஶப்தவிகாரங்களும் இவ்வஷ்டாக்ஷரத்துக்குள்ளே யிருக்கிறன. (ஸகலவேதஸங்க்ரஹமாய்) என்றது - லௌகிகஸகலஶப்தங்களுக்கும் வேதம்காரணமாய் அந்தவேதந்தனக்கும் ப்ரணவம்காரணமானவழியாலே.

("மற்றெல்லாம்பேசிலும்" என்கிறபடியே) என்றது-(மற்றெல்லாம்)- அநேகார்த்தங்களையெல்லாம், (பேசிலும்) - சொல்லிற்றேயாகிலும் என்றர்த்தம். "மற்றெல்லாம் பேசிலும்" என்கிற வாக்யார்த்தத்தின் ப்ரகாரமென்றபடி.

---

தொ.-௩.—மேலுக்கவதாரிகை (இனிமேலித்யாதி.) இப்போது இம்மந்த்ரவைபவத்தைப் பலபடியாகவருளிச்செய்கிறது, இம்மந்த்ரந்தன்னில் சேதநருக்கு விஶ்வாஸ முண்டாகைக்காக.

(ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்) என்றது-வேதசதுஷ்டயமும், ததுப்ப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களு மெல்லாம் திருமந்த்ரத்துக்கு வாச்யார்த்தமான அர்த்தபஞ்சகப்ரதிபாதகபரமென்றபடி. (யச்சாந்யதபிவாங்மயம்) என்றது-ஸ்ம்ருத்யாதிகளை.

---

பி.—(கதந)மாவது - சொல்லுகை.

மூ.—போரும்படி ப்ரேமத்தோடே பேணி யநுஸந்திக்கவேணும்.

---

வ்யா.—ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகமாய் "మన్త్రాణాం పరమో మన్త్రో గుహ్యానాం గుహ్యముత్తమమ్ । పవిత్రంచ పవిత్రాణాం మూలమన్త్రస్సనాతనః" "மந்த்ராணாம் பரமோமந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம் - பவித்ரஞ்சபவித்ராணாம் மூலமந்த்ரஸ்ஸநாதநः" (அ) என்கிறபடியே மந்த்ரங்களில் வைத்துக்கொண்டு பரமமான மந்த்ரமாய், குஹ்யங்களில் வைத்துக்கொண்டு உத்தமமான குஹ்யமாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கிற கௌரவம். (சீர்மைக்குப்போரும்படி) என்றது - தகும்படியென்கை. (ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கை) யாவது - இத்தையநுஸந்திக்குமளவில் ஶுஷ்கஹ்ருதயனாயிருந் தநுஸந்திக்கையன்றிக்கே, இதின் வைலக்ஷண்ய ஜ்ஞாநமடியாக இதின்பக்கல் தனக்குண்டான ப்ரேமத்தோடே, * குஹ்யாநாம் குஹ்யமானவிது அநதிகாரிகள் செவிப்படாதபடி,

---

எ.—(ஜ்ஞாதவ்யமான ஸகலார்த்த) ங்களாவன - அர்த்தபஞ்சகம்; தத்ப்ரதிபாதகமா யென்றபடி.

(ஶுஷ்கஹ்ருதயனாய்) என்றது – "మనసో యద్దయార్ద్రత్వం తత్ప్రేమేతి నిగద్యతే" "மநஸோயத்தயார்த்ரத்வம் தத்ப்ரேமேதிநிகத்யதே" (உருக)என்கிறபடியே, தயார்த்ரஹ்ருதயனாயன்றிக்கே யிருக்கை. (இதின் வைலக்ஷண்யஜ்ஞாநமடியாக) என்றது - இம்மந்த்ரத்தினுடைய ஸகலவேதஸங்க்ரஹத்வ ஜ்ஞாதவ்ய ஸகலார்த்தப்ரதிபாதகத்வ பரமமந்த்ரத்வ உத்தமகுஹ்யத்வ பரமபவித்ரத்வரூப வைலக்ஷண்ய ஜ்ஞாநபூர்வகமாக வென்றபடி. (ப்ரேமத்தோடே) என்றது - விஶ்வாஸத்தோடே யென்றபடி.

(அநதிகாரிகள் செவிப்படாதபடி) என்றது - (அநதிகாரிக) ளாகிறார் - முமுக்ஷுக்களாகாதவர்கள், அவர்களுடைய செவியில் யாத்ருச்சிகமாகவும் கேளாதபடி யென்றபடி. "ఇదం తే నాతపస్కాయ నాభక్తాయ కదాచన । నచాశుశ్రూషవే వాచ్యం నచ మాం యోఽభ్యసూయతి" "இதந்தேநாதபஸ்காய நாபக்தாய கதாசந - நசாஶுஶ்ரூஷவேவாச்யம் நசமாம்யோப்யஸூயதி" (உருஉ)என்று சொல்லப்படுகிற அநதிகாரிகள் செவியில்படாதபடி என்னவுமாம். ஶ்லோகார்த்தः—" இதம் - இந்தரஹஸ்யமானது, அதபஸ்காய- அநநுஷ்டிதமான தபஸ்ஸையுடையவனுக்கும், தே - உன்னாலே, நவாச்யம்; நாபக்தாய - ஆசார்யவிஷயத்திலும் மந்த்ரவிஷயத்திலும் தத்வாச்யனான பகவத்விஷயத்திலும் ப்ரேமஶூந்யனுக்கும், கதாசந நவாச்யம்-ஒருக்காலும் சொல்லக்கூடாது; அஶுஶ்ரூஷவே - ஶுஶ்ரூஷைபண்ணாதவனுக்கும், நசவாச்யம்; யः - யாவனொருவன், மாம்ப்ரதி அப்யஸூயதி - என்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைச்சொல்லுமளவில் தோஷத்தை ஆரோபிக்கிறான்,

---

தொ.—(ஶுஷ்கஹ்ருதயனாய்) என்றது - ப்ரேமஶூந்யனாயென்றபடி. (இதின் வைலக்ஷண்யம்) என்றது-ஸகலஶாஸ்த்ரஸங்க்ரஹமா யிருக்கையும், ஜ்ஞாதவ்யஸகலார்த்த ப்ரதிபாதகமாயிருக்கையும், பரமகுஹ்யம் முதலானவை. (இதின்பக்கல்) என்றது - திருமந்த்ரத்தினிடத்திலே யென்றபடி.

வ்யா.—"మన్త్రం యత్నేన గోపయేత్" "மந்த்ரம் யத்நேந கோபயேத்" (௯) என்கிறபடியே பேணிக்கொண்டநுஸந்திக்கையென்கை. இப்படி யநுஸந்திக்கவேணுமென்கையாலே - ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கலாகாதென்கிற நியமம் தோற்றுகிறது.

---

ஏ.—ஸர்வகுணஸம்பந்நனுகிலும், அவனுக்கும், நசவாச்யம்-சொல்லப்படாது" என்று பகவான் தானே யருளிச்செய்தானிறே.

(பேணிக்கொண்டு) என்றது - ரக்ஷித்துக்கொண்டென்றபடி.

"గురుం ప్రకాశయేద్ధీమాన్ మన్త్రం యత్నేన గోపయేత్ । అప్రకాశప్రకాశాభ్యాం క్షీయేతే సమ్పదాయుషీ" "குரும்ப்ரகாஶயேத்தீமாந் மந்த்ரம்யத்நேநகோபயேத்-அப்ரகாஶப்ரகாஶாப்யாம்க்ஷீயேதேஸம்பதாயுஷீ" (௨௫௩). தீமானனவன், "గుశబ్దస్త్వన్ధకారస్స్యాద్రుశబ్దస్తన్నిరోధకః। అన్ధకారనిరోధిత్వాద్గురురిత్యభిధీయతే" "குஶப்தஸ்த்வந்தகாரஸ்யாத் ருஶப்தஸ்தந்நிரோதகः - அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே" (௨௫௪) என்கிறபடியே - அஜ்ஞாநாந்தகார நிவர்த்தகனை ஆசார்யனை, ப்ரகாஶயேத் - ஸர்வஶ்ராவ்யனுகப் பண்ணக்கடவன்; "సర్వశ్రావ్యం ప్రకాశం స్యాత్" "ஸர்வஶ்ராவ்யம் ப்ரகாஶம்ஸ்யாத்" (௨௫௫) என்னக்கடவதிறே; மந்த்ரம் - "మన్తారమ్-అనుసన్ధాతారమ్, త్రాయత ఇతి-మన్త్రమ్" "மந்தாரம் - அநுஸந்தாதாரம், த்ராயத இதி - மந்த்ரம்" என்கிறபடியே - தன்னை யநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமான மந்த்ரத்தை, யத்நேந - ப்ரயத்நேந, கோபயேத் - அநதிகாரிகள் செவிப்படாதபடி ரக்ஷிக்கக்கடவன்: அப்ரகாஶப்ரகாஶாப்யாம் - ஆசார்யனைப்ரகாஶம் பண்ணுததினுலும், மந்த்ரத்தை ப்ரகாஶமாகப் பண்ணுகையாலும்; ஸம்பதாயுஷீ - ஸம்பத்தும் ஆயுஸ்ஸும், க்ஷீயேதே - க்ஷயியாநிற்கும். ஸம்பத்தாவது - பகவத்பக்தி; "భగవద్భక్తిరేవాత్ర ప్రపన్నానాం మహద్ధనమ్" "பகவத்பக்திரேவாத்ர ப்ரபந்நாநாம் மஹத்தநம்" (௨௫௬) என்னக்கடவதிறே ஆயுஸ்ஸாவது - ஶேஷத்வஜ்ஞாநம். இரண்டாலும் இரண்டும் நசித்துப்போமென்று கருத்து.

(நியமம்தோற்றுகிறது) என்கையாலே - நியமாதிக்ரமம் பண்ணினுகில் ஸந்மார்க்காத் ப்ரச்யுதனுவான் என்று அபிப்ராயம். "ఆత్మపూజార్థమర్థార్థం దమ్భార్థమపి నష్టధీః। అయోగ్యేషు వదన్ శాస్త్రం సన్మార్గాత్ప్రచ్యుతో భవేత్" "ஆத்மபூஜார்த்தமர்த்தார்த்தம் டம்பார்த்கமபிநஷ்டதீः- அயோக்யேஷுவதந் ஶாஸ்த்ரம் ஸந்மார்க்காத் ப்ரச்யுதோபவேத்" (௨௫௭) என்னக்கடவதிறே. (நஷ்டதீः) என்றது - புத்தியில்லாதவனென்றபடி.

" (திருமந்த்ரத்தினுடைய) - ஶப்தஶக்தியாலும் அர்த்தபோதகத்தாலும் தன்னையநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமான திருமந்த்ரத்தினுடைய, [சீர்மைக்கு] - ஸகலவேதஸங்க்ரஹத்வ ஜ்ஞாதவ்யஸகலார்த்தப்ரதிபாதகத்வாதி கௌரவத்துக்கு, [போரும்படி] - தகும்படி, [ப்ரேமத்தோடே]-

---

தொ.--(பேணிக்கொண்டு) என்றது-ரக்ஷித்துக்கொண்டென்றபடி. அசலறியாதபடி யென்றபடி.

(வேணும்) என்கிறவிதின் தாத்பர்யத்தையருளிச்செய்கிறார் (இப்படி) இத்யாதியால்.

---

பி.—(பேணிக்கொண்டு) - ஆதரித்துக்கொண்டு.

மூ.—ச.—மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும்,

---

வ்யா.—ச.—இப்படி, இதின்பக்கல் ப்ரேமமுண்டாகவே இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாமோவென்ன வருளிச்செய்கிறார்,

(மந்த்ரத்திலும்) என்றுதுடங்கி. அதாவது - ஜ்ஞாதவ்யார்த்த ஜ்ஞாபகமான இம்மந்த்ரந்தன்னிலும், ஶேஷித்வஶரண்யத்வப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயயுக்ததயா இம்மந்த்ரத்துக்கு வாச்யவஸ்துவாயிருக்கிற ஸர்வேஶ்வரன் விஷயத்திலும்,

---

ஏ.—ப்ரீதியோடே, [பேணி] - அநதிகாரிகள் செவிப்படாதபடி ரக்ஷித்துக்கொண்டு, அநுஸந்தாநம்பண்ணவேணும்" என்று மூலார்த்தம்.

ச.—மேல்வாக்யத்துக்கு அவதாரிகை (இப்படி) என்றுதுடங்கி. இப்படி - பூர்வோக்தப்ரகாரம். இவனுக்கு - வைலக்ஷண்ய ஜ்ஞாநபூர்வகமாக ப்ரேமமுடைய அநுஸந்தாதாவுக்கு. †கார்யகரமாமோ? என்று கேட்க;[மந்த்ரத்திலும்] என்றுதுடங்கி-(அருளிச்செய்கிறார்) என்று அந்வயம்.

(அதாவது) என்றது - [கார்யகரமாவது] என்று சொன்னதாவதென்றபடி. (ஜ்ஞாதவ்யார்த்தஜ்ஞாபகமான) என்றது—ஜ்ஞாதவ்யார்த்தமாவது- அர்த்தபஞ்சகம்; (ஜ்ஞாபகமான)-ப்ரதிபாதகமான வென்றபடி. (இம்மந்த்ரந்தன்னிலும்) - இந்ததிருமந்த்ரத்திலும்.

(ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்கள்) என்கிறவிடத்தில், ஶேஷித்வமாவது - ஶேஷபூதராலுண்டான அதிஶயத்துக்கு ஆஶ்ரயமாயிருக்கை; ஶரண்யத்வமாவது - அஶரண்யரானவர்களுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் ரக்ஷகனாயிருக்கை; ப்ராப்யத்வமாவது - பரமபுருஷார்த்ததயா அபிமதமாயிருக்கை. (ஆகாரத்ரயயுக்ததயா) - ஆகாரத்ரயத்தோடே கூடியிருக்கையாலே. (இம்மந்த்ரத்துக்கு) - பதத்ரயாத்மகமான இந்தத்திருமந்த்ரத்துக்கு. ப்ரணவத்தில் ஶேஷித்வேநவும், நமஃபதத்தில் ஶரண்யத்வேநவும் நாராயணபதத்தில் கர்மணிவ்யுத்பத்தியாலே ப்ராப்யத்வேநவும் வாச்யவஸ்துவாயிருக்கிற ஈஶ்வரவிஷயத்திலு மென்றபடி. இதில் - அநந்யார்ஹஶேஷத்வ அநந்யஶரணத்வ அநந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே சேதநஸ்வரூபயாதாத்ம்யபரமாயிருக்குமோபாதி, அநந்யார்ஹஶேஷித்வ அநந்யார்ஹஶரண்யத்வ அநந்யார்ஹப்ராப்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே, இம்மந்த்ரம் ஈஶ்வரஸ்வரூபயாதாத்ம்ய பரமாய்த்து. "శ్రీమాన్ స్వతన్త్రస్స్వామీ చ సర్వజ్ఞో న్యాసపేక్షయా । నిరపేక్షస్స్వతన్త్రత్వం స్వామ్యం చాన్యస్య సర్వచిత్ ॥ ఆత్మస్వపరరక్షయాం పరాధీనే మజన్తుషు। నిరపేక్షశరణ్యత్వం నియతం సమపతౌ, ఇహ సన్నిహితశ్రీమాన్ నారాయణ సమాధికదరిద్రః । శరణం సర్వశరీరిప్రాప్యస్సస్వశ్చ [illegible]

---

தொ.-ச.—மேலுக்கவதாரிகை (இப்படி) இத்யாதி. (இப்படி) என்றது. கீழ்ச்சொன்னபடி யென்றபடி. (இம்மந்த்ரம் இவனுக்கு) என்றது - இந்தத் திருமந்த்ரம் இந்தமுமுக்ஷுவுக் கென்றபடி. (கார்யகரமாமோ) என்றது - மோக்ஷப்ரதமாமோ வென்றபடி.

(ஜ்ஞாதவ்யார்த்தஜ்ஞாபகமான) என்றது-அர்த்தபஞ்சக ஜ்ஞாபகமான வென்றபடி.

---

பி.-ச.— (ஆகாரத்ரயம்) - ஈஶ்வரனுடைய ஶேஷித்வாத்யாகாரத்ரயம்.

---

† "ரக்ஷகமாமோ" என்றும் காண்கிறது.

வ்யா.— "తన్మన్త్రం బ్రాహ్మణాధీనమ్" "தந்மந்த்ரம் ப்ராம்ஹணாதீநம்" (கo) என்கிறபடியே - இம்மந்த்ரம் ஆசார்யாதீநமா யிருப்பதொன்ருகையாலே, இத்தை யதாப்ரதிபத்தி யுக்தனுய்க்கொண்டு

---

எ.—ధుభిర్భావ్యః" "ஸ்ரீமாந்ஸ்வதந்த்ரஸ்வாமீச ஸர்வத்ராந்யாநபேக்ஷயா-நிரபேக்ஷஸ்வதந்த்ரத்வம் ஸ்வாம்யம்சாந்யஸ்யநக்வசித்-ஆத்மஸ்வபரரக்ஷாயாம் பராதீநேஷுஜந்துஷு - நிரபேக்ஷஶரண்யத்வம் நியதம்கமலாபதௌ, இஹஸங்க்ரஹத ஸ்ரீமாந்கோப்தாஶேஷீஸமாதிகதரித்ர - ஶரணம்ஸர்வஶரீரீப்ராப்யஸ்ஸேவ்யஶ்சஸாதுபிர்பாவ்ய:" (உருஅ) என்கிறபடியே- ஶேஷித்வாதிகள் அவனுக்கே அர்ஹமாயிருக்கும், மற்ருெருவர்க்கு அர்ஹமன்றென்றபடி.

(ப்ராம்ஹணுதீநம்) என்றதுக்கு - (ஆசார்யாதீநம்) என்றருளிச்செய்தது, "ப்ரம்ஹஜ்ஞாநேப்ராம்ஹண:" "ப்ரம்ஹஜ்ஞும்ப்ராம்ஹணம்விது:" (உருகூ) என்று - "ப்ரம்ஹத்தையறிந்தவனே ப்ராம்ஹணனென்றறிவர்கள்" என்று, ப்ராம்ஹணஶப்தம் ப்ரம்ஹஜ்ஞனை ஆசார்யனைச் சொல்லுகையாலே."దైవాధీనంజగత్సర్వం మన్త్రాధీనంతు దైవతమ్। తన్మన్త్రం బ్రాహ్మణాధీనం తస్మాద్బ్రాహ్మణదైవతమ్" "தைவாதீநம்ஜகத்ஸர்வம் மந்த்ராதீநந்துதைவதம் - தந்மந்த்ரம்ப்ராம்ஹணுதீநம் தஸ்மாத்ப்ராம்ஹணதைவதம்" (உசூo) "జన్మనా జాయతే శూద్రః కర్మణా జాయతే ద్విజః। వేదపాఠేన విప్రశ్చ బ్రహ్మజ్ఞానేన బ్రాహ్మణః" "ஜந்மநாஜாயதேஶூத்ர: கர்மணுஜாயதேத்விஜ: - வேதபாடேநவிப்ரஶ்ச ப்ரம்ஹஜ்ஞாநேநப்ராம்ஹண:."

(இத்தை) என்றது - ஆசார்யாதீநமான இம்மந்த்ரத்தை யென்றபடி. (யதாப்ரதிபத்தியுக்தனுய்க்கொண்டு) என்றது - உபதேஷ்டாவான தன்னை ஆசார்யனென்று நினைக்கையும், உபதேஶபாத்ரனைத் தனக்குஶிஷ்யனென்று நினைக்கையும், உபதேஶத்துக்கு அர்த்தஶுஶ்ருஷாதி த்ருஷ்ட ப்ரயோஜநத்தை பலமாகநினைக்கையுமாகிற விப்ரதிபத்தியன்றிக்கே, உபதேஷ்டாவான தன்னை உபதேஶஸமயத்தில் தன்னுடைய ஆசார்யனையே இவனுக்கு உபதேஷ்டாவாகவும், தான் அங்குத்தைக்குக் கரணபூதனுகவும், உபதேஶபாத்ரனை ஶிஷ்யனையும் தன்னேபாதி தன்னுசார்யனுக்கு ஶிஷ்யனுக ப்ரதிபத்தி பண்ணுகையும், பரோபதேஶம்பண்ணுமளவில் இவ்வாத்மா திருந்தி "ஆளுமாளார்" (உசூக) என்கிற விஷயத்துக்கு மங்களாஶாஸநத்துக்கு ஆளாகவேணும் என்னுமதுவேபலமாக உபதேஶிக்கையும்ஆகிற யதாப்ரதிபத்தியுக்தனுய்க்கொண்டென்றபடி. "బహవో గురవస్సన్తి శిష్యవిత్తాపహారకాః। దుర్లభోఽస్మిన్ గురుర్లోకే శిష్యహృత్తాపహారకః" "பஹவோகுரவஸ்ஸந்திஶிஷ்யவித்தாபஹாரகா: - துர்லபோஸ்மிந்குருர்லோகே ஶிஷ்யஹ்ருத்தாபஹாரக:" (உசூஉ).

---

தொ.—ப்ராம்ஹணஶப்தம் ஆசார்யனைக்காட்டுமோ வென்னில்;" ப்ரம்ஹணயதீதி - ப்ராம்ஹண:" என்கிற வ்யுத்பத்தியாலே, "గరీయాన్ బ్రహ్మదః పితా" "கரீயாந் ப்ரம்ஹத:பிதா" என்கிறபடியே - ப்ரம்ஹஜ்ஞாநஜநகனுன ஆசார்யனைக்காட்டும்.

(யதாப்ரதிபத்தி) என்றது - ஶாஸ்த்ரோக்தமான ப்ரதிபத்தியென்றபடி.

மூ.—மந்த்ரப்ரதனை ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டா ளுல் கார்யகரமாவது.

---

வ்யா.—தனக்கு உபகரித்த ஆசார்யவிஷயத்திலும், தத்தத்வைலக்ஷண் யாநுரூபமாக ப்ரேமமதிசயேநவுண்டானுல் இவனுக்குக் கார்யகரமாவதெ ன்கை. "మన్త్రే తద్దేవతాయాం చ తథా మన్త్రప్రదే గురౌ। త్రిషు భక్తిస్సదా కార్యా సా హి ప్రథమసాధనమ్" "மந்த்ரேதத்

---

ஏ.—(தனக்குபகரித்த)என்றது-"ఆత్మనో హ్యతినీచస్య యోగిధ్యేయపదార్హతామ్। కృపయైవోపకర్తారమాచార్యం సంస్మరేదిహ" "ஆத்மநோஹ்யதிநீசஸ்யயோகித்யேயபதார்ஹதாம்-க்ருபயைவோபகர்த்தாரமாசார்யம் ஸம்ஸ்மரேதிஹ" (உகூரு) என்கிறபடியே, நிர்ஹேதுகக்ருபையாலே, அதிநீசனுன தனக்கு உபகரித்த வென்றபடி.

(ஆசார்யவிஷயத்திலும்) என்றது- "అస్థానస్థగ్రహణవశగో యాంతి రజ్జేశయద్వ త్వజ్ఞుకార్యాంకుహరసహితో నీయతే నావికేన। భుక్త్వా భోగానవిదితనృపస్సేవకస్యార్భకాదిస్స్వ త్వం ప్రాప్తో ప్రభవతి తథా దేశికో మే దయాళుః" "அஸ்தாநஸ்தக்ரஹணவசகோயாதி ரங்கேசயத்வத்பங்குர்நௌகா குஹரஸஹிதோநீயதேநாவிகேந - புங்க்தே போகாநவிதிதந்ருப: ஸேவகஸ்யார்ப்பகாதி: த்வத்ஸம்ப்ராப்தௌப்ரபவதி ததாதேசிகோமேதயாளு:" (உகூச) என்கிறபடியே, பகவத்ப்ராப்தியைப் பண்ணிக்கொடுக்க வல்லனுன ஆசார்யவிஷயத்திலுமென்றபடி.

(தத்தத்வைலக்ஷண்யாநுரூபமாக) என்கிறவிடத்தில், மந்த்ரத்துக்கு வைலக்ஷண்யமாவது - ஸகலவேதஸங்க்ரஹத்வாதிகள்; ஈஸ்வரனுக்கு வை லக்ஷண்யமாவது - ஸர்வசேஷித்வாதிகள்; ஆசார்யனுக்கு வைலக்ஷண்ய மாவது - (உபதேஷ்டாவானதன்னே) [பக்கம்-அஎ-வரி-உரு] என்றுதுட ங்கி (யதாப்ரதிபத்தியுக்தனுய்) என்னுமளவாகச் சொன்னதெல்லாம். அத வா, மந்த்ரத்துக்கு வைலக்ஷண்யமாவது - உபயவிபூதிநிர்வாஹகனுன ஈஸ் வரனைத் தனக்கு விதேயமாம்படி பண்ணிக்கொண்டிருக்கை; ஈஸ்வரனுக்கு வைலக்ஷண்யமாவது - உபயவிபூதியும் தனக்கு விதேயமாம்படி பண்ணிக் கொண்டிருக்கை; ஆசார்யனுக்கு வைலக்ஷண்யமாவது - உபயவிபூதியும் வி தேயமாம்படி பண்ணிக்கொண்டிருக்கு மீஸ்வரனேயுங்கூட தனக்குவிதேய மாம்படிபண்ணிக்கொண்டிருக்கிற மந்த்ரத்தையும் தனக்குவிதேயமாம்படி பண்ணிக்கொண்டிருக்கையென்னவுமாம்.

உக்தார்த்தத்தில் ப்ரமாணம்காட்டுகிருர் (மந்த்ரேதத்தேவதாயாஞ்சே தி) மந்த்ரத்தின் பக்கலிலும், அதினுடைய தேவதையின்பக்கலிலும், மந்த்ர ப்ரதனை குருவின்பக்கலிலும், மூவர்பக்கலிலும், தத்தத்வைலக்ஷண்யாநு குணமாக பக்தி யெப்போதும் பண்ணப்படும்; இதிறே முதலானஸாதநம்.

---

தா.—(தத்தத் வைலக்ஷண்யம்) என்றது - ஸகலவேதஸங்க்ரஹத்வா தி வைலக்ஷண்யமும், சேஷித்வாதி வைலக்ஷண்யமும், சாஸ்த்ரோக்தப்ரதி பத்தியுடையராயிருக்கையாகிற வைலக்ஷண்யமுமென்றபடி. உக்தார்த்த த்துக்கு ப்ரமாணங்காட்டுகிருர் (மந்த்ரே) இத்யாதியாலே. "மந்த்ரே தத் தேவதாயாம் - ததாமந்த்ரப்ரதேகுரௌ - ச - த்ரிஷுபக்தி:" என்கையும்.

வ்யா.—தேவதாயாஞ்சததாமந்த்ரப்ரதேகுரோள-த்ரிஷுபக்திஸ்ஸதா கார்யா ஸாஹிப்ரதமஸாதநம்" (கக) என்னக்கடவதிறே.

---

எ.—கீழ்அவதாரிகையில் (அதிலர்த்தமறிந்தே யெல்லாருமுஜ்ஜீவிக்க வேண்டுகையாலும் உபதேஶபரம்பராப்ராப்தமான அர்த்தவிஶேஷங்களை இப்ப்ரபந்தமுகேநவருளிச்செய்கிறார்) என்றாப்போலே, "மந்த்ரார்த்தப்ரதனான ஆசார்யன்பக்கலிலும்" என்றருளிச்செய்யாதே, [மந்த்ரப்ரதனான ஆசார்யன்பக்கலிலும்] என்றிருவருமருளிச்செய்தது, மந்த்ரப்ரதனான வாசார்யன்உபகாரகனாகையாலே அர்த்தப்ரதனான உத்தாரகாசார்யவிஷயத்திற்போலே மந்த்ரப்ரதனான உபகாரகாசார்யவிஷயத்திலும் ப்ரேமம் அதிஶயேந உண்டாகவேணுமென்கைக்காக.

"జ్ఞానానుష్ఠానవైషమ్యాత్ ప్రబలోయస్తుదుర్బలః। ఉత్తారకస్తుపూర్వస్స్యాదపరస్తూపకారకః" "ஜ்ஞாநாநுஷ்டாநவைஷம்யாத் ப்ரபலோயஸ்துதுர்ப்பலஃ - உத்தாரகஸ்து பூர்வஸ்யாத்அபரஸ்தூபகாரகஃ" (உகூ௫)என்று, மந்த்ரப்ரத அர்த்தப்ரதாசார்யர்க ளிருவரிலும் வைத்துக்கொண்டு, அர்த்தப்ரதாசார்யன் ஜ்ஞாநாநுஷ்டாநத்தால் ப்ரபலனாகையாலே உத்தாரகனானான்; மந்த்ரப்ரதன் துர்ப்பலனாகையாலே உபகாரகனானான். ஜ்ஞாநமாவது- "அவனேஉபாயம்" என்றிருக்கை. அநுஷ்டாநமாவது - ப்ராப்யத்தில் த்வரை விஞ்சியிருக்கை. "మన్త్రప్రకృతిత్యుక్తో హ్యర్థప్రాణ ఇతిస్మృతః। తస్మాన్మన్త్రప్రదాచార్యాద్గరీయానర్థదో గురుః" "மந்த்ரஃப்ரக்ருதி த்யுக்தோ ஹ்யர்த்தஃ ப்ராணஇதிஸ்ம்ருதஃ-தஸ்மாந்மந்த்ரப்ரதாசார்யாத் கரீயாநர்த்ததோகுருஃ" (உகூகூ) என்று - உத்தாரகனே கரீயானாகச்சொல்லுகைக்கடி உபகாரகனாய்த்து; அந்த உபகாரந்தான், "ప్రకీర్ణవిషయారణ్యే ప్రధావన్తం ప్రమాథినమ్। జ్ఞానాఙ్కుశేన కృత్స్నీయాద్వశ్యమిన్ద్రియదన్తినమ్" "ப்ரகீர்ணேவிஷயாரண்யே ப்ரதாவந்தம் ப்ரமாதிநம் - ஜ்ஞாநாங்குஶேநக்ருஹ்ணீயாத் வஶ்யமிந்த்ரியதந்திநம்" (உகூஎ) என்கிறபடியே - பகவத்விமுகனாய் இதரவிஷயாபிமுகனாய்த் திரியாநிற்கிற வென்னை தன் நிர்ஹேதுகக்ருபையாகிற வாளுருவி விஷயாடவியை அறுத்து பகவதாபிமுக்யத்தைப் பண்ணுவித்தானிவனன்றோ? என்று நினைத்திருக்கை. உபகாரகன் உத்தாரகனாகாமைக்கடி - "பாழ்த்தவிதியானவாறே" (உகூஅ) என்று - பாழ்பட்டுச் செடிவளர்ந்தநிலத்தைச்செய்காலாம்படி திருத்தி க்ருஷிபண்ணின னித்தனையொழிய, பலபர்யந்தமாகத் திருத்தவில்லை. அவ்வளவு உபகாரத்தைப்பண்ணுகையாலே, ஜ்ஞாநாநுஷ்டாநாதிஶய முண்டாய் அர்த்தப்ரதாசார்யலாப முண்டாய்த்திறே. "ஆசார்யனும் மந்த்ரப்ரதனென்றும் மந்த்ரார்த்தப்ரதனென்றும் இவர்களளவில்செய்யும் ப்ரதிபத்தியும் ஸமமாயிருக்கும்; பகவானுடைய திருவடிகளிரண்டிலும் வைஷம்யமுண்டாகிலிறே ஆசார்யவிஷயத்திலும் வைஷம்யமுண்டாவது" என்று ப்ரமாணதாத்பர்யத்தில் ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே.

---

தொ.—(ததாமந்த்ரப்ரதே) என்றது - தேநப்ரகாரேண மந்த்ரப்ரதே யென்றபடி. ததா-தாத்ருஶேதேவ ஸத்ருஶேகுரௌஎன்றபடியாகவுமாம்.

மூ.—ர. ஸம்ஸாரிகள்

வ்யா.—ர. இனி இம்மந்த்ரத்தினுடைய அவதரணப்ரகார கதநமுகத்தாலே இதினுடைய அப்ரதிமவைபவத்தை யருளிச்செய்கிறார்,

(ஸம்ஸாரிகள்) என்றுதுடங்கி.—(ஸம்ஸாரி)களாகிறார் - அநாத்யசித்ஸம்பந்தத்தாலே

எ.—ஆக, இத்தால்-அநுஸந்தாநக்ரமத்திலே இதின்வைபவத்தை யருளிச்செய்தாராய்த்து.

[மந்த்ரத்திலும்] - ஜ்ஞாதவ்யார்த்த ஜ்ஞாபகமான இம்மந்த்ரத்திலும், [மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும்] - மந்த்ரத்துக்கு ஶேஷித்வ ப்ரண்யத்வ ப்ராப்யத்வேந வாச்யனான ஈஶ்வரவிஷயத்திலும், [மந்த்ரப்ரதனான ஆசார்யன்பக்கலிலும்] - இம்மந்த்ரத்தை யதாப்ரதிபத்தியுக்தனாய்த் தனக்குபகரித்த ஆசார்யவிஷயத்திலும், [ப்ரேமம் கனக்கவுண்டானால்] - ப்ரேமம் அதிஶயேந உண்டானால், கார்யகரமாவது என்று மூலார்த்தம்.

ரு. (இனி) என்றது - இனிமேலென்றபடி. (அப்ரதிமவைபவத்தை) என்றது - அஸத்ருஶமான வைபவத்தை என்றபடி. இவ்விடத்தில், ப்ரதிமஶப்தம் – உபமாநபரமாய், உபமாநரஹிதமென்றபடி. (ஸம்ஸாரிகளித்யாதி) தேஷாம்ஸ்வரூபம் பூர்வமேவோக்தத்வாத், தத்ரத்ரஷ்டவ்யம்.

தொ.—ர. மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. (கதநமுகத்தாலே) என்றது-கதநாதிகளாலேயென்றபடி. ஆதிஶப்தத்தாலே-அர்த்தபஞ்சககதநத்தையும், எம்பெருமானுடைய ஶிஷ்யத்வாசார்யத்வகதநத்தையும்,எம்பெருமானுடைய க்ருபை நிர்ஹேதுகமென்னுமத்தையும், இம்மந்த்ரத்தினுடைய ஸம்ஸாரநிவர்த்தகத்வகதநத்தையும் சொல்லுகிறது. வைபவத்துக்கு அப்ரதிமத்வமாவது – ஸம்ஸாரநிவர்த்தகத்வ ஶக்தி மற்றொருமந்த்ரத்துக்கில்லாமலிருக்கை."வைகுண்ட²நாமக்³ரஹணமஶேஷாக⁴ஹரம் விது³:" "வைகுண்டநாமக்ரஹணமஶேஷாகஹரம்விதுঃ" என்றது - அபூர்நாரமொழிக்த பாபநிவர்த்தகத்வத்தைப்பற்ற; இம்மந்த்ரம், லுப்தசதுர்த்தியாலும் நமஸ்ஸாலும் அஹங்காரநிவர்த்தகமாகையாலே, மந்த்ராந்தரங்களைப்பற்ற இதுக்கு வாசியுண்டு.

(அநாத்யசித்ஸம்பந்தத்தாலே) என்றது=அநாதிஶப்தம் - ஸம்பந்த விஶேஷணமாய்,அநாதியான அசித்ஸம்பந்தத்தாலே யென்றபடி.இத்தால்-ஸம்பந்தம் காதாசித்கமன்றென்கிறது.

பி.—ரு. (அப்ரதிம வைபவம்) - ஒப்பின்றியிருக்கிற வைபவம்.

(அநாத்யசித்ஸம்பந்தத்தாலே) என்றது - சேதநனுக்கு அசித்ஸம்பந்தம் நித்யமென்னும்போது மோக்ஷதசையிலே கழியக்காண்கையாலே. அசித்ஸம்பந்தம் நித்யமென்னக்கூடுமோ வென்னில்; அசித்ஸம்பந்தம் வந்த நாளறியாமையாலே "நித்யம்" என்று ப்ரமாணங்கள் சொல்லுகிற தத்தனை போக்கி, ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம்வந்தேறியாகையாலே அநித்யமென்று கொள்ளவேணும்.

வ்யா.—ப்ரவாஹரூபேண வருகிற அவித்யாகர்மவாஸநாருசிவிவஶ ராய் ஜந்மமரணாதி க்லேஶபாகிகளாய்த் திரிகிற பத்தசேதநர்.

(தங்களையுமீஶ்வரனையும்மறந்து) என்றது - "దాసభూతాస్స్వతస్సర్వే హ్యాత్మానః పరమాత్మనః । నాన్యథాలక్షణంతేషాం బన్ధే మోక్షే తథైవచ" "தாஸபூதாஸ்ஸ்வ தஸ்ஸர்வேஹ்யாத்மாநஃ பரமாத்மநஃ - நாந்யதாலக்ஷணம்தேஷாம் பந்தே மோக்ஷேததைவச" (கஉ) என்கிறபடியே - ஸ்வதஸ்ஸித்தமான பகவச்

---

எ.—(திரிகிற) என்றது - "పునశ్చగర్భేభవతిజాయమానోస్తమేతిచ" "புநஶ் சகர்ப்பேபவதிஜாயமாநோஸ்தமேதிச" (உகூகூ) என்கிறபடியே-பிறபது சாவதாய்த்திரிகிறவென்றபடி.

பகவச்சாஸ்த்ரே, "దాసభూతా" "தாஸபூதா" இதி. எல்லா ஆத்மாக் களும் பரமாத்மாவுக்கு ஸ்வதஃ தாஸபூதராயிருப்பர்கள்; பத்தாவஸ்த்தை யிலும் முக்தாவஸ்த்தையிலும் அவர்களுக்கு இதொழிய வேறடையாள மில்லை.

---

தொ.—(ப்ரவாஹரூபேணவருகிற) என்றது - வ்யக்திபேதமுண்டா யிருக்கச்செய்தேயும், பூர்வமுள்ள நாமரூபங்களேயாய் வருகிறவென்ற படி. (அவித்யா) என்றது - தேஹாத்மாபிமாநமும், தன்னிடத்தில் "ஸ்வ தந்த்ரன்" என்கிற அபிமாநமுமென்றபடி. (கர்மம்) என்றது - அந்த அபி மாநங்களிரண்டுமடியாக இச்சேதநர்பண்ணும் புண்யமும் பாபமுமென் றபடி. (வாஸநை) என்றது - விஷஶஸ்த்ராதிகளைக்காட்டும்போது, பயா பஸர்ப்பணாதிகளுக்கு ஹேதுவான அவித்யாவாஸநையும், புத்திபூர்வக மாக த்ருணச்சேதநாதிகளிலே ப்ரவர்த்திக்கைக்கு ஹேதுவான கர்மவா ஸநையுமென்றபடி. (ருசி) என்றது - புத்திபூர்வகமாக புண்யபாபங்களிலே ப்ரவர்த்திப்பிக்கைக்கு ஹேதுவான ருசியென்றபடி. (மரணாதி) என்கிறவி டத்தில், ஆதிஶப்தத்தாலே-பால்ய யௌவந கௌமார வார்த்தகங்களைச் சொல்லுகிறது. (க்லேஶபாகிகளாய்) என்றது - அவ்வோதசையிலுண்டான க்லேஶத்தை யடைந்தவர்களாயென்றபடி.

(ஸ்வதஃ) என்றது - ஸ்வரூபேணஎன்றபடி. (ஹி) என்றது -ப்ரஸித்த மன்றோவென்றபடி. (அந்யதா) என்றது, அந்யத் என்றால் - ஸ்வாதந்த்ர்ய மென்றபடி. (லக்ஷணம்) என்றது-அஸாதாரணதர்மமென்றபடி.

---

பி.—ஆனால், "வந்தேறி" என்று அறியும்படி யென்னென்னில்; மோக்ஷதசையிலே கழிக்கக்காண்கையாலே, "வந்தேறி" என்னுமிடம் ஸித்தம். அவற்றையெல்லாம் ஆதிமத்தாகக்காணுகின்றோமேயிறே (ப்ரவா ஹரூபேண)என்று. அசித்ஸம்பந்தமடியாக அவித்யையுண்டு, அதடியாகமு ன்புமுண்டு, அன்றதடியாக ப்ரக்ருதிஸம்பந்தமுண்டு, வாஸநாருசிகள் கர்ம ஹேதுக்கள்; இப்படிமாறிவருகை யென்றபடி. "ஸர்வே-ஆத்மாநஃ-ஸ்வதஃ, தாஸபூதாஃ - ஸ்வதஃ" என்கிறது - ஸ்வாபாவிகமாகவென்றபடி. அதாவது- ஒரு உபாதியடியாகவன்றென்றபடி.

மூ.—தங்களையும் ஈஸ்வரனையும் மறந்து,

---

வ்யா.—சேஷத்வத்தை லக்ஷணமாகவுடையராயிருக்கிற தங்களையும், "𑌪𑌤𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯" "பதிம்விஶ்வஸ்ய" (௧௩) "𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍" "ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்த்திதம்" (௧௪) இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே தங்களுக்கு நிருபாதிகஶேஷியாயிருக்கிற ஈஸ்வரனையும் அறியாதேயென்கை. ஆனால், அறியாமலென்னாதே, (மறந்து)என்பானென்? முன்பொருக்கால் நினைத்து, பின்பு அந்நினைவுக்கு ப்ரச்யுதிவந்தவிடத்திலேறே (மறந்து) என்னலாவதென்னில்; "மறந்தேனுன்னை முன்னம்" (௧௫) என்கிறபடியே - ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தத்தையுணர்ந்தால், முன்பு நினைத்திருந்த வர்த்தத்தை மறந்தாப்போலேயிருக்கும்

---

எ.—(லக்ஷணமாக உடையராயிருக்கிற) என்றது-ஸ்வரூபமாகவுடையராயிருக்கிற வென்றபடி.

"𑌪𑌤𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍" "பதிம்விஶ்வஸ்யாத்மேஶ்வரம்"- விஶ்வத்துக்கு பதி என்றும், தனக்குத்தானே ஈஶ்வரனென்றும், "𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌞𑍍𑌜𑌾𑌤𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 । 𑌉𑌭𑌯𑍋𑌰𑍇𑌷 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑍋 𑌨 𑌪𑌰𑍋𑌽𑌭𑌿𑌮𑌤𑍋 𑌮𑌮" "ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரம்ஹணிஸ்த்திதம் - உபயோரேஷஸம்பந்தோ நபரோபிமதோமம" என்று=ஸ்வத்வமாவது - ஆத்மாவின் பக்கலிலே உண்டாவது; ஸ்வாமித்வமாவது - ப்ரம்ஹத்தின்பக்கலிலே நிற்குமது; † இருவர்க்கும் இந்தஶேஷஶேஷிபாவமே ஸம்பந்தம், வேறொன்றுமில்லை என்று எனக்கு அபிமதம். (நிருபாதிகஶேஷியாயிருக்கிற) என்றது - கர்மோபாதிகமான ஶேஷிகளைப்போலன்றிக்கே, ஸ்வதஶ்ஶேஷியாயிருக்கிற வென்றபடி.

("மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே) என்றது - "மறந்தேனுன்னை முன்னம்" என்கிற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே என்றபடி.

---

தொ.—ஶேஷத்வம் சேதநாசேதநஸாதாரணமா யிருந்ததேயாகிலும் ஶேஷத்வவஸ்துக்களுக்கு அஸாதாரணமாகையாலே,(ஶேஷத்வத்தை லக்ஷணமாகவுடையராயிருக்கிற)என்றருளிச்செய்கிறார்.இத்தால்-"இவ்வாத்மாவுக்கு ஶேஷத்வமே ஸ்வரூபநிரூபகம்,ஜ்ஞாத்ருத்வம் நிரூபிதஸ்வரூபதர்மம்" என்னுமிடமும், "ஜ்ஞாத்ருத்வமில்லாவிடிலும் ஸ்வரூபஹாநியில்லை" என்னுமிடமும் தோற்றுகிறது. (உடையராயிருக்கிற தங்களையும்) என்றது-ஶேஷமாகத்தங்களையுமென்றபடி. (ஶேஷியாயிருககிற ஈஶ்வரனையும்) என்றது-ஶேஷியான ஈஶ்வரனையு மென்றபடி.

[மறந்து] என்கிற ஶப்தத்தாலே - அறியாமையைச்சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆனால்) இத்யாதியால்.

---

† "இருவர்க்குமுண்டான இந்த ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தமே எனக்கு அபிமதம் வேறு அபிமதமன்று." என்றானும் ஸ்வரஸம்; கோஶாந்தரங்களிற் கண்டுகொள்வது.

எ-அ.—திருமொழி க - பத்து, உ - திருமொழி, பாட்டு - உ.

மறந்தேனுன்னை முன்னம் மறந்தமதியின்மனத்தால்
இறந்தேனெத்தனையு மதனாலிடும்பைக்குழியில்
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான்திருமார்வா
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே.

இரண்டாம்பாட்டு.—இத்தனையோ செய்த குற்றமென்ன (மறந்தேனுன்னை முன்னம்) அந்தப் பொருளின்பங்களோபாதி உன்னையும் ஒருமூலையிலே ஆதரித்துக்கொடுபோரப் பெற்றிலேன். அது செய்துபோந்தாராகில் அப்போதைக்கிப்போது அவற்றுக்குப் பரிஹாரம் பண்ணினாராவரே (மறந்தேன்) யாதொரு விஷயம் விடாதே நினைக்கவடுக்கும், அதொன்றையும் மறந்துபோந்தேன். மதுரையிலே நிர்வஹியாநிற்கச்செய்தே, ஒப்பிலாதபெருமாள் "'த்யேயோநாராயணஸ்ஸதா' 'த்யேயோநாராயணஸ்ஸதா' (உஎ0) என்கிற விஷயத்தையாகாதே மறந்துபோந்தது" என்றார். அல்லாதவை செய்தபடிசெய்ய, உன்னை முந்துறமுன்னம் மறந்துகொடுநின்றேனென்னுதல்; அன்றிக்கே, அநாதிகாலம் மறந்துபோந்தேனென்னுதல். அம்மறப்புப் போருகிறது நெடுநாளுண்டாகில், உன்னை முன்னம் மறந்திலேன் என்றன்றோ சொல்லவடுப்பது என்னில்; அது வேண்டாவாய்த்து. "உன்னை" என்கிறவிடத்திலே ஸம்பந்தத்தை ஸ்மரித்தவராகையாலே; ஸம்பந்தம் ஸ்வாபாவிகமே யாகையாலே, முன்பு நெடுநாள்மறந்து போரச்செய்தேயும் சிலநாள் ஸ்மரித்து மறந்தாப்போலே யிருக்கத் தோற்றிற்று.

(உஎக) *கலங்காப்பெருநகரந்தன்னிலே யிருந்து மறக்கிறதன்றிறே. ஸம்ஸாரத்திலே யிருந்துமறக்கை குற்றமோவென்ன; அவ்வளவேயன்று, நான் சேதநனாகப் பெற்றிலேனென்கிறார். சேதநனாகில் "மறந்தோம்" என்னும் அநுதாபம் பிறக்கவேணுமிறே மறந்தால்; "மறந்தோம்" என்கைக்கு யோக்யதையில்லையிறே அசித்துக்கு; சித்துக்கு ஜ்ஞாத்ருத்வமாகிறது - ஜ்ஞாநகுணங்களுக்கு ஆஸ்ரயமாகையிறே; அக்குணங்கள் தன்பக்கல்காணாமையாலே அவற்றுக்கு ஆஸ்ரயமுண்டாகப்பெற்றதில்லை. மறந்தோமென்கிற மதியில்லாத நெஞ்சையுடையேனென்கையாலே – அநுதாபரூபஜ்ஞாநமும் பிறக்கைக்கு த்வாரம் மநஸ்ஸிறே; அதில்லாமையாலே (இறந்தேனெத்தனையும்) அசித்துக்கும் அவ்வருகேயானேன். முதலிலே நினைக்கைக்கும் யோக்யதை யில்லையிறே அசித்துக்கு; சித்துக்கு யோக்யதை யுண்டாயிருக்கச்செய்தேயும், நினையாமையாலே அசித்துக்கும் அவ்வருகே கைகழியப்போனேன். "அஸந்நேவ" "அஸந்நேவ" (உஎஉ) என்று ப்ரமாணங்களும் சொல்லலாம்படியானேன். உண்டாயிருக்கச்செய்தேயும், "இல்லை" என்று வ்யவஹரிக்கலாம்படி நசித்தேன்.

(அதனால்) "அவித்யாதருஸம்பூதிபீஜமேதத்த்விதாஸ்த்திதம்" „அவித்யாதருஸம்பூதிபீஜமேதத்த்விதாஸ்த்திதம்" (உஎந) என்கிறபடியே—அநாத்மந்யாத்ம

வ்யா.—ஸம்பந்தத்திலுறைப்பை நினைத்தருளிச் செய்தாராமித்தனை.

எ.—புத்தியும் அஸ்வேஸ்வபுத்தியும் ஸம்ஸாரத்துக்கு பீஜமென்றிருப்பார்கள்; இவர், அநுதாபமில்லாமை ஸம்ஸாரபீஜமென்றிருக்கிறார்.

(இடும்பை) - துக்கம். துக்கத்தை விளைக்கக்கடவதான கர்ப்பத்திலே போய்ப்புக்கு, சாவது பிறப்பதாய்க்கொண்டு க்லேஸப்பட்டேபோந்தேன். (பிறந்தே) இப்படி சாவது பிறப்பதாய்ப் போராநின்றால், நடுவிலே காதாசித்கமாக பகவத்ஸமாஸ்ரயணம் பண்ணிலிறே அதொரு ஜந்மத்துக்கு ப்ரதிபந்தகமாகவற்றுவது; அப்படி புருஷகாரங்காட்டி மீண்டதில்லை. (எய்த்தொழிந்தேன்) இன்னம் பிறக்கைக்கடியான கர்மவாஸனை யுண்டேயாகிலும் பிறக்கைக்கு த்ரவ்யமில்லாதபடியானேன். கர்மவாஸனை கிடந்து பிறக்கவேண்டினாலும், பிறக்கைக்கு க்ஷமனல்லேன். (ஒழிந்தேன்) நானேயெய்த்தேன். இனி, உடையவர்களுக்கு எடுத்துக்கொள்ள நல்லகாலமென்கிறார்.

உடையவர்கள் எடுத்துக்கொள்ளுகிறார்கள் என்கிறது நீர்தாம் எது நினைத்தென்ன (பெருமான்) உம்மைநினைத்து. கைகழிந்நீராகில் செய்யலாவதுண்டோவென்ன (பெருமான்) எனக்குநானேயோ உளேன்? நீயில்லையோ? ஶேஷித்வ ப்ராப்தியைப்பற்றச் சொல்லுகிறீராகில், ஶேஷிகளாவார்க்கு ஸ்வாதந்த்ர்ய முண்டாயிருக்குமே; ஸ்வதந்த்ரரான நம்மைச் சொல்லுகிற தென்னீர்? என்ன (திருமார்வா) உன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தை யழித்து ஸ்வீகரிப்பிக்கும் பிராட்டியன்றோ அருகேயிருக்கிறாள். "ந கஶ்சிந் நாபராத்யதி" "நகஸ்சிந்நாபராத்யதி"(உஎச) என்பாரன்றோ அருகே?

(சிறந்தேன்) அவள் ஏதேனும் தப்புச்சொல்லிலும் விடேனென்னும் நீயும், உன் ஸ்வாதந்த்ர்யத்தை யழித்து உன்னையிட்டு ஸ்வீகரிப்பிக்குமவளும், இருவரும் இங்கே ஸந்நிதிபண்ணுகையாலே, தேவர்திருவடிகளுக்குத் தகுதியானேன்.

(திருவிண்ணகர்) (உஎக) * கலங்காப்பெருநகரம் இருப்பாயிருக்க, அவ்விடத்தைவிட்டு, பிராட்டியோடேகூட, எய்த்தாரை யெடுக்கைக்காகத் திருவிண்ணகரிலே ஸந்நிஹிதனாய். நான் எய்த்துக்கொடுநின்றேன்; எய்த்தார்க்கும், எய்த்தாரை யெடுக்கவந்து நிற்கிறவர்களுக்கும் ஒருசேர்த்தியில்லையோ.......................................................................*

(ஸம்பந்தத்திலுறைப்பைநினைத்து) என்றது - ஔபாதிகமான ஸம்பந்தமாகில் உபாதிநசித்தவாறே நசித்துப்போம்; அங்ஙனன்றிக்கே, நிருபாதிக ஸம்பந்தமாகையாலே யாவதாத்மபாவி த்ருடமாயிருக்கையை நினைத்தென்றபடி.

தொ.—(உறைப்பை) என்றது - தார்ட்யத்தையென்றபடி.

பி.—(உறைப்பை)-மிடுக்கை.

மூ.—ஈஶ்வரகைங்கர்யத்தையும் இழந்து,

---

வ்யா.—(ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து) என்றது-கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்தாலே வகுத்த ஶேஷியான ஈஶ்வரவிஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும் ப்ராபிக்கப்பெறாதே யென்கை. புருஷார்த்தத்தினுடைய கௌரவத்தையும், அதுக்கிட்டுப்பிறந்துவைத்துக் கிட்டப்பெறாமல் † கிடந்தபடியையும் நினைத்து, (இழந்து) என்கிறார்.

---

ஏ.—(கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்தாலே) என்றது - [மறந்து] என்கிற பதத்தாலே சொல்லப்பட்ட அஜ்ஞாநத்தாலே யென்றபடி. (பரமபுருஷார்த்தத்தையும்) "பரோமாயஸ்மாத்ஸ: - பரம:, புருஷை: அர்த்யத இதி - புருஷார்த்த:, பரமஶ்சாஸௌ - புருஷார்த்தஶ்ச" இதி கர்மதாரயமாய், இதுக்கு மேற்பட்ட புருஷார்த்த மில்லாமையாலே (பரமபுருஷார்த்தம்) என்றபடி.

(அதுக்கு இட்டுப்பிறந்துவைத்து) என்றது - "[Grantha text]" "விசித்ராதேஹ ஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்" (உஎரு) என்கிறபடியே - அந்த கைங்கர்யரூப பரமபுருஷார்த்தத்துக்காகவே பிறந்தென்றபடி. (வைத்து) என்றது -சாரியைச்சொல். (கிட்டப்பெறாமல் கிடந்தபடியையும்) என்றது - அது செய்யப்பெறாமல் விஷயாந்தரப்ரவணராயிருக்கும் ப்ரகாரத்தையுமென்றபடி.

---

தொ.—(கீழ்ச்சொன்ன) என்றது- [தங்களையு மீஶ்வரனையும் மறந்து] என்கிறவிடத்திற் சொன்னவென்றபடி. (வகுத்த ஶேஷியான) என்றது - ப்ராப்த ஶேஷியான என்றபடி. (ப்ராபிக்கப்பெறாதே) என்றது - அடையப்பெறாதேயென்றபடி.

(இழந்து) என்கிற ஶப்தப்ரயோகத்தின் தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (புருஷார்த்தத்தினுடைய) இத்யாதியால். (புருஷார்த்தத்துக்கு கௌரவ) மாவது - தனக்குமேற்பட்ட புருஷார்த்தமாதல் தன்னோடொத்த புருஷார்த்தமாத லில்லாதொழிகையும், யத்நஸாத்யமன்றிக்கே யிருக்கையும், சேதநனுடையபோக்த்ருத்வகந்தம் பொறாதொழிகையும். (அதுக்கிட்டுப்பிறந்துவைத்து)என்றது-புருஷார்த்தத்தைச்செய்கையின்பொருட்டு, "[Grantha text]" "விசித்ரா" என்கிறபடியே தேஹத்தை உபகரணமாக வைத்துக்கொண்டு பிறந்துவைத்தென்றபடி. (வைத்து) என்கிறது - சாரியைச்சொல்; - அர்த்தமில்லை. (அதுகிட்டப்பெறாமையால்) என்றது - அத்தைச்செய்து போருகையன்றிக்கே கைங்கர்யம் செய்யுமவர்கள் ஸந்நிதியும் லபிக்கப்பெறாமையாலென்றபடி. (கிடந்தபடியையும்) என்றது - விஷயாந்தரப்ரவணராய்க்கிடந்த படியையுமென்றபடி. "கரணங்கள் நிர்விஷயங்களாயிராமையாலே விஷயாந்தரப்ரவணராய்" என்று கூட்டிக்கொள்ளவேணும். இத்தால் - "ஸ்வரூபப்ராப்தமான புருஷார்த்தத்தோடே அந்வயிக்கப்பெறாமையன்றிக்கே,ஸ்வரூபவிருத்தமான விஷயாந்தரப்ராவண்யமும் மேலிடுவதே!" என்று இழவு இரட்டித்திருந்தமை தோற்றுகிறது.

---

பி.—(கீழ்ச்சொன்னஅஜ்ஞாநம்) - சேதநஸம்பந்த ஜ்ஞாநாபாவ:.

---

† அது கிட்டப்பெறாமையால்" என்று தொட்டாசார்யரரும்பதத்தில் பாடம்.

மூ.—பெரியதிருமந்த்ரம் ப்ரதாநம்; மற்றையவை யிரண்டுக்கும் அஶிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு.

---

வ்யா.—மாகையாலும், அர்த்தபூர்த்யாதிகளாலும் "నాస్తిచాష్టాక్షరాత్పరః" "நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:" (௩௨) "నమన్త్రోష్టాక్షరాత్పరః" "நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:" (௩௩) என்னும்படியான பெருமையை யுடைய திருமந்த்ரம் ப்ரதாநமாயிருக்குமென்கை.

மற்ற வ்யாபகத்வயத்துக்கும் தாழ்வேதென்ன (மற்றையவையிரண்டுக்கும் அஶிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு) என்கிறார்.

---

எ.—மென்றபடி. (அர்த்தபூர்த்யாதிகளாலும்) என்றது-அத்யாஹாராஸாபேக்ஷிதங்களன்றிக்கே, ஶப்தத:ப்ரதிபாதகமாகிற அர்த்தபூர்த்யாதிகளாலுமென்றபடி. இவ்விடத்தில், ஆதிஶப்தத்தாலே -ஶிஷ்டபரிக்ரஹத்தைச் சொல்லுகிறது.

"యథాసర్వేషుదేవేషునాస్తినారాయణాత్పరః।తథాసర్వేషుమన్త్రేషునాస్తిచాష్టాక్షరాత్పరః" "யதாஸர்வேஷு தேவேஷு நாஸ்திநாராயணாத்பர: - ததாஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:" (௩௧௫) - யாதொருபடி ஸர்வ தேவதைகளிலும் வைத்துக்கொண்டு நாராயணனைக்காட்டில் பரனில்லை, அப்படியே ஸர்வமந்த்ரங்களிலும் வைத்துக்கொண்டு திருவஷ்டாக்ஷரியைக்காட்டில் பரமில்லை இதி.

ப்ருஹத்தாரீதே, ["భూత్వోర్ధ్వబాహురద్యాత్రసత్యపూర్వంబ్రవీమివః। హేపుత్రశిష్యాశ్శృణుతనమన్త్రోష్టాక్షరాత్పరః" "பூத்வோர்த்வபாஹு ரத்யாத்ரஸத்யபூர்வம் ப்ரவீமிவ: - ஹேபுத்ரஶிஷ்யாஶ்ஶ்ருணுதநமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:"] (௩௧௬)-புத்ரஶிஷ்யர்களைக்குறித்துக்கையெடுத்து ஶபதபூர்வகமாகச் சொல்லுகிறேன், - திருவஷ்டாக்ஷரத்திற்காட்டில் பரமாயிருப்பதொரு மந்த்ரமில்லை.

(பெருமையையுடைய) என்றது - அதிஶயத்தையுடைய வென்றபடி.

ஹாரீதஸ்ம்ருதௌ, "వ్యాపకానాంచసర్వేషాంజ్యాయానష్టాక్షరోమనుః। అష్టాక్షరస్యజప్తాతుసాక్షాన్నారాయణస్స్వయమ్" "வ்யாபகாநாஞ்சஸர்வேஷாம்ஜ்யாயாநஷ்டாக்ஷரோமநு: - அஷ்டாக்ஷரஸ்யஜப்தாது ஸாக்ஷாந்நாராயணஸ்ஸ்வயம்" (௩௧௭).

"[இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு]-அவ்யாபகங்களிற்காட்டில் ஶ்ரேஷ்டமாயிருந்துள்ள இந்த வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் வைத்துக்கொண்டு, [பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்] - ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளால் ஶ்ரேஷ்டமாக ப்ரதிபாதிக்கப்பட்ட பெருமையுடைய திருமந்த்ரம் ஶ்ரேஷ்டமாயிருக்கும்" என்று மூலார்த்தம்.

உத்தரவாக்யஸ்ய ஸங்கதி: (மற்ற) இத்யாதி.

---

தொ.—(அர்த்தபூர்த்யாதிகள்) என்கிறவிடத்தில்,(ஆதி)ஶப்தத்தாலே-ஶிஷ்டபரிக்ரஹத்தைச்சொல்லுகிறது. (நாஸ்திச) என்றது - நாஸ்தி ஏவ என்றபடி.

மேலுக்கவதாரிகை மூன்றாக வாக்யக்ரஹணம் பண்ணுகிறார் (மற்ற) இத்யாதியால்.

வ்யா.—அதாவது-வாஸுதேவ விஷ்ணுஶப்தங்களான மற்ற வ்யாபக மந்த்ரங்களிரண்டுக்கும் நாராயணஶப்தம்போலே ஸ்வரூப ரூபகுணாதிகளை யெல்லாம் ப்ரதிபாதியாதே, ஸ்வரூபமாத்ரத்தை ப்ரதிபாதிக்கையாலே, நிர்விஶேஷ சிந்மாத்ரவஸ்த்வாதிகளான

---

ஏ.—(ஸ்வரூபரூபகுணாதிகளை) என்றது - பகவத்ஸ்வரூபரூபகுணாதிகளையெல்லாமென்றபடி. (ஸ்வரூப) பதம் - திவ்யாத்மஸ்வரூபபரம்; (ரூப) பதம் - திவ்யமங்களவிக்ரஹபரம்; (ஆதி) ஶப்தத்தாலே-விபூதிகளைச்சொல்லுகிறது.

(ஸ்வரூபமாத்ரத்தை) என்றது-பகவத்ஸ்வரூபமாத்ரத்தை என்றபடி. (நிர்விஶேஷேத்யாதி) நிர்விஶேஷத்வம் - ஸகல விஶேஷரஹிதத்வம். విశేషో భేదః - సోపిసజాతీయవిజాతీయస్వగతరూపేణత్రివిధః. అచిద్బ్రహ్మణో భేదః - విజాతీయః, చిద్బ్రహ్మణోర్భేదః-సజాతీయః, వ్యావృత్త్యనువృత్తిభేదః - స్వగతభేదః. అనృతవ్యావృత్త్యాదయోవ్యావృత్తిధర్మాః, నిత్యత్వాదయోఅనువృత్తిధర్మాః; సత్యపదాత్-అనృతవ్యావృత్తిః, జ్ఞానపదాత్-జడవ్యావృత్తిః, అనన్తపదాత్ - పరిచ్ఛిన్నవ్యావృత్తిః, అనువృత్తిః - ఇదమంశానువృత్తిః; ధర్మపదస్యవ్యావృత్త్యనువృత్తిశబ్దాదౌయోజనీయమ్. ఏవంరూపైర్విరహితత్వమ్ - నిర్విశేషత్వమ్. స్వయంప్రకాశత్వమ్-చిత్వమ్. మాత్రశబ్దేన-జడత్వవ్యావృత్తిః. "యథాసైన్ధవఘనః" ఇతివత్ కృత్స్నోరసఘనఏవఇతివాక్యశేషః. "వృక్షస్యస్వగతోభేదఃపత్రపుష్పఫలాదిభిః । వృక్షాన్తరాత్సజాతీయోవిజాతీయశ్శిలాదిభిః॥ ఏవంచిద్వస్తునోభేదత్రయంప్రాప్తంవ్యుదస్యతే। ఐక్యావధారణంద్వైతప్రతిషేధైస్త్రిభిఃక్రమాత్" விஶேஷோபேதஃ-ஸோபிஸஜாதீய விஜாதீய ஸ்வகதரூபேணத்ரிவிதஃ. அசித்ப்ரம்ஹணோபேதஃ - விஜாதீயஃ, சித்ப்ரம்ஹணோர்பேதஃ - ஸஜாதீயஃ, வ்யாவ்ருத்யநுவ்ருத்திபேதஃ - ஸ்வகதபேதஃ. அந்ருதவ்யாவ்ருத்த்யாதயோவ்யாவ்ருத்திதர்மாஃ, நித்யத்வாதயோ அநுவ்ருத்திதர்மாஃ; ஸத்யபதாத்-அந்ருதவ்யாவ்ருத்திஃ, ஜ்ஞாநபதாத்-ஜடவ்யாவ்ருத்திஃ, அநந்தபதாத் - பரிச்சிந்நவ்யாவ்ருத்திஃ, அநுவ்ருத்திஃ - இதமம்ஶாநுவ்ருத்திஃ; தர்மபதஸ்யவ்யாவ்ருத்த்ய நுவ்ருத்திஶப்தாதௌ யோஜநீயம். ஏவம்ரூபைர்விரஹிதத்வம்-நிர்விஶேஷத்வம். ஸ்வயம்ப்ரகாஶத்வம்-சித்வம். மாத்ரஶப்தேந-ஜடத்வவ்யாவ்ருத்திஃ. "யதாஸைந்தவகநஃ" (ஙகஅ) இதிவத் க்ருத்ஸ்நோரஸகந ஏவேதி வாக்யஶேஷஃ. " வ்ருக்ஷஸ்யஸ்வகதோ பேதஃபத்ரபுஷ்பபலாதிபிஃ - வ்ருக்ஷாந்தராத்ஸஜாதீயோ விஜாதீயஶ்ஶிலாதிபிஃ-ஏவம்சித்வஸ்துநோபேத த்ரயம்ப்ராப்தம்வ்யுதஸ்யதே - ஐக்யாவதாரணம்த்வைதப்ரதிஷேதைஸ்த்ரிபிஃக்ரமாத்" (ஙகக) என்று சொல்லுகிறபடியே - (நிர்விஶேஷசிந்மாத்ரவஸ்த்வாதிகளான.)

---

தொ.—(ஸ்வரூபரூபகுணாதிகள்) என்கிற (ஆதி)ஶப்தத்தாலே-விபூதிகளைச்சொல்லுகிறது. (ஸ்வரூபமாத்ரத்தை) என்றது-வ்யாபகமான ஸ்வரூபமாத்ரத்தை யென்றபடி. (நிர்விஶேஷ) என்றது - விஶேஷண ஶூந்யமானவென்றபடி.

வ்யா.—குத்ருஷ்டிகள் மிகவுமாதரித்துப்போருகையாகிற அஶிஷ்டபரிக்ரஹமும், வ்யாப்யாத்யாஹாராதிஸாபேக்ஷதையாகிற அபூர்த்தியுமுண்டென்கை. "ஷடக்ஷரி,

---

ஏ.—பாரத்வாஜஸம்ஹிதாயாம், "కుదృష్టయో బహువిధా వృథా వైదికమానినః । తథామిత్థ్యాదృశో బాహ్యాస్సర్వై రేతావృతం జగత్" "குத்ருஷ்டயோ பஹுவிதா வ்ருதா வைதிகமாநிநः - ததாமித்த்யாத்ருஶோ பாஹ்யாः ஸர்வைரேவாவ்ருதம் ஜகத்" (௩உ௦) என்கிறபடியே - குத்ருஷ்டிகளென்றபடி. இவ்விடத்தில், (குத்ருஷ்டிகள்) என்கிறது - ஶங்கராதிகளை.

"'సత్యం జ్ఞానమనన్తం బ్రహ్మ' ఇత్యత్ర, సత్యపదమ్-నిరుపాధికసత్తాయోగి బ్రహ్మాహ. తేన వికారాస్పదమ్-అచేతనమ్. తత్సంసృష్టచేతనశ్చ వ్యావృత్తః, నామాన్తరభజనార్హావస్థాన్తరయోగేన తయోర్నిరుపాధికసత్తాయోగరహితత్వాత్. జ్ఞానపదమ్-నిత్యాసంకుచితజ్ఞానైకాకారమాహ. తేన కదాచిత్సంకుచితజ్ఞానత్వేన ముక్తా వ్యావృత్తాః. అనన్తపదమ్, దేశకాలవస్త్వపరిచ్ఛేదస్వరూపమాహ. గుణత్వాత్స్వరూపస్య స్వరూపేణాగుణైశ్చానన్త్యమ్. తేనపదద్వయవ్యావృత్తకోటిద్వయ విలక్షణాస్సాతిశయస్వరూపస్వగుణా నిత్యా వ్యావృత్తాః. విశేషణానాం వ్యావర్తకత్వాత్" ఇతి విశిష్టాద్వైతసిద్ధాన్తః. "'ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரம்ஹ' இத்யத்ர, ஸத்யபதம்-நிருபாதிகஸத்தாயோகிப்ரம்ஹாஹ. தேநவிகாராஸ்பதம் அசேதநம். தத்ஸம்ஸ்ருஷ்டசேதநஶ்ச வ்யாவ்ருத்தः, நாமாந்தரபஜநார்ஹாவஸ்த்தாந்தரயோகேந தயோர்நிருபாதிகஸத்தாயோகரஹிதத்வாத். ஜ்ஞாநபதம்-நித்யாஸங்குசிதஜ்ஞாநைககாரமாஹ. தேந கதாசித்ஸங்குசிதஜ்ஞாநத்வேந முக்தாவ்யாவ்ருத்தாः. அநந்தபதம், தேஶ காலவஸ்த்வபரிச்சேதஸ்வரூபமாஹ. குணத்வாத்ஸ்வரூபஸ்யஸ்வரூபேணகுணைஶ்சாநந்த்யம். தேந பதத்வயவ்யாவ்ருத்தகோடித்வயவிலக்ஷணாஸ்ஸாதிஶயஸ்வரூபஸ்வகுணா நித்யாவ்யாவ்ருத்தாः. விஶேஷணாநாம் வ்யாவர்த்தகத்வாத்" இதி விஶிஷ்டாத்வைதஸித்தாந்தः.

(வ்யாப்யாத்யாஹாராதி) என்றது - வ்யாப்யபதார்த்தவாசகபதாத்யாஹாரமென்றபடி. (ஆதி)ஶப்தத்தாலே - குணவாசகபதாத்யாஹாரத்தை நினைக்கிறது.

ஸம்வாதப்ரமாணோதாஹரண மறுக்ருண்ஹாதி (ஷடக்ஷரி) இத்யாதிநா. (ஷடக்ஷரி) யாவது - "ఓం నమో విష్ణవే" "ஓம்நமோவிஷ்ணவே" (௩உக) என்னுமது. ப்ரணவநமஸ்ஸுக்கள் ஸர்வமந்த்ர ஸாதாரண மாகையாலே,

---

தொ.—(குத்ருஷ்டிகள்) என்றது - சங்கராதிகளென்றபடி.

வாஸுதேவ விஷ்ணுமந்த்ரங்களுடைய பூர்த்தியை ஸம்வாதத்தாலே உபபாதிக்கிறார் (ஷடக்ஷரி) இத்யாதியால்.

---

பி.—கக. (வ்யாப்யாத்யாஹாரம்) என்றது - வ்யாப்யமான நாரஶப்தம் அங்குண்டானாப்போலே, இங்கில்லாமையாலே, "ஸர்வத்ரவஸதி" என்று ஸர்வஶப்தத்தாலே வ்யாப்யத்தை அத்யாஹரித்துக்கொள்ள வேணுமென்றபடி.

வ்யா.—வ்யாப்யபதார்த்தங்களையும், வ்யாபகப்ரகாரத்தையும், வ்யாப்திபலத்தையும், வ்யாபகனுடைய குணங்களையும் சொல்லாதே, வ்யாப்திமாத்ரப்ரகாஶகமாகையாலே அபூர்ணம்.

ஏ.—அவற்றுக்கர்த்தம் விவக்ஷியாதே, ப்ரதாநபூத நாமத்ரயத்தினுடைய அர்த்தங்களை விவக்ஷித்து, அபூர்த்தியையும் பூர்த்தியையும் உபபாதித்தருளுகிறுரென்று கண்டுகொள்வது.

(வ்யாப்திமாத்ரப்ரகாஶகமாகையாலே) என்றது-"விஷ்ல்-வ்யாப்தௌ" "விஷ்ல் – வ்யாப்தௌ" (௩உஉ) என்கிற விடத்தில் வ்யாப்திவாசகமான "விஷ்ல்" என்கிற தாதுவில் "இதோலோபஸ்யாத்" "இதோலோபஸ்யாத்" (௩உ௩) என்று இத்ஸம்ஜ்ஞிகமான ல்காரம் லோபமாய், அநந்தரம் "விஷ்ல்" என்றிருந்ததாய், "ஔணாதிகேதாச்சில்யே" "ஔணாதிகேதாச்சில்யே" ணுப்ரத்யம் ப்ராப்தமாய், "விஷ்ணுః" என்று ஶப்தமாய், "வ்யாப்நோதீதி - விஷ்ணுః" என்ற வ்யுத்பத்தியாலே, பகவத்ஸ்வரூபவ்யாப்திமாத்ரப்ரதிபாதகமாகையாலே யென்றபடி. இவ்விடத்தில், மாத்ரஶப்தம் "மாத்ரம்கார்த்ஸ்ந்யேவதாரணே" "மாத்ரம்கார்த்ஸ்ந்யேவதாரணே" என்று அவதாரணர்த்தகமாய், அந்யயோக வ்யவச்சேதகமாயிருக்கும். "விஶதீதி-விஷ்ணுః" என்று மருளிச்செய்வர்கள். "யஸ்மாத்வ்யஷ்டமிதம்விஶ்வம் யஸ்யஶக்த்யாமஹாத்மநः। தஸ்மாத்விஷ்ணுரிதிப்ரோக்தோ விஶதாதோः ப்ரவேஶநாத்." வ்யஷ்டம்-வ்யாப்தமித்யர்த்தः. "'யஸ்மாத்வ்யஷ்டமிதம்விஶ்வம் யஸ்யஶக்த்யாமஹாத்மநः - தஸ்மாத்விஷ்ணுரிதிப்ரோக்தோ விஶதாதோः ப்ரவேஶநாத்.' வ்யஷ்டம்-வ்யாப்தமித்யர்த்தः." (௩உச) இதி விஷ்ணுபுராணே. வ்யாப்திஶ்ச த்ரேதா-ஸ்வரூபதः, தர்மபூதஜ்ஞாநதः, விக்ரஹதஶ்ச.

தொ.—(வ்யாப்யபதார்த்தங்களையும்) என்றது-நாரஶப்தார்த்தங்களையுமென்றபடி. (வ்யாபகப்ரகாரத்தையும்) என்றது - நாராயணபதத்திலே பஹுவ்ரீஹிஸமாஸஸித்தமான அந்தர்யாமித்வத்தையுமென்றபடி. (வ்யாப்திபலத்தையும்) என்றது - அதில் தத்புருஷ ஸமாஸஸித்தமான ஸர்வாபாஶ்ரயத்வத்தையுமென்றபடி. அதாவது - தத்தத்வஸ்துஸ்வரூபநிர்வாஹகனாகை. (வ்யாபகனுடைய குணங்களையும்) என்றது-நாரஶப்தார்த்தங்களான ஜ்ஞாநாநந்தாமலத்வாதி குணங்களையுமென்றபடி. (வ்யாப்திமாத்ரப்ரகாஶகமாகையாலே) என்றது-விஷ்ணுஶப்தத்தாலே வ்யாப்திமாத்ரப்ரதிபாதகமாகையாலே யென்றபடி.

பி.—(வ்யாபகப்ரகாரம்)-தத்புருஷபஹுவ்ரீஹிகளாலே, உள்ளோடு புறம்போடுவாசியற வ்யாபிக்கைக்கு, ஷடக்ஷரிக்கு "விஷ்ல்வ்யாப்தௌ" என்று வ்யாப்திஸூசக முண்டானாலும், த்வாதஶாக்ஷரிக்குப்போலே "ஸர்வத்ராஸௌ" என்று நிருக்தியில்லாமையாலே, வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லவில்லையிறே. வ்யாப்திபலந்தானே உபாயோபேயமாகை. இதுக்கு ஶப்தம் அயநபதத்தில், "அநேநாயத இத்யயநம்" "இயத இத்யயநம்" என்கிற வ்யுத்பத்தித்வயம்

வ்யா.—வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும், வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகஶப்தம் இல்லாமையாலும், 'ஸர்வம் வஸதி' 'ஸர்வம் வஸதி' (கூச) என்று அர்த்தபலத்தாலே ஸர்வஶப்தம் புகுந்தாலும்,

எ.—(வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும்) என்றது- "வஸ நிவாஸே" என்கிறவிடத்தில் நிவாஸார்த்தகமான வஸ தாதுவின்மேலே கர்த்ரர்த்தகே ஔணாதிகே உதேவப்ரத்யயமாய், ப்ரத்யயம்-ஸித்தாகையாலே உபதாவ்ருத்த்யா, "வஸதீதி - வாஸுதேவ:" என்ற வ்யுத்பத்தியாலே நிஷ்பந்நமான வாஸுதேவஶப்தமானது, "ஸர்வத்ரவஸதீதி - வாஸுதேவ:" என்று அதிகரணவ்யுத்பத்யா ஆதாரகத்வலாபேந வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயு மென்றபடி. அதிகரணவ்யுத்பத்தி லப்தமான ஸர்வஶப்தம் ஸாகல்யவாசியாகையாலே குணங்களையுஞ்சொல்லில் ஆத்மாஶ்ரயாநவஸ்த்தாரூப தோஷத்வயம் வருகையாலே குணவ்யதிரிக்த சேதநாசேதநவாசியாகக்கடவது.

(வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகஶப்தமில்லாமையாலும்) என்றது - "ஆக்ஷேபதஃப்ராப்தாதாபிதாநிகஸ்யைவ க்ராஹ்யத்வாத்" "ஆக்ஷேபதஃப்ராப்தாதாபிதாநிகஸ்யைவ க்ராஹ்யத்வாத்" (கஉ௫) என்கிறபடியே - ஆக்ஷேபத: ப்ராப்தமானதன்றிக்கே, ஸ்வத: வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகஶப்தமில்லாமையாலுமென்றபடி.

(அர்த்தபலத்தாலே ஸர்வஶப்தம்புகுந்தாலும்) என்றது - "ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்சவஸத்யத்ரேதி வை யத:। ததஸ்ஸவாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே" "ஸர்வத்ராஸௌ

தொ.—இனி, திருத்வாதஶாக்ஷரியினுடைய அபூர்த்தியை யருளிச்செய்கிறார் (வ்யாபகப்ரகாரத்தை) இத்யாதியால். (வ்யாபகப்ரகாரத்தை) என்றது - அந்தர்யாமித்வத்தை யென்றபடி. (சொல்லாநிற்கச்செய்தேயும்) என்றது - "வஸதீதி-வாஸுதேவ:" என்கிற கர்த்தரிவ்யுத்பத்தியாலே சொல்லாநிற்கச்செய்தேயுமென்றபடி. (வாசகஶப்தம்) என்றது - ஸர்வத்ர என்ற ஶப்தமாதல், "ஸர்வம்" என்கிற ஶப்தமாதலென்றபடி. ("ஸர்வம்வஸதி" என்று அர்த்தபலத்தாலே ஸர்வஶப்தம் புகுந்தாலும்) என்றது - "வஸதீதி வாஸுதேவ:" என்கிற வ்யுத்பத்தியால் வாஸரூபார்த்தபலத்தாலே, ஸர்வத்ர என்றது - அதிகரணவாசியான ஸர்வஶப்தம் புகுந்தாப்போலே, "ஸர்வம் அஸ்மிந்வஸதீதி வாஸுதேவ:" என்கிற அதிகரணேவ்யுத்பத்தியால், ஸர்வம் என்று - ஸர்வஶப்தம் புகுந்தாலுமென்றபடி.

பி.—" ஸர்வத்ராஸௌ " இத்யாதியாலே - த்வாதஶாக்ஷரிக்கு வ்யாபகப்ரகாரத்தைச்சொல்லாநிற்கச் செய்தேயுமென்றபடி. "ஸர்வத்ராஸௌ" இத்யாதி. " அஸௌ ஸர்வத்ரவஸதீதியதஸ்ஸமஸ்தஞ்ச அத்ராஸ்மிந்வஸதீதி யத:, தத:, ஸவாஸுதேவ:" இதி வித்வத்பி: பரிபட்யதே. வாஸுதேவ

வ்யா.—அதில் குணம் அந்வயியாமையாலும், இனி குணஸித்திக்காக பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ளவேண்டுகையாலும்,

---

எ.—ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரோதிவையதः-அதஸ்ஸவாஸுதேவேதி வித்வத்பிः பரிபட்ட்யதே" (௬உகூ) என்று நிருக்த்யர்த்தபலத்தாலே ஸர்வஶப்தம் புகுந்தாலுமென்றபடி. (ஸர்வத்ரேதி) ஸர்வத்ர - சேதநாசேதநேஷு, அஸௌ-பரமாத்மா, வஸதி; அத்ர-பரமாத்மநி, ஸமஸ்தம் - ப்ரபஞ்சஜாதம், வஸதி - ஜாதிகுணப்ரபாப்ரபாவாநிதிவத் ததநிஸத்தாக மித்யர்த்தः. யதः, வஸதி- "అనశ్నన్నన్యో ఽభిచాకశీతి" ఇత్యుక్తరీత్యా తద్గతదోషైరసంస్పృష్టః. వసనాత్-వాసుః, ద్యోతనాత్-దేవః, వాసుశ్చాసౌ దేవఇతి-వాసుదేవః, "వాసనాద్ద్యోతనాచ్చైవవాసుదేవంతతోవిదుః" ఇతి. యతస్సర్వత్రవసత్యతః వాసుదేవఇతి ః ద్వద్భిః బ్రహ్మవిద్భిః పరిపఠ్య తఇత్యర్థః. "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" (௬உஎ) இத்யுக்தரீத்யா தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டः. வஸநாத் - வாஸுः, த்யோதநாத் - தேவः, வாஸுஶ்சாஸௌதேவ இதி-வாஸுதேவः, "வாஸநாத்யோதநாச்சைவ வாஸுதேவம்ததோவிதுः" (௬உஅ) இதி. யதஸ்ஸர்வத்ரவஸதி அதः வாஸுதேவ இதி வித்வத்பிः ப்ரம்ஹவித்பிः பரிபட்ட்யதஇத்யர்த்தः.

(அதில்) என்றது - அந்தப்ரதமாந்தமான ஸர்வஶப்தத்தி லென்றபடி. (குணம் அந்வயியாமையாலும்) என்றது - பூர்வவத் ஆத்மாஶ்ரயாநவஸ்தாரூபதோஷங்களுக் கவகாஶமின்றிக்கே ஸர்வஶப்தம்ஸாகல்யவாசியான போதிலும், கீழ் "ஸர்வத்ர" என்கிறவிடத்தில் குணம் அந்வயியாமையாலும். "సర్వనామ్నాం బుద్ధిస్థావ్యవహితపూర్వపరామర్శకత్వాత్" "ஸர்வநாம்நாம்புத்திஸ்த்தாவ்யவஹிதபூர்வ பராமர்ஶகத்வாத்" (௬உக) என்னும் நியமத்தாலும், குணமந்வயியாமையாலு மென்றபடி.

(குணஸித்திக்காக) என்றது - குணஸித்த்யர்த்தமாகவென்றபடி. (பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ளவேண்டுகையாலும்) என்றது-"జ్ఞానశక్తిబలైశ్వర్యవీర్యతేజాంస్యశేషతః।భగవచ్ఛబ్దవాచ్యాని" "ஜ்ஞாநஶக்திபலைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷதः - பகவச்சப்தவாச்யாநி" (௬௬௦) என்கிறபடியே-குணவாசக பகவச்சப்தம் கூட்டிக்கொள்ளவேண்டுகையாலு மென்றபடி.

---

தொ.—அதில் குணமந்வயியாதாப்போலே, அந்த அதிகரணவாசியான ஸர்வ ஶப்தத்தினுடைய விபக்திபரிணாமமுடைய ப்ரதமாந்தமான ஸர்வஶப்தத்திலும் குணமந்வயியாமையால் உண்டான துக்கத்தையுடையவர்களாய்க் கொண்டு, ஐஶ்வர்ய லாபாதிகளா லுண்டான ஸுகவிஶிஷ்டராவர்களென்றபடி.

---

பி.—ஶப்தத்துக்கு - வ்யாப்திவாசகத்வம் நிருக்திபலத்தாலேயொழிய அவயவஶக்த்யா அன்றென்ன வருளிச்செய்கிறார். நாராயணபதத்தில் - வ்யாப்தி கண்டோக்திப்ரகாரம்; அயநபதத்திலும் கர்மணி வ்யுத்பத்தி த்வயத்திலும் வ்யாப்திபலமான உபாயோபேயபலங்களைச் சொல்லுகையாலே,

வ்யா.—வ்யாப்திபலத்தைச் சொல்லாமையாலும், திருத்வாதஶாக்ஷரியும் அபூர்ணம். இம்மந்த்ரம், அவைபோலன்றிக்கே, வ்யாப்ய பதார்த்தங்களோடு, வ்யாபகப்ரகாரத்தோடு, வ்யாப்திபலத்தோடு, வ்யாபகனுடைய குணங்களோடு வாசியற ஶாப்தமாகக் காட்டுகையாலே, அவற்றிற்காட்டில்

---

எ.—(வ்யாப்திபலத்தைச் சொல்லாமையாலும்) என்றது-அந்தர்ப்பஹிர் வ்யாப்திக்கு வ்யாப்யபதார்த்தம் ஆர்த்திகமாகையாலே தத்பலமான பரத்வ ஸௌலப்யங்களைச் சொல்லாமையாலு மென்றபடி. அன்றிக்கே, உபாயோ பேயங்களைச் சொல்லாமையாலும் என்னவுமாம். (அபூர்ணம்) என்றது - அர்த்தபூர்த்தியில்லை யென்றபடி.

"த்வாதஶாக்ஷரி" என்னாதே, (திருத்வாதஶாக்ஷரி) என்று கௌரவித்தது, ஸ்ரீரங்கராஜனுக்கு ஆராதநமந்த்ரமாகையாலே. ப்ரம்ஹாண்டபுராணே ஸ்ரீரங்கமாஹாத்ம்யே, "సాత్వతం పౌష్కరం చేతి సంహితే పాఞ్చరాత్రకే। తదుక్తేనక్రమేణైవ ద్వాదశాక్షరవిద్యయా॥ దీక్షితో దీక్షితైస్సార్థం సాత్వతైఃపఞ్చభిఃపరైః। అష్టాఙ్గేన విధానేననిత్యమర్చయపద్మజ" "ஸாத்வதம்பௌஷ்கரஞ்சேதிஸம்ஹிதேபாஞ்சராத்ரகே - தது்க்தேநக்ரமேணைவத்வாதஶாக்ஷரவித்யயா - தீக்ஷிதோதீக்ஷிதைஸ்ஸார்த்தம்ஸாத்வதைஃபஞ்சபிஃபரைஃ - அஷ்டாங்கேநவிதாநேநநித்யமர்ச்சய பத்மஜ" (௩௩௧).

திருவஷ்டாக்ஷரியினுடைய பூர்த்தியை யருளிச்செய்கிறார் (இம்மந்த்ரம்) என்றுதுடங்கி. (இம்மந்த்ரம் அவைபோலன்றிக்கே) என்றது - இந்த திருவஷ்டாக்ஷரிமந்த்ரம், ஷடக்ஷரி த்வாதஶாக்ஷரி மந்த்ரங்கள்போலன்றிக்கேயென்றபடி. (வாசியற) என்றது - தரதமமன்றிக்கேயென்றபடி. (ஶாப்தமாகக்காட்டுகையாலே) என்றது-அத்யாஹாரமாகவும் ஆர்த்தமாகவுமன்றிக்கே, ஶப்ததஃ ப்ரதிபாதிக்கையாலு மென்றபடி. எங்ஙனேயென்னில்; "చేతనాచేతనంసర్వంనారమిత్యభిధీయతే" "சேதநாசேதநம்ஸர்வம்நாரமித்யபிதீயதே" (௩௩௨) என்கிறபடியே - சேதநாசேதநரூப வ்யாப்யபதார்த்தங்களை நாரஶப்தத்தாலும், "అన్తర్బహిశ్చతత్సర్వంవ్యాప్యనారాయణస్స్థితః" "அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம்வ்யாப்யநாராயணஸ்த்திதஃ" (௩௩௩) என்கிறபடியே - அந்தர்பஹிர்வ்யாபகப்ரகாரத்தை நாராயணபதத்தில் தத்புருஷபஹுவ்ரீஹிஸமாஸங்களாலும் வ்யாப்திபலமான பரத்வஸௌலப்யங்களையும், அந்தர்யாமித்வோபாயத்வோபேயத்வங்களையும், நாராயணபதத்தில் "நாராணும் அயநம்" என்று தத்புருஷனாலே ஸமஸ்தவஸ்துஸத்தாநிர்வஹணார்த்தம் தானாதாரமாயிருக்கையாகிற பரத்வமும், "நாராஃ அயநம் யஸ்ய" என்று பஹுவ்ரீஹியாலே பெரியவனைதான் ஸத்தாநிர்வஹணார்த்தம் ஸமஸ்தசேதநாசேதநங்களிலும் தன்னை யமைத்துக்கொண்டு புகுந்திருக்கையாகிற ஸௌலப்யமும், ஸமஸ்த சேதநாசேதநங்களிலும் ஸத்தாநிர்வஹணார்த்தம் அந்தராத்மதயாவஸ்த்திதனுய்க்கொண்டு நியந்தாவாயிருக்கையாகிற பரத்வமும், அயந

மூ.—கஉ. இத்தை வேதங்களும்,

வ்யா.—இதுக்கு அர்த்தபௌஷ்கல்ய நிபந்தநமான ஆதிக்யமுண்டு" என்று, மற்ற வ்யாபகமந்த்ரங்க ளிரண்டினுடைய அபூர்த்தியையும், திருமந்த்ரத்தினுடைய அர்த்தபூர்த்தியையும், ஸுஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளையருளிச்செய்தாரிறே.

கஉ.—இதுதனக்கு ஶிஷ்டபரிக்ரஹமுண்டோவென்ன வருளிச்செய்கிறார்,

(இத்தை) என்றுதுடங்கி. அதாவது - விஷ்ணுகாயத்ரியிலே வ்யாபகமந்த்ரத்ரயத்தைச் சொல்லுகிறவளவில் ப்ரதமத்திலே நாராயணஶப்தத்தை ப்ராதாந்யேந ப்ரதிபாதிக்கையாலும், "విశ్వంనారాయణమ్" "விஶ்வம் நாராயணம்" (ஙரு) என்றுதுடங்கி "నారాయణపరంబ్రహ్మతత్త్వంనారాయణఃపరః, నారాయణపరోజ్యోతిరాత్మానారాయణఃపరః,యచ్చకించిజ్జగత్యస్మిన్దృశ్యతేశ్రూయతేఽపివా,

எ.—பதத்தில்-"ஈயதே அநேநேதி - அயநம்" என்று கரணேவ்யுத்பத்தியால் உபாயத்வத்தையும்,"ஈயதேஅஸாவித்யயநம்" என்று கர்மணிவ்யுத்பத்தியால் உபேயத்வத்தையும், "జ్ఞానానన్దామలత్వాదిరూపమ్" "ஜ்ஞாநாதயோகுணாரூபம்" (ஙஙச) என்று துடங்கி, "తత్సర్వంనారముచ్యతే" "தத்ஸர்வம்நாரமுச்யதே" (ஙஙரு) என்கிறபடியே - நாரஶப்தத்தாலே வ்யாபகனுடைய ஸ்வரூபநிரூபகங்களான ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளையும், நிரூபிதஸ்வரூபதர்மங்களான ஜ்ஞாநஶக்த்யாதிகளையும், வாத்ஸல்ய ஸௌஶீல்யாதி குணங்களையும் ப்ரதிபாதியாநின்றதிறே.

[மற்றை இரண்டுக்கும்]-வாஸுதேவ விஷ்ணுஸம்ஜ்ஞிக வ்யாபக மந்த்ரங்களிரண்டுக்கும், [அஶிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு]-நிர்விஶேஷசிந்மாத்ரவஸ்த்வாதிகளான குத்ருஷ்டிகள் மிகவு மாதரித்துப் போருகையாகிற அஶிஷ்டபரிக்ரஹமும், வ்யாப்யாத்யாஹாராதி ஸாபேக்ஷதையாலே அர்த்தாபூர்த்தியுமுண்டு" என்று மூலார்த்தம்.

கஉ.—உத்தரவாக்யஸ்ய ஸங்கதிः (இதுதனக்கு) இத்யாதி.

வே... விரும்பின ப்ரகாரத்தை ப்ரமாணோபந்யாஸபூர்வகமாக வருளிச்செய்கிறார் (அதாவது) என்று துடங்கி. (விஶ்வம்நாராயணம்) விஶ்வம் - ஸ்வ...திரஸர்வதத்வனாய், நாராயணம் - பத்த முக்த நித்யரூபேண மூன்றுவகையாயிருக்கிற ஆத்மாக்களுக்கும், போக்யபோகோபகரண போ...ஸ்தா...ரூபேண மூன்றுவகையா அசேதநங்களுக்கும், அந்தர்யாமியா...தாரண நியமந ரக்ஷணங்க ளப் பண்ணிக்கொண்டிருக்குமவனாய்; நா...பரம்ப்ரம்ஹ - பரப்ரம்ஹவாச்யனும் நாராயணனே! பரதத்வமும் நாராயணனே! பரம்ஜ்யோதியும் நாராயணனே! பரமாத்மாவும் நாராயணனே! ...ந்த ஜகத்தில் ப்ரத்யக்ஷத்தாலே காணப்பட்டும் ஶ்ருதியாலே கேட்கப்பட்...மிருக்கிறது யாதொருவஸ்து

வ்யா.—அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:'' ''நாராயணபரம்ப்ரம்ஹதத்த்வம்நாராயண:பர:, நாராயணபரோஜ்யோதிராத்மாநாராயண:பர:, யச்சகிஞ்சிஜ்ஜகத்யஸ்மிந்த்ருஶ்யதேஶ்ரூயதேபிவா, அந்தர்பஹிஶ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்த்தித: '' (கரு) என்று ஸகலவேதாந்த ஸாரபூதமான நாராயணனுவாகத்திலும், '' ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவா ப்ருதிவீ '' ''ஏகோஹவைநாராயணஆஸீத், நப்ரம்ஹாநேஶாநோநேமேத்யாவாப்ருதிவீ'' (கசு) என்று மஹோபநிஷத்திலும், ''சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:, ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோதவ்யஞ்ச நாராயண:'' ''சக்ஷுஶ்சத்ரஷ்டவ்யஞ்சநாராயண:, ஶ்ரோத்ரஞ்சஶ்ரோதவ்யஞ்சநாராயண:'' (கஎ) என்றுதுடங்கி ''திஶஶ்ச ப்ரதிஶஶ்ச நாராயண:'' '' திஶஶ்சப்ரதிஶஶ்சநாராயண: '' (கஎ) என்று முடிவாக நடுவுடைய ஸுபாலோபநிஷத்திலும், ''யஸ்யாத்மா ஶரீரம் யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்'' ''யஸ்யாத்மாஶரீரம்யஸ்யப்ருதிவீஶரீரம்'' (கஅ) என்றுதுடங்கி ''யஸ்ய ம்ருத்யுஶ் ஶரீரம்'' ''யஸ்யம்ருத்யுஶ்ஶரீரம்'' (கஅ) என்கிறதிருக நடுவுள்ள பர்யாயங்கள்தோறும் ''ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:'' ''ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மாதிவ்யோதேவ ஏகோநாராயண: '' (கசு)

---

எ.—அந்த ஸகல ப்ரமாண ப்ரதிபந்நமான வஸ்துவை யெல்லாவற்றையும் உள்ளோடு புறம்போடு வாசியற வ்யாபரித்து அந்தராத்மாவாய்க்கொண்டு நிற்கிறவன் நாராயணன்; நாராயணனொருவனுமே உளனுனன்; ப்ரம்ஹாவுமில்லை, ருத்ரனுமில்லை; இந்த த்யாவாப்ருதிவிகளுமில்லை, நக்ஷத்ரங்களுமில்லை; காண்கிற கண்ணும் காணப்படுகிறதும் நாராயணன்; கேட்கிற செவியும் கேட்கப்படுகிறதும் நாராயணன்; திக்குக்களும் விதிக்குக்களுமெல்லாம் நாராயணனே; யாவனொருவனுக்கு ஜீவாத்மா ஶரீரமாயிருக்கிறது, யாவனொருவனுக்கு ப்ருதிவி ஶரீரமாயிருக்கிறது, யாவனொருவனுக்கு ம்ருத்யு ஶரீரமாயிருக்கிறது; இவன் ஸர்வபூதங்களுக்கும் ஆத்மாவாய், தத்கததோஷம் தட்டாதபடி அபஹதபாப்மாவாய், பரமபதநிலயனுகையாலே திவ்யனுய், லீலாவிபூதியோகத்தாலே தேவனுய், இப்படி ஸர்வாதிகனுகையாலே அத்விதீயனுன நாராயணன்.

---

பி.—கஉ. (நடுவுள்ள பர்யாயங்கள்தோறும்) என்றது - ''யஸ்யாத்மா ஶரீரம்'' என்று துடங்கி, ''யஸ்யம்ருத்யுஶ்ஶரீரம்'' என்கிற ஶ்ருதிமுடிவாக நடுவுள்ளபர்யாயஶ்ருதிகளான ஆரணங்கள்தோறும். முடிவிலே - ''ஏஷஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மாதிவ்யோதேவ ஏகோநாராயண:'' என்று சொல்லுகையாலுமென்றபடி. அதாவது-''யஆத்மநிதிஷ்ட்டந் ஆத்மநோந்தரோய ஆத்மாநவேத, யஸ்யாத்மாஶரீரம், யஆத்மாநமந்தரோயமயதி ஸதஆத்மாந்தர்யாம்யம்ருத:, ய:ப்ருதிவ்யாம் திஷ்ட்டந், ப்ருதிவ்யா அந்தரோயம் ப்ருதிவீநவேத, யஸ்யப்ருதிவீஶரீரம், ய:ப்ருதிவீமந்தரோ யமயதி, ஸஆத்மாந்தர்யாம்யம்ருத:, ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மாதிவ்யோதேவ ஏகோநாராயண:'' என்கிறபடியே - உபநிஷத்கோஶங்களிலே நடுவுள்ளபர்யாயஶ்ருதிகளைக் கண்டுகொள்வது. ஏகார்த்தத்தை அநேகதடவைகளிலே சொல்லுகையாலே, பர்யாயஶ்ருதிகளென்கிறது.

வ்யா.—என்று அந்தர்யாமி ப்ராஹ்மணத்திலும் வாஸுதேவவிஷ்ணுஶப்த ங்களை யநாதரித்துநாராயணஶப்தத்தையிட்டு பகவத்ஸ்வரூபாதிகளை நிர்த்தேஶிக்கையாலும், அபௌருஷேயமாய், நித்யநிர்த்தோஷமாய், ஸ்வதஃப்ர மாணங்களான வேதங்களும் விரும்பிற்றின. "యథా సర్వేషు దేవేషు నాస్తి నారాయణాత్పరః । తథా సర్వేషు మన్త్రేషు నాస్తి చాష్టాక్షరాత్పరః" "భూత్వోర్ధ్వబాహురద్యాత్ర సత్యపూర్వం బ్రవీమి వః। హే పుత్ర శిష్యాః శృణుత న మన్త్రోఽష్టాక్షరాత్పరః" "யதாஸர்வேஷுதேவேஷுநாஸ்திநாராயணாத்பரः - ததாஸர்வேஷுமந்த்ரேஷுநாஸ்திசாஷ்டாக்ஷராத்பரः" "பூத்வோர்த்வபாஹுரத்யாத்ரஸத்யபூர்வம்ப்ரவீமிவः- ஹேபுத்ரஶிஷ்யாஶ்ஶ்ருணுதநமந்த்ரோஷ்டாக்ஷராத்பரः" (ச0) "సర్వవేదాన్తసారార్థస్సంసారార్ణవతారకః । గతిరష్టాక్షరో నౄణామపునర్భవకాఙ్క్షిణామ్" "ஸர்வவேதாந்தஸாரார்த்தஸ்ஸம்ஸாரார்ணவதாரகः - கதிரஷ்டாக்ஷரோந்ருணாமபுநர்ப்பவகாங்க்ஷிணாம்" (சக) "ఆర్తా విషణ్ణాశ్శిథిలాశ్చ భీతా ఘోరేషు చ వ్యాధిషు వర్తమానాః । సంకీర్త్య నారాయణశబ్దమాత్రం విముక్తదుఃఖాస్సుఖినో భవన్తి" "ஆர்த்தாவிஷண்ணாஶ்ஶிதிலாஶ்சபீதாகோரேஷுசவ்யாதிஷுவர்த்தமானாः- ஸங்கீர்த்யநாராயணஶப்தமாத்ரம்விமுக்ததுஃகாஸ்ஸுகிநோபவந்தி" (சஉ)

---

எ.—(பகவத்ஸ்வரூபாதிகள்) என்கிறவிடத்தில், (ஆதி)ஶப்தத்தாலே குணசேஷ்டிதங்களைச்சொல்லுகிறது. (நிர்த்தேசிக்கையாலும்) என்றது-ப்ரதிபாதிக்கையாலுமென்றபடி. (விரும்பிற்றின) - ஆதரித்தன, பரிக்ரஹித்ததுகளென்று கருத்து.

ப்ருஹதாரீதே - யாதொருபடி ஸர்வதேவர்களிலும் வைத்துக்கொண்டு நாராயணனிற்காட்டில் பரமாயிருப்ப தொன்றில்லை, அப்படியே ஸர்வமந்த்ரங்களிலும் வைத்துக்கொண்டு திருவஷ்டாக்ஷரத்திற்காட்டில் பரமில்லை. புத்ரஶிஷ்யர்களைக்குறித்துக் கையெடுத்து ஶபதபூர்வகமாகச் சொல்லுகிறேன் கேளுங்கோள், திருவஷ்டாக்ஷரத்திற்காட்டிற் பரமாயிருப்பதொருமந்த்ரமில்லை; ஸர்வவேதாந்தங்களிலும் பரமான அர்த்தமாய், ஸம்ஸாரமாகிறகடலைக் கடத்துவதான திருவஷ்டாக்ஷரம், மோக்ஷகாங்க்ஷிகளான புருஷர்களுக்குப் புகலிடம்.

(ஆர்த்தா) இதி-(ஆர்த்தாः)-நஷ்டைஶ்வர்யகாமாः. (விஷண்ணாः)-அபூர்வைஶ்வர்யகாமாः. ஶிதிலாः-பகவத்ப்ராப்திரஹிதாः, ஆத்மப்ராப்திகாமாः. பீதாः - பகவத்ப்ராப்திவ்யதிரேகேண ஸம்ஸாராத் பீதாः. "யாவதாத்மபாவி அஶரீரியாய்த் திரிவாரொருவன்" இத்யநுக்ருஹீதரீத்யா, கேவலஸ்யாபி ஸம்ஸாரித்வாத். "ఘోరేషు చ వ్యాధిషు వర్తమానాః" "கோரேஷுசவ்யாதிஷுவர்த்தமானாः". "యన్ముహూర్తం క్షణం వాపి" "யந்முஹூர்த்தம் க்ஷணம்வாபி" (ஙஙகூ) "వరం హుతవహజ్వాలా" "வரம்ஹுதவஹஜ்வாலா" (ஙஙஎ) "తతః ప్రాప్తిమహాదుఃఖ" "ததப்ராப்திமஹாதுஃக்க" (ஙஙஅ) இத்யாதிரீத்யா ப்ரஸித்தாः பரமார்த்தாः. நாராயணஶப்தமாத்ரம் - நாராயணஶப்தோ மூலமந்த்ரோபலக்ஷணம். ஏகதேஶேநதத்ஸமுதாயஸ்யாபிஸ்மரணஸம்பவாத், தத்ரஶப்தஶக்த்யாரக்ஷண விஷயேது "సాఙ్కేత్యం పారిహాస్యం చ" "ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச" (ஙஙக) இத்யுக்தரீத்யா அமுத்ரைகதேஶேநாபி கார்யகரத்வாத் மாத்ரஶப்த ப்ரயோகः. அர்த்தபோதநேந ரக்ஷணவிஷயேது நாராயணஶப்தஸ்மாரித மூலமந்த்ரஸ்ய பரிபூர்ணோபதேஶதயா மந்த்ராந்த்ரானைரபேக்ஷ்யம் - மாத்ரஶதார்த்ததः. ஶிஷ்டம் ஸ்பஷ்டம்.

வ்யா.—"నారాయణేత్యస్తి శబ్దో వాగస్తి వశవర్తినీ । తథాపి నరకే ఘోరే పతన్తీతి కిమద్భుతమ్" "நாராயணேதிஶப்தோஸ்திவாகஸ்திவஶவர்த்திநீ - ததாபிநரகேகோரேபதந்தீதிகிமத்புதம்" (சங) "కింతత్ర బహుభిర్మన్త్రైః కింతత్ర బహుభిర్వ్రతైః। నమో నారాయణాయేతి మన్త్రస్సర్వార్థసాధకః" "கிம்தத்ரபஹுபிர்மந்த்ரை꞉கிம்தத்ரபஹுபிர்வ்ரதை꞉ - நமோநாராயணாயேதிமந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக꞉" (சச) இத்யாதிகளாலே, வேதார்த்தோப ப்ரும்ஹணங்களாயிருக்கிற ஸ்வப்ரபந்தங்களிலே பலவிடங்களிலு மித்தை ஶ்லாகித்துக்கொண்டு செல்லுகையாலே, வேதார்த்தவிஶதீகரண ப்ரவ்ருத்தரான வ்யாஸாதிபரமருஷிகளும் விரும்பினார்கள்;

---

ஏ.—(நாராயணேதி)-நாராயண என்கிற ஶப்தமுண்டு, அத்தைச் சொல்லுகைக்கு வாகிந்த்ரியமுண்டு, இப்படியிருக்க, கோரமான நரகத்திலே என்னவென்று விழுகிறார்கள்; இதோராஶ்சர்யம்.

(கிம்தத்ர) இதி - திருமந்த்ரமானது, ஸர்வார்த்தத்தையும் ஸாதித்துக்கொடாநிற்குமதுண்டாயிருக்க, அநேக மந்த்ரங்களாலென்ன ப்ரயோஜநமுண்டு? அனேக கர்மாநுஷ்டாநங்களாலென்ன ப்ரயோஜநமுண்டு?

(வ்யாஸாதிகள்) என்கிறவிடத்தில், (ஆதி)ஶப்தத்தாலே-பராஶர வால்மீகி ஶௌநக பௌஷ்கராதிகளைச் சொல்லுகிறது. (விரும்பினார்கள்)-ஆதரித்தார்கள். சகாரம், உக்தஸமுச்சயம்.

---

தொ.—கஉ. (நாராயணேதிஶப்தோஸ்தி) என்றது-"వైకుణ్ఠనామగ్రహణమశేషాఘహరం విదుః" "வைகுண்டநாமக்ரஹணம்-அஶேஷாகஹரம்விது꞉" என்கிறபடியே, 'ஸகலபாபநிவர்த்தகமாய் இவர்கள்ஸுலபமாக வுச்சரிக்கும்படியான நாராயணஶப்த முண்டென்றபடி. (வாகஸ்திவஶவர்த்திநீ) என்றது - அந்தநாராயணஶப்தத்தை யுச்சரிக்கைக்கு ஸ்வாதீநையாய், "நாராயணஶப்தத்தைநீ உச்சரி" என்றால், மாட்டேனென்னாதே, தான்நினைத்தபோது சொல்லும்படியான வாக்குண்டென்றபடி. (ததாபி) என்றது - ஶப்தமும் ஸுலபம், உச்சரிக்கைக்கு வாக்கு ஸ்வாதீனையாயிருக்கவென்றபடி. (நரகே கோரேபதந்தீதிகிம்) என்றது-அந்தஸுலபமான ஶப்தத்தை ஸ்வாதீநையானவாக்காலே ஒருகால்சொல்லி ஸம்ஸாரத்தினின்றும் உத்தீர்ணராகாமல், ஜநங்கள் ஸம்ஸாரத்திலேவிழுகிறபடியென்! என்று சித்ரகுப்தன் யமனைக் கேட்க; யமனும், அத்புதம்; இதுவுமோராஶ்சர்யம் என்கிறான். அநேகஜல்பம்பண்ணிப்போருகிற இவர்கள்வாயில் நாராயண ஶப்தம் புகுராமைக்கடியானபாபமேதோ.' என்கிறான். அன்றிக்கே, அநேகஶப்தம் பண்ணிப்போருகிறவிவர்கள்வாயில் இஶ்ஶப்தம்புகுராமையுண்டோ? ஆகிலும், இவர்கள் ஸம்ஸாரத்திலழுந்துகிறது இதிலர்த்தமறியாமையென்றே, என்று ஆஶ்சர்யப்படுகிறானாகவுமாம்.

(தத்ர) என்றது - அபிமதலாபத்திலென்றபடி. (ஸ்வப்ரபந்தங்களிலே) என்றது - ஸ்வபுராணங்களிலே யென்றபடி.

---

பி.—(பதந்தி)-விழுகிறீர்கள். (இதிகிம்?)-இதுவெது (அத்புதம்)- ஆஶ்சர்யம்.

வ்யா.—"வண்புகழ்நாரணன்"

ஏ.— முதற்பத்து-இரண்டாந்திருவாய்மொழியில்-பத்தாம்பாட்டு.

எண்பெருக்கந்நலத் - தொண்பொருளீறில
வண்புகழ்நாரணன் - திண்கழல்சேரே.

அழகிது, அப்படியே யாகிறது; பஜநத்துக்கு அவலம்பநமான மந்த்ர மேதென்ன, அதின்னதென்றும், அதனுடைய அர்த்தம் அநுஸந்தேயமென்றும் சொல்லுகிறார். இது தன்னைப் புறம்புள்ளார் ஜபஹோமாதிகளாலே காரியங்கொள்ளாநிற்பர்கள். நம்மாசார்யர்கள் "ஸ்வரூபாநுஸந்தாநத்துக் கிடாயிருக்கிற இதனுடைய அர்த்தாநுஸந்தாநம் மோக்ஷஸாதநம்" என்று தாங்களுமநுஸந்தித்து, தங்களைக் கிட்டினார்க்கு முபதேஶித்துக்கொண்டு போருவர்கள். வேதங்களுக்கும் இவ்வாழ்வார்க்கும் இம்மந்த்ரம் ப்ரஸ்துதமானவாறே, முன்பே ஶப்தத்தைச்சொல்லி அநந்தரம் அர்த்தத்தைச் சொல்லுதல், அன்றியே, முன்பே அர்த்தத்தைச்சொல்லிப் பின்பே ஶப்தப்ரயோகம்பண்ணுதல், செய்யக்கடவதொரு நிபந்தனமுண்டாயிருக்கும்; அதுக்கடி, அர்த்தாநுஸந்தாநம் உத்தேஶ்யமாகையாலே; "யாவையும் எவருந் தானுமமைவுடைநாரணன்"(க) என்னுதல், "நாரணன்முழுவேழுலகுக்கும் நாதன்"(உ)என்னுதல்,செய்வதொருநிர்ப்பந்தமுண்டு; "அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்ஸ்தித꞉" "அந்தர்ப்பஹிஶ்சதத்ஸர்வம்வ்யாப்யநாராயணஸ்ஸ்தித꞉" (ஙசo) என்னுதல், "நாராயணபரோஜ்யோதி꞉" "நாராயணபரோஜ்யோதி꞉" (ஙசக) என்னுதல், செய்யும்வேதம்.

(எண்பெருக்கந்நலம்)இத்யாதி-இப்பாட்டாலே-திருமந்த்ரத்தை ஸார்த்தமாகவருளிச்செய்கிறார். ஆழ்வான், இப்பாட்டளவும் வரப்பணித்து, இப்பாட்டளவிலே வந்தவாறே, "இத்தை உந்தம்மாசார்யர்கள் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கோள்" என்ன; பட்டரும் சீராமப்பிள்ளையும் எழுந்திருந்துபோகப்புக்கவாறே அவர்களை யழைத்து, "இன்னபோதின்னாரிருப்பார் இன்னார்போவார் என்று தெரியாது, இருந்து கேளுங்கோள்" என்று திருமந்த்ரத்தை உபதேசித்து, இப்பாட்டை நிர்வஹித்து, "இப்பாட்டை யிதுக்கர்த்தமாக நினைத்திருங்கோள்" என்று பணித்தான்.

(எண்பெருக்கு)என்கிறவித்தால்-ஜீவாநந்த்யத்தைச் சொல்லுகிறது. (நலத்து)-இவ்வஸ்துக்கள்தான் அஜ்ஞாநகுணாஶ்ரயமுமா யிருக்கக்கடவதிறே, ப்ரணவத்தில் த்ருதீயபதமான மகாரத்தாலே-ஜ்ஞாநகுணாஶ்ரயமுமாய் ஜ்ஞாநஸ்வரூபனுமா யிருக்குமென்று சொல்லிற்றிறே. (ஒண்பொருள்) அசைதந்யம் அசித்துக்கு ஸ்வபாவமாகாநிற்கச்செய்தே வஸ்துதான் ஜடமுமாயிருக்குமிறே - அஸம்ஜ்ஞாவத்தாயிருக்குமிறே; அங்ஙனன்றிக்கே, இவ்வஸ்துதான் ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாஶமுமாய், தர்மபூதஜ்ஞாநமானதும் விஷயங்களை க்ரஹித்துத் தன்னையு மறிவிக்கக்கடவதாயிருக்கும்; அத்தைப்பற்றச் சொல்லுகிறது. (ஈறில) என்கிறவிது-கீழும்மேலும் அந்வயித்துக்கிடக்கிறது. ஈறிலவான ஒண்பொருளையும், ஈறிலவான வண்புகழையுமுடையவனுகையாய்த்து - நாராயணனுகையாகிறது; "பாவக்ரமங்களகுணஹிகிதர்ஶநம꞉" "பாவத்கமங்களகுணஹிகிதர்ஶநம꞉" (ஙசஉ) தன்னுடைய

தொ.—இனி, ஆழ்வார்கள் விரும்பினபடியை யருளிச்செய்கிறார். (வண்புகழ்நாரணன்) இத்யாதியால். (வண்புகழ்) என்றது-உதாரங்களான கல்யாணகுணங்களை யுடையவனென்றபடி.

வ்யா.—"செல்வநாரணன்" என்றுதொடங்கி

எ.—கல்யாணகுணங்களோபாதி நித்யமுமாய் ப்ரகாரமுமாயிருக்கு மி வ்வஸ்து என்கைக்காக குணங்களை நிதர்ஸநமாகச் சொல்லுகிறது; நித்ய ரான த்ரிவிதசேதநரையும், நித்யமான கல்யாணகுணங்களையு முடையனு யிருக்கையாய்த்து - நாராயணனுகையாவது. அவனுடைய (திண்கழல்சே ரே) - இப்படி ஸம்பந்தம் காதாசித்கமாகை தவிர்ந்து நித்யமானபின்பு, ஸ்வ ரூபஜ்ஞாநமுடையாரை அவன்றானொருநாளும் விடானிறே, ஆஸ்ரிதரை யொருகாலும் விட்டுக்கொடாத திண்மையைப்பற்ற (திண்கழல்) என்கிற து. (சேர்) - ஆஸ்ரயி. உன்னுடையதாய் உனக்கு வகுத்ததாயிருந்தபின்பு நீ கடுகஸ்வீகரி; நமஃ என்றபடி... ...... ...... ......... ............ ......*

முதற்பத்து-பத்தாந்திருவாய்மொழி-எட்டாம்பாட்டு.

செல்வநாரணனென்றசொற்கேட்டலும்
மல்கும்கண்பனிநாடுவன்மாயமே
அல்லுநன்பகலுமிடைவீடின்றி
நல்கியென்னைவிடான்நம்பிநம்பியே.

"நாமிதுக்குமுன்பு நினைத்தும் பேசியும் தப்பச்செய்தோம், இனித் தவிருமித்தனை" - என்று "அவன்குணங்கள் நடையாடாததோரிடத்திலே கிடக்கவேணும்" என்றுபோய், ஒருகுட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக்கொ ண்டு கிடந்தார்; அங்கே, வழிபோகிறானொருவன், சுமைகனத்து, "ஸ்ரீமந் நாராயணா" என்றான்; அச்சொல்லைக்கேட்டுத் தம்முடைய கரணங்கள் அங் கே ப்ரவணமாகிறபடியைக்கண்டு விஸ்மிதராகிறார்.

(செல்வநாரணனென்ற சொல்கேட்டலும்) - ஆழ்வார் பரிஸரத்தில், ப்ரம்ஹசாரியெம்பெருமான் பேர்சொல்லுவாரில்லை, அதிலர்த்தாநுஸந்தாந ம்பண்ணவேண்டா வாய்த்து இவர் நோவுபடுகைக்கு. என்போலவென்னி ல், விஷஹரணமந்த்ரம்போலே. அச்சொல்லு செவிப்பட்ட வளவிலே, கண்ணானது என்னை யொழியவே நீர் மல்கப்புக்கது; நெஞ்சும் அவ்வளவி லே, "எங்குற்றாய்?" என்று தேடப்புக்கது. (மாயமே) "அல்லேன்" என்ற கனுகைக்கு நான் வேண்டிற்று, "ஆவேன்" என்று கூடுகைக்கு நான் வே ண்டிற்றில்லையோ! இதோராஸ்சர்யமிருந்தபடியென்! அவன் பின்னைச்செ ய்கிறதென்னென்னில்; (அல்லுமித்யாதி) தம்மபிஸந்தியொழியவே, தம்மு டைய கரணங்களுக்கு பகவதநுபவமே யாத்ரையாம்படி அவன் மேல்விழு கிற காலமாகையாலே "நல்ல அல்லும் நல்ல பகலும்" என்கிறார். திவாராத் ரவிபாகமற எனக்கு ஸ்நேஹித்து பரிபூர்ணனானவன் என்னை ஸ்வீகரித்து என்னைவிட க்ஷமனாகிறிலன்; அவன்பேர்மாத்ரத்தைக் கேட்டவாறே, என் கண்ணானது பனிமல்காநின்றது; நெஞ்சானது தேடாநின்றது; இதோரா ஸ்சர்யமிருந்தபடியென்! என்கிறார். (இடைவீடின்றி) நானொருகால்தேடி விடாநின்றேன், அவன் இடைவிடாதே ஸ்நேஹியாநின்றான். (என்னைவி டான் நம்பிநம்பியே) அபூர்ணனானவென்னை பூர்ணனானதான் நம்பிவிடுகிறி லன். (நம்பி)-என்னையொரு மதிப்பனாக நினைத்து. நம்பி, அல்லுநன்பகலு மிடைவீடின்றி நல்கிநம்பி என்னைவிடான்; மாயமே. (நம்பியே) இவனையே

தொ.—(செல்வன்) என்றது = ஸ்ரீமானானவனென்றபடி.

வ்யா.—"வாழ்புகழ்நாரணன்" என்று முடிவாக, ஆதிமத்யாவஸாநமாக நம் மாழ்வாரருளிச்செய்கையாலும்,

எ—பரிபூர்ணனென்கிறது. ஸம்ஸாரி சேதநனைப்பெற்று, பெருப்பேறுபெற்றுனயிருக்கிற விவனையே, பரிபூர்ணனென்கிறது லோகத்தார்.... ......*

பத்தாம்பத்து-ஒன்பதாந்திருவாய்மொழி-முதல்பாட்டு.

சூழ்விசும்பணிமுகில்தூரியமுழக்கின
ஆழ்கடலலைதிரைகையெடுத்தாடின
ஏழ்பொழிலும்வளமேந்தியவென்னப்பன்
வாழ்புகழ்நாரணன்தமரைக்கண்டுகந்தே.

பரமபதத்துக்குப்போக உபக்ரமிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்ட ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்த்தாவரஜங்கமங்களுக்குண்டான விக்ருதியை யருளிச்செய்கிறார்.

(சூழ்விசும்பு)-பூமியைச் சூழும்படி யிடமுடைத்தான ஆகாஶத்திலே. (அணிமுகில்) - ஆபரணமான முகிலென்னுதல், ஆகாஶப்பரப்படங்கலும் அணியப்பட்ட முகிலென்னுதல்.

(தூரியமுழக்கின) தூர்யகோஷத்தைப் பண்ணுகின்றன. (சூழ்விசும்பு) இத்யாதி காந்தப்பரொப்பித்து நின்று பெரிய மண்டபங்களிலே நின்று கொட்டுமாப்போலே காணும் இவையிருக்கிறது. "मन्द्रं जगर्जुर्जलदाः" "மந்தம்ஜகர்ஜுர்ஜலதாः"(டசுடு)இவனைப் பெறுகைக்கடியான அவன் வரவிலேபிறந்த விக்ருதியிறேயிது; இவன்றன் போகப்புக்கால் சொல்லவேண்டாவிறே. அவற்றுக்கு அபிமாநிகளான இந்த்ரவருணபர்ஜந்யங்களைச் சொல்லிற்றாகவுமாம். (ஆழ்கடல்) எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கவற்றான அளவுடைய கடல், தைர்யபங்கம் பாந்து அலையாநின்றுள்ள திரையாகிற கையை யெடுத்துக் கூத்தாடிற்றின. (ஏழ்பொழிலும் வளமேந்திய) ஸப்த த்வீபங்களும் புதுக்கணித்தன. உபஹாரங்களைத் தரித்தனவென்றும்மாம். இதெல்லா மாணாக்கண்டென்ன, (என்னப்பன்) எனக்கு பரமபந்துவானவன். இவர்களோடு நிருபாதிகஸம்பந்த மவனுக்குண்டானால், அவனோடு ஸம்பந்தமுள்ளவை யெல்லாவற்றுக்கும் அதிகரிக்கவேண்டி யிருக்குமிறே; ராஜபுத்ரன் போகாநின்றால் ராஜஸம்பந்தமுடையார்க்கெல்லாம் கிஞ்சித்கரிக்கவேண்டுமாப்போலே. (வாழ்புகழ்நாரணன்) ஆஶ்ரிதர் வாழும்படி பண்ணவற்றான கல்யாணகுணங்களையுடைய ஸர்வேஶ்வரன். அவன் றன்னைக் கண்டோவென்னின், (அவன் தாமரைக்கண்டு.) அவன் கேட்குமென்னும் பீதியாலேயோவென்னில், (உகந்தே) ப்ரீதிப்ரேரிதராய். ...*

தொ.—(வாழ்புகழ்) என்றது - நித்யஸித்தங்களான கல்யாணகுணங்களையுடையவ னென்றபடி. ஸர்வத்ர வ்யாப்தங்களான கல்யாணகுணங்களையுடையவ னென்றபடியாகவுமாம்.

வ்யா.—"நாடுநகரமுநன்கறிய நமோநாராயணாய" என்று தொடங்கி

திருப்பல்லாண்டு-நாலாம்பாட்டு.

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்தெங்குள்குழாம்புகுந்து
கூடுமனமுடையீர்கள்வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ
நாடுநகரமும்நன்கறியநமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப்பத்தருள்ளீர்வந்துபல்லாண்டுகூறுமினே.

வ.—கீழ்-அநந்யப்ரயோஜநரை யழைத்தார்; அவர்கள் மங்களாஶாஸநத்துக்கு ப்ரத்யாஸந்நராகையாலே; நீரிலே நீர்சேர்ந்தாற்போலே சேர்ந்திருக்குமிறே. அவ்வளவிலும் பர்யாப்தி பிறவாமையாலே,"ஈஶ்வரன் கைபார்த்திருக்குமவர்கள்" என்னு மிவ்வளவைக்கொண்டு, ஆத்மப்ராப்திகாமரையும், ஐஶ்வர்யகாமரையும் அழைக்கக்கோலி, முந்துற ஆத்மப்ராப்திகாமரை அழைக்கிறார். ஐஶ்வர்யத்திற்காட்டில் ஆத்மப்ராப்தி உத்க்ருஷ்டமென்னும் நினைவாலே யழைக்கிறாரல்லர், அந்த மோக்ஷத்தை யிவர் அநர்த்தமென்றிருக்கையாலே. இனி யெத்தாலே முற்பட வழைக்கிறதென்னில், பகவத்ஸம்பந்தத்துக் குபகரணமான ஶரீரமோக்ஷம் அணித்தாகையாலும், அம்மோக்ஷத்தை ப்ராபித்தால் மீளவொண்ணாமையாலும், ஐஶ்வர்யகாமனுக்கு காலாந்தரத்திலேயாகிலும் பகவத்ஸம்பந்தம்பண்ண யோக்யதையுண்டாகையாலும்; இவனுக்கு அந்த யோக்யதையு மழிகையாலே, தூர்க்கதியைக்கண்டு முந்துறவழைக்கிறார். ப்ரயோஜநாந்தரபரரை " மங்களாஶாஸநம் பண்ண வாருங்கோள்" என்ன, வருவர்களோ வென்னில், பகவத்ப்ராப்தியி லுத்கர்ஷத்தையும், அத்தைப்பற்ற கைவல்யத்தினுடைய நிகர்ஷத்தையும் அறிவித்தால், அத்தைவிட்டு இத்தைப்பற்றவேணும் என்னும் ஆத்மகுணோபேதரை யிறே யிவரழைக்கிறது.

(ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்) (ஏடு) என்பது-பொல்லாங்கு. " உங்களைப் பொல்லாதநிலத்திலே யிடுவதன்முன்னம்" என்று பிள்ளையமுதனார். (ஏடு) என்கிறது - ஸூக்ஷ்மஶரீரத்தை. ஸ்தூலஶரீரத்திற்காட்டில் ப்ரதானமாய், அதினுடைய ப்ரயோஜநரூபமாய் ஆப்ரளய மநுவர்த்திக்கையாலே, " பாலேடு " என்னுமாப்போலே சொல்லுகிறது. (நிலத்திலிடுவதன் முன்னம் ) ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்கு முன்னே. (ஏடு) என்று - உடம்புக்குப்பேராய், ஸ்தூலஸூக்ஷ்மரூபமான ஶரீரம் ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்கு முன்னேயென்னவுமாம். இவ்வாக்யந்தான் - அவர்களுடைய அநர்த்தத்தைக்கண் டழைக்கிறானென்னு மிடந்தோற்றவிருக்கிறதிறே. (வந்து) ஸ்வதந்த்ரராயிருப்பார்க்குத் தம்மளவில் வருமிடத்திலுண்டான தூரத்தைச்சொல்லுகிறது. (எங்கள் குழாம்புகுந்து) கேவலருமொரு ஸமஷ்டியாயிறேயிருப்பது. அது ஸ்வதந்த்ரமாகையாலே அந்யோந்யம் சேராச்சேர்த்தியாயிருக்கும். ஒருத்தருடைய ஸம்ருத்தி ஒருத்தரதாயிறே யித்திரளிலே யிருப்பது. "பரஸ்பரநீசபாவை:" "பரஸ்பரநீசபாவை:"(ஙசச)என்னக்கடவதிறே. இத்திரளில் புகுவார்க்கு எவ்வள வதிகாரம் வேணுமென்னில் ; ( கூடுமனமுடையீர்கள் ) "புகுருவோம்" என்னும் நினைவேவேண்டுவது. அவிலக்ஷணங்களான புருஷார்த்

தொ.—(நாடுநகரமும் நன்கறிய) என்றது-நாட்டாரும் நகரத்தாரும் நன்றாகவறியும்படியாகவென்றபடி.

ஏ—தங்களுக்கு புரஸ்சரணங்களும் கணக்கவேண்டியிருக்க, அதில் விலக்ஷணமான இத்திரளிலே புகுகைக்கு புரஸ்சரணம் வேண்டாதே யிருப்பானென்னென்னில்; அவை அப்ராப்தங்களாகையாலே புரஸ்சரணாதிகள் அபேக்ஷிதங்களாயிருக்கிறன; இது ஸ்வரூபப்ராப்தமாகையாலே வேண்டா. மாதாபிதாக்களை யநுவர்த்திக்கைக்கு இச்சையேவேண்டுவது. (உடையீர்கள்) இந்த இச்சையால்வந்த ப்ரயோஜநாதிஶயத்தாலே "வைஶ்ரவணன்" என்னுமாப்போலே அருளிச்செய்கிறார். கூடுமினைப்பார்க்குச் செய்யவேண்டுவது, முன்புநின்ற சிறுமையைக் குலைத்துவரவேணும். (வரம்பொழிவந்து) "வரம்பொழிய" என்கிறவிது (வரம்பொழி) என்று கிடக்கிறது. ஸர்வேஶ்வரனுக்கு ப்ரகாரபூதனாய், அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை அநுபவிக்க இட்டுப்பிறந்தவன், "ஜராமரணமோக்ஷாய" "ஜராமரணமோக்ஷாய"(௩௪௫) என்கிறபடியே - ஸ்வாநுபவத்தளவிலே யொருவரம்பை யிட்டுக்கொண்டானிறே; அத்தையொழிந்து வாருங்கோள் என்கிறார். (ஒல்லைக்கூடுமினோ) பற்றுகிற புருஷார்த்தத்தினுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்தால், பதறிக்கொண்டுவந்து விழவேண்டாவோ. (ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்) என்ற ஶரீரத்தில் அஸ்த்திரதையைப்பற்ற; இங்கு (ஒல்லை) என்கிறது, பற்றுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தைப்பற்ற. (கூடுமனமுடையீர்கள்) என்றும் (கூடுமினோ) என்று மருளிச்செய்கிறாரிறே யோக்யதையைப்பற்ற. "இத்திரளில் நின்றும் பிறிகதிர்ப்பட்டார் சிலரிவர்கள்" என்று தோற்றுமிறே ஸ்வரூபம் ப்ரகாஶித்தால்.

(நாடுநகரமும் நன்கறிய) இத்திரளிலே புகுருகைக்கு வேண்டுவனவருளிச்செய்தார்; இதுக்குமேல் மங்களாஶாஸநத்துக்கு வேண்டுவன வருளிச்செய்கிறார். (நாடு) என்று - அவிஶேஷஜ்ஞரைச் சொல்லுகிறது; (நகரம்) என்று - விஶேஷஜ்ஞரைச் சொல்லுகிறது. ராஜாவுக்கு ப்ரத்யாஸந்நரிறே நகரஸ்தர். நாட்டார் தூரஸ்த்தரிறே; ஆகையாலே யருளிச்செய்கிறார். (நன்கறிய) நன்றாக வறிய. பகவத் ப்ராத்தியாஸக்தியாலே அவிஶேஷஜ்ஞர் விடும்படியாகவும், அதுதானே ஹேதுவாக விஶேஷஜ்ஞர் பரிக்ரஹிக்கும்படியாகவும். (நன்கறிய) இந்நன்மை யறியவென்னவுமாம். (நமோநாராயணாயவென்று) "இவ்வளவும் போராது, தன் ஸ்வரூபத்தை யுள்ளபடியறிந்து ஸ்வரூபாநுகுணமான கைங்கர்யத்தைப்பெறவேணும்" என்று வைஷ்ணவனாய் வரவேணுமென்று. "அஹமஸ்மி அபராதானாம், பகவதோ வாஹமஸ்மி" "அஹமபிநமம,பகவதஏவாஹமஸ்மி" (௩௪௬) என்றிறே நமஶ்ஶப்தத்துக்கர்த்தமிருப்பது. ஸ்வாமிபக்கல் அநுகூலவ்ருத்தியிறே புருஷார்த்தமாவது. (பாடுமனமுடைப்பத்தருள்ளீர்) நினைத்திருக்குமளவுபோராது; ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடவேணும் என்னும் நெஞ்சுண்டாம்படியான ப்ரேமத்தை யுடையீராகில். (வந்துபல்லாண்டு கூறுமினே)வந்து, பல்லாண்டுபாடுங்கோள். இத்திரளிலே புகுரவேணுமென்றிருப்பீர், அத்தைச்செய்யுங்கோள்; அவ்வளவும்போராது, உங்களுடைய வ்ருத்திவிஶேஷமும் பெறவேணுமென்றிருப்பீர், திருப்பல்லாண்டு பாடுங்கோள் என்று க்ரியையை யிரண்டாக்கி நிர்வஹிக்கவுமாம்.

வ்யா.—“ஓவாதேநமோநாரணாவென்பன்” என்று பெரியாழ்வாரும்,

எ.— பெரியாழ்வார்திருமொழி - ரு-பத்து - க-திருமொழி.

நன்மைதீமைகளொன்றுமறியேன்நாரணாவென்னுமித்தனையல்லால்
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப்புகழ்வானன்றுகண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னையொன்றுமறியேனோவாதேநமோநாரணாவென்பன்
வன்மையாவதுன்கோயிலில்வாழும்வைட்டவனென்னும்வன்மைகண்டாயே.

(நன்மையித்யாதி) நான் திருநாமஞ் சொல்லுகை அத்தலைக்கு நன்மையாய்த் தலைக்கட்டுகிறதோ? தீமையாய்த் தலைக்கட்டுகிறதோ? அறிகிறிலேன். இவனைப்பார்த்தால் தோஷமாய், அவனைப் பார்த்தால் குணமாயிருக்கும்; இத்தலையைப் பார்த்தால் அபராதமாய், அத்தலையைப் பார்த்தால் அபராதஸஹமாயிருக்கும். (நாரணாவென்னுமித்தனையல்லால்) “நல்கத்தானாகாதோ நாரணனைக் கண்டக்கால்” (ந) என்று அபராத ஸஹத்வத்தைக்காட்டும் திருநாமமிறே. ஸம்ஸாரிக ளபராதத்தைப் பொறுத்துவிடமாட்டாதே நிற்கிறவிடமிறே. (புன்மையால்) தண்மையால். (உன்னை) ஸர்வாதிகனான வுன்னை. (புள்ளுவம்பேசி) க்ருத்ரிமம்சொல்லி. (ச) * என்கொள்வனுன்னைவிட் டென்னும் வாசகங்கள் சொல்லுகிறேனல்லேன் (புன்மை) - ப்ரயோஜநத்தை யாசைப்படுகை; (நன்மை) - மோக்ஷத்தை யாசைப்படுகை. “பெருமக்கள்” என்று * பேராளன்பேரோதும் பெரியோரிறே. “மாசூணாவான்கோலத்தமரர்கோன்.” (ரு) (திருமாலே) “மைதிலியும்துதிசெய்யநின்ற” (சா) என்று - ஸ்தோத்ரத்துக் கதிகாரி பிராட்டியிறே. பிரீதிக்குத்தோற்றுச்சொல்லுமவளிறே. “தன்னாகத்திருமங்கை”(எ)என்று அவளுக்கு அநுபவம் ஸத்தாஸித்தியானாற்போலே, எனக்கும் திருநாமம் சொல்லுகை ஸத்தாஸித்தி அன்றிக்கே, ஸர்வாதிகத்வம்; “வானவர்சிந்தையுள்வைத்துச் சொல்லும் செல்வன்” (அ) ப்ரயோஜநத்தோடு சொல்லில் பகவந்மந்த்ரம் கழியுண்கிறதிறே. இதரபலங்களை விட்டு மோக்ஷத்துக் குறுப்பாகச் சொல்லப்பாரும் என்ன (உன்னுமாறுன்னையொன்றுமறியேன்) மாஸ்த்ரோக்தமாக நிரந்தரஸ்ம்ருதிபண்ண வறியேன். (ஓவாதேநமோநாரணாவென்பன்) ப்ரயோஜநம் பெற்றவாறே குலையும் ஐஶ்வர்யகாமர்க்கு, அங்கி கைப்பட்டவாறே குலையும் உபாஸகர்க்கும் இதுதானே ப்ரயோஜநமாகையாலே, ப்ரபந்நர்க்குக் குலையாது. (ஓவாதே) இது மாறினால் எனக்கு ஸத்தை குலையும். சொல்லாதபோது ஸத்தை குலையுமென்பது சொல்லில் உனக்கு அவத்யம் என்பதாகாநின்றீர்; நல்ல வன்மையாயிருந்தது! என்ன; அவ்வன்மைக்குக் குறையென்னென்கிறார் மேல். (உன்கோயிலில்) இத்யாதி.—வன்மை – மிடுக்கு. “கோயிலில்வாழும்” என்று புறம்புள்ள அபிமாநம் குலைகையாலும், தாம் அநந்யப்ரயோஜநராகையாலும் இவருடைய ராஜகுலமிருக்கிறபடி. (கோயிலில்வாழும்) - “భవద్విషయవాసినః” “பவத்விஷயவாஸிந:,” (௩சஎ) “இவற்றின்புறத்தாளென்றெண்ணோ” என்று பகவதபிமாநமுள்ள தேசத்தே கிடக்கையிறே தங்களுக்குப் பேறாக நினைத்திருப்பது. உன்னல் - நினைத்தல்....................*

தொ.—(ஓவாதே) என்றது - விச்சேதியாமே யென்றபடி.

வ்யா.—"நாத்தழும்பெழநாரண" என்றுதொடங்கி "நலந்திகழ்நாரணன்" என்று பெருமாளும்,

எ.— பெருமாள் திருமொழியில் "தேட்டருந்திறல்" [உ] என்கிற திருமொழியில் நாலாம்பாட்டு.—

தோய்த்ததண்டயிர்வெண்ணெய்பாலுடனுண்டலுமுடன்றுய்ச்சிகண்
டார்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய்
நாத்தழும்பெழநாரணவென்றழைத்துமெய்தழும்பத்தொழு
தேத்தியின்புறுந்தொண்டர்சேவடியேத்திவாழ்த்துமென்னெஞ்சமே.

(தோய்த்த தண் தயிர்வெண்ணெய் பால்) - கடைந்து பிரித்த வெண்ணெய்,அதுக்குறுப்பாகத் தோய்த்த தயிர், அதுக்கடியான பால்; (உடனுண்டலும்) - இவையடங்க நிஶ்ஶேஷமாக வொருகாலே அமுதுசெய்தவாறே; உடைக்கொணுவிட்டவாறே கோபித்தாள் தீராவெகுளியளாய். ஸ்நேஹத்துக்கவதியுண்டாகிலிறே கோபத்துக் கவதியுண்டாவது. (ஆய்ச்சிகண்டு) - வாயது கையதுவாகக் கொண்டியோடே கண்டுபிடித்தாளாய்த்து. (ஆர்த்த தோளுடை யெம்பிரான்) - கண்டவாறே பிடித்துக்கொண்டு கட்டினள். (எம்பிரான்) - ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாமைகாட்டி என்னை அநந்யார்ஹனுக்கினவன். (என்னரங்கனுக் கடியார்களாய்)-அவதாரகாலத்தில் இழந்தார் இழவுதீர வந்து ஸுலபரான பெரிய பெருமாளுடைய செயலாலே எழுதிக்கொடுத்தவர்களாய்த்து. (நாத்தழும்பெழ) - நாவானது தழும்பேறும்படி; (நாரணவென்றழைத்து)- 'அம்மே!' என்பானைப்போலே திருநாமத்தை யடைவுகெடச் சொல்லி; (மெய்தழும்பத் தொழுது) - ப்ரணமம் பண்ணினபடி தோற்ற, உடம்பெல்லாம் தழும்பாகச் சிறியாத்தானைப்போலே; (ஏத்தி) - இப்படிப்பட்ட செயல்களைச்சொல்லி யேத்தி; (இன்புறும் தொண்டர்சேவடி) - மநஸ்ஸிலேவைத்து ஏத்துகையாலே விஷயத்தைக் கிட்டினல் பிறக்கும் நிரதிஶயாநந்த யுக்தராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதங்களை; (தொண்டர்சேவடியேத்தி வாழ்த்துமென்னெஞ்சமே) - அவர்கள்தாங்கள் அகப்பட்ட நவநீத சௌர்யத்தில் போகாது என்நெஞ்சு; அதிலே அகப்பட்டவர்கள்தங்களை ஏத்தி வாழ்த்துமித்தனை. ஏத்திவாழ்த்துமிச்செயலுக்கிவர்கள் நிலவராவதே என்று ஸ்தோத்ரத்தைப்பண்ணி, இது நித்யமாகவேணுமென்று மங்களாஶாஸநம் பண்ணும் என்நெஞ்சு. சாத்துப்பாட்டு.—

தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் திறல்விளங்குமாருதியோ டமர்ந்தானறன்னை, எல்லையில்சீர்த்தயரதன்றன்மகனுய்த்தோன்றிற்றதுமுதலாத்தன்னுலகம்புக்கதீரு, கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள் கோழியர்கோன்குடைக்குலசேகரன் சொற்செய்த, நல்லியலின்தமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே.

"భావోనాన్యత్రగచ్ఛతి" "பாவோநாந்யத்ரகச்சதி" (கூசஅ) என்று அங்குப்போகேனென்ற திருவடியை விடமாட்டாமே இங்கேவந்து நித்யவாஸம் பண்ணுகிறவனை. (எல்லையில்சீர்) இத்யாதி - ஸஹஸ்ரகுணனை சக்ரவர்த்திக்கு, "పితరంరోచయామాస" "பிதாம்ரோசயாமாஸ" (கூசக) என்று பிள்ளையாய்ப் பிறந்ததுதொடக்கமாக, பரமபதம் புக்கதுமுடிவாக உண்டான ஸ்ரீ ராமாயணகதையை.

தொ.—(நாத்தழும்பெழ)என்றது-நாவானது தழும்பேறும்படியென்றபடி. (நலந்திகழ்) என்றது - குணங்களாலே விளங்குகிறவென்றபடி.

வ்யா.—"நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி,

எ.—(கொல்லியலும் படைத்தானை) - கொலையை முயலாநின்றுள்ள வேலை யுடைய படையையுடையராய். (கொற்றவொள்வாள்) - வெற்றியையும் அழகையுமுடைய வாளையுடைய. (கோழியர்கோன்) - கோழியர்க்குக் கோன். (கோழி) - உறையூர்; (கோன்) - சோழராஜன். (குடைக்குலசேகரன் சொல்செய்த) - வெண்கொற்றக் குடையை யுடையரான ஸ்ரீகுலசேகரப்பெருமாளருளிச்செய்த. (நல்லியல் இன்தமிழ்மாலை பத்தும்வல்லார்)- அழகிய இயலை உடைய தமிழ்மாலை பத்தும் வல்லார். (நலந்திகழ்நாரணன் அடிக்கீழ்நண்ணுவார்) - பரமபதத்திலே விளங்காநின்றுள்ள ஸர்வேஶ்வரன் திருவடிகளைக் கிட்டப்பெறுவார்கள்.

நாலாந்திருவந்தாதி - முதல்பாட்டு.

நான்முகனைநாராயணன்படைத்தான்நான்முகனும்
தான்முகமாய்ச்சங்கரனைத்தான்படைத்தான்—யான்முகமாய்
அந்தாதிமேலிட்டறிவித்தேனாழ்பொருளைச்
சிந்தாமல்கொண்மினீர்தேர்ந்து.

மஹோபநிஷத் ப்ரஸித்தனான நாராயணனே ப்ரஹ்மருத்ர ப்ரமுகமான ஸகலஜகத்துக்கும் காரணபூதன், ப்ரஹ்மாதிகளடங்கலும் கார்யகோடி கடிதரென்று அபாதிதமான வேதார்த்தத்தைச் சொன்னேன்; இத்தைத் தப்ப விடாதே கொள்ளுங்கோளென்று பரோபதேஶ ப்ரவ்ருத்தராகிறார்.

(நான்முகனை நாராயணன் படைத்தான்) இத்யாதி.— "ఏకో హవై నారాయణఆసీత్" "ஏகோஹவை நாராயண ஆஸீத்" (கடுo) என்கிறபடியே கார்யரூபமான ஸகலபதார்த்தங்களும் நாமரூபவிபாகாநர்ஹமாம்படி தன்பக்கலிலேலயித்து, தானொருவனுமே காரணபூதனாய்க்கொண்டு உளனாய்நின்ற நாராயணன்; "బహుస్యామ్" "பஹுஸ்யாம்" (கடுக) என்கிறபடியே அவ்யவஹிதமான தன் ஸங்கல்பத்தாலே மஹதாத்யண்டபர்யந்தமான ஸமஷ்டி பதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, இவ்வருகுண்டான வ்யஷ்டிபதார்த்தங்களை, சதுர்முகமுகேந ஸ்ருஷ்டிக்கைக்காக "యోబ్రహ్మాణం విదధాతిపూర్వమ్" "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (கடுஉ) என்கிறபடியே, (நான்முகனை) - ப்ரதமம் ப்ரஹ்மாவை, (படைத்தான்) - ஸ்ருஷ்டித்தான். (நான்முகனும்) - "వేదశ్శబ్దేభ్యఏవాదౌ దేవాదీనాంచ కారసః" "வேதஶப்தேப்யஏவாதௌ தேவாதீநாஞ்சகாரஸ:" (கடுங) என்கிறபடியே ஸ்ருஜ்யபதார்த்தங்களினுடைய நாமரூபக்ருத்யங்களை ப்ரதிபாதிக்கிற பழவொழுக்கான நாலுவேதங்களையும் யுகபதேவ உச்சரிக்கைக் குறுப்பான நாலுமுகத்தையுடையனான ப்ரஹ்மாவும். (தான்) - எம்பெருமான்பக்கல் மறித்துக் கேள்விகொள்ளவேண்டாதபடி தானே. (முகமாய்) - ப்ரதாநனாய்க்கொண்டு. "బ్రహ్మణశ్చాపిసంభూతశ్శివః" "ப்ரஹ்மணஶ்சாபிஸம்பூதஶ்ஶிவ:" (கடுச) என்கிறபடியே, (சங்கரனை)-ருத்ரனை, (படைத்தான்) - ஸ்ருஷ்டித்தான் என்கிற. (ஆழ்)-ஶ்ருதிஸாகரத்திலே பிறர்க்குத் தெரியாதபடி மறைந்துகிடக்கிற. (பொருளை) - இப்பரமார்த்தத்தை. (யான்)-பகவத்ப்ரஸாத விஶேஷத்தாலே தத்த்வஜ்ஞாநத்தைக் குறைவற உடைய நான். (முகமாய்) - பரதத்த்வயாதாத்ம்யவேதநத்தில் ப்ரதாநபூதனாய்க்கொண்டு கல்லினும் செம்பினும் வெட்டுமாபோலே ஒருவரால் அடைவு குலைக்கவொண்ணாதபடி. (அந்தாதிமேல்) - அந்

தொ.—(படைத்தான்) என்றது - ஸ்ருஷ்டித்தானென்றபடி.

வ்யா.—“ எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே” என்று திருமழிசைப்பிரானும்,

எ.—தாந்ருபமான ப்ரபந்தத்திலே. (இட்டு)-ஏறிட்டு. உங்கள் அநர்த்தங்கண்டு ஸஹிக்கமாட்டாமல், (அறிவித்தேன்) - அர்த்தித்வநிரபேக்ஷமாக அறிவித்தேன். (நீர்) - அறிகைக்கு யோக்யதையுடைய நீங்கள். (நேர்ந்து) ஸம்ஸாரத்தின் பொல்லாங்கையும் நாம் சொல்லுகிற அர்த்தத்தின் அருமை பெருமையையும் யுக்தியுக்தமாக விசாரித்து. (சிந்தாமல்) - அநவதாநாதிகளாலே நெஞ்சில் நின்றும் நழுவி மங்கிப்போகாதபடியாக. (கொண்மின்)-மநஸ்ஸாலே த்ருடகடிதமாக வைத்துக்கொள்ளுங்கோள். இத்தனையும் செய்யவேணுமென்று தன் செல்லாமையாலே கால்கட்டி இரக்கிறார். (ஆழ்பொருளை) - நசிக்கிற பொருளை என்றுமாம்.

திருச்சந்தவிருத்தம் - எழுபத்தேழாம்பாட்டு.
எட்டுமெட்டுமெட்டுமாயொரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோடிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள்வல்லர்வானமாளவே.

(எட்டுமெட்டுமெட்டுமாய்)-சதுர்விம்ஶதி தத்வங்களுக்கு மாத்மாவாய்நின்று ஸத்தையை நோக்குமவன்; இந்தஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவத்தாலேசொல்லுகிறது: இத்தால்-அண்டகாரணமான ப்ராக்ருத ஸ்ருஷ்டியைச்சொல்லுகிறது. (ஓர் ஏழுமேழுமேழுமாய்)-ஸப்தத்வீபங்களும், அவற்றுக்கு தாரகமான ஸப்தகுலபர்வதங்களும், அந்த த்வீபங்களுக் கவச்சேதகங்களான ஸப்தஸமுத்ரங்களுமாய். அண்டாந்தர்வர்த்திகளான ஸர்வலோகங்களுக்கு முபலக்ஷணம். ஸ்தலசரராயும், ஜலசரராயும், பார்வதேயருமான சேதநரை நினைக்கிறது. (எட்டுமூன்றுமொன்றுமாகிநின்ற) - த்வாதஶாதித்யர்க்கும் அந்தராத்மாவாய்நின்ற. இது ஆராத்ய தேவதைகளுக்கு முபலக்ஷணம். “அக்நாவாஜ்யாஹுதிஸ்ஸம்யக்” “அக்நாவாஜ்யாஹுதிஸ்ஸம்யக்” (௩௫). (ஆதிதேவனை) ஸூக்ஷ்மசிதசித்வஸ்துஶரீரனையும், ஸ்தூலசிதசித்வஸ்துஶரீரனையும், கார்யகாரணங்களிரண்டுமாய்க்கொண்டு ஸர்வஸமாஶ்ரயணீயனானவனை. (எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்று) - அஷ்டாங்க ப்ரணாமத்தைப்பண்ணி, அம்முகத்தாலே யாஶ்ரயித்துநின்று. ப்ரணாமத்துக்கு அஷ்டாங்கதையாவது - பகாபிமாநியாய் விழுகையும், மநோபுத்திகளுக்கு ஈஶ்வரனே விஷயமாகையும், பாத கரத்வய ஶிரஸ்ஸுக்களும் பூமியிலே பொருந்துகையும், “மநோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே। கூர்மவச்சதுர: பாதாந் ஶிரஸ்தத்ரைவ பஞ்சமம்” “மநோபுத்த்யபிமாநேந ஸஹந்யஸ்யதராதலே-கூர்மவச்சதுர:பாதாந்ஶிரஸ்தத்ரைவபஞ்சமம்” (௩௬) என்னக்கடவதிறே. (அவன்பெயரெட்டெழுத்துமோதுவார்கள்) - கீழ்ச்சொன்ன ஜகதந்தராத்மபாவத்துக்கு வாசகமான மந்த்ராந்தரங்களிற்காட்டில் திருவஷ்டாக்ஷரத்தை வாயாலே உச்சரியாநிற்குமவர்கள்; (வல்லர்வானமாளவே)-அர்த்தத்தை மநஸ்ஸாலே அநுஸந்தித்தும், வாயாலே ஶப்தத்தை யுச்சரித்தும், ஶரீரமான ப்ரணாமத்தைப்பண்ணியும் இப்படி மநோவாக்காயங்களாலே பஜிக்குமவர்களிட்ட வழக்கு பரமபதமென்கை. “ஆபோ நாரா இதி ப்ரோக்தா:” “ஆபோநாரா இதிப்ரோக்தா:”(௩௭)என்றும், “நராஜ்ஜாதாநி தத்த்வாநி” “நராஜ்ஜாதாநிதத்த்வாநி”(௩௮)என்றும் ஜகத்காரணவஸ்துவை நாராயணனென்னக்கடவதிறே.

ந்நா.—(வல்லர்) என்றது - ஸமர்த்தரென்றபடி.

வ்யா.—"நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னுநாமம்" என்று உபக்ரமதசையிலே ஒருகாற்சொன்னாற்போலே ஒன்பதின்காற்சொல்லி,

எ.— பெரியதிருமொழி-முதல்பாட்டு.

வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால்பெருந்துயரிடும்பையில்பிறந்து
கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர்தருங்கலவியேகருதி
ஓடினேனோடியுய்வதோர்பொருளாலுணர்வெனும்பெரும்பதந்தெரிந்து
நாடினேனாடி நான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம்.

(வாடினேன்)-கொம்பையிழந்த தளிர்போலே. ஆஶ்ரயத்துக் கழிவில்லாமையாலே இன்னும் நோக்குவோமென்னில், நோக்குகைக்கு யோக்யதையுண்டென்கை. "அநந்யாராகவேணாஹம்" "அநந்யாராகவேணாஹம்" (ரு-ருக) என்கிற பிராட்டியோடொத்த ப்ராப்தி ஸகலாத்மாக்களுக்கு முண்டானபின்பு இப்ப்ராப்தியை யுணர்ந்தால் அநாதிகால மிழந்தவர்க்கு 'வாடினேன்' என்னத்தட்டில்லையிறே. "யஶ்ச ராமம் ந பஶ்யேத்து" "யஶ்சராமம்நபஶ்யேத்து" (ரு-சுo)="ராமம்" என்கிறது-கண்ணுக்கு வகுத்த விஷயத்தைக் காணாதிருக்கிறான் யாவனொருவன்; "யஃ"-எத்தனையேனுமுயர்ந்தவனாகவுமாம். "து"-இதுதப்பினாலும். தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவன்று என்கைக்காக விஶேஷிக்கிறது. "யஞ்ச ராமோ ந பஶ்யதி" "யஞ்சராமோ நபஶ்யதி" (ரு-சுo)- எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக் கிலக்காகாதாரில்லை. "யம்" – எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்பார்வைக்கு இலக்காவார். "யாருமோர்நிலைமையனென வறிவரியவெம்பெருமான் - யாருமோர்நிலைமையனெனவறிவெளிய வெம்பெருமான்". (ரு-சுக) ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞானத்துக்கும்அவிஷயமாயிருக்கும்; ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். எத்தனையேனும் உயர்ந்தவனாகிலும் பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணாகில் அவன் பெரியனல்லன். எத்தனையேனும் சிறியனானவன் பக்கலிலும் தப்பாது அவருடையபார்வை; தப்புகிறான் யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடு மெண்ணப்படான்; எண்ணப்படாமையிலே எண்ணப்படும். எல்லாரும்நிந்தித்து சீ! சீ!! யென்னப்படும்;இவனைநிந்திப்பார் வஸிஷ்டாதிகள்தொடக்கமானார். நால்வரிருவரோவென்னில்; "நிந்திதஸ்ஸ வஸேல்லோகே" "நிந்திதஸ்ஸ வஸேல்லோகே" (ரு-சுo)="லோகே நிந்திதஃ"-இவனை நிந்திக்கைக்குரியரல்லாதாரில்லை. விஷயப்ரவணனானவன், இப்போது பழியாய் மேல் நரகமாயிருக்கச்செய்தே தான்"நல்லதுசெய்கிறோம்"என்றிருக்குமிறே. அப்படி,தான் நல்லது செய்கிறோமென்றிருக்குமோ வென்னில்; "ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே" "ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே" (ரு-சுo)-தானும் தன்னை நிந்தித்துக்கொள்ளும். திருக்கைத்தலமிழந்தவன்† "இற்றைப்புறப்பாடுகாணப்பெறுதநாம் கற்பூரமும் எலுமிச்சங்காயும் பெற்றோமாகில், முடிந்து பிழைக்கலாய்த்து" என்றிருக்குமிறே. ஒருநாளைப் புறப்பாடு இழந்தார் வார்த்தை யிதுவானால் அநாதிகால மிழந்தவர்க்கு 'வாடினேன்' என்றல்லது வார்த்தை யில்லையிறே. 'வாடினேன்' என்ற இதுதான் எவ்வவஸ்தையைப் பற்றச்சொல்லுகிற வார்த்தை? விஷயப்ரவணராய்ப் போந்தபோது அவற்றை அநுபவித்துக் களித்துப்போருகையாலே, வாட்டமில்லை; பகவத்விஷயத்தில் கைவைத்தபின்புதானே வாட்டமில்லை; ஸ்வரூபஜ்ஞானம்பிறந்து பூர்வவ்ருத்த

தா.(கண்டுகொண்டு)என்றது-ஶ்ரவணப்ரத்யக்ஷத்தாலேயறிந்தென்றபடி.

† திருக்கைத்தலம்=நம்பெருமாள் திருக்கைத்தலஸேவை.

எ.—த்தை யநுஸந்தித்தபோதை வார்த்தை. ப்ராப்தி ஸமயத்திலிறே பூர்வ வ்ருத்தத்தை ஸ்மரியாதொழிவது. "ஸோஜஸம்ஸ்மரந்" "கோபஜநம்ஸ்மரந்" (ஙகூஉ) என்னுமளவும் வந்ததில்லையிறே. ஜ்ஞாநலாபவேளை யாகையாலே பூர்வ வ்ருத்தாந்தா னிவர்க்கு ப்ரத்யக்ஷம்போலேயிறே தோற்றுகிறது. (வாடி) என்கிற இவ்வநுபாஷணம், இரண்டிடத்திலும் பொருள்பெற்றுக்கிடக்கிறது. அநாதிகாலமிவ்விழவு ப்ரவ்ருத்தமாய்ப்போந்ததென்றும், மேலே ஓரநர்த்தத்தை விளைத்ததென்றும் தோற்றுகிறது. விஷயப்ராவண்யம் காதாசித்கமாய் அநுதாபம்பிறந்து மீளுகையன்றிக்கே, அநாதிகால மிதுவே யாத்ரையாய்ப்போந்ததென்றும், இவ்வளவன்றிக்கே இதுக்குமேலே விளைந்ததோரநர்த்தத்தைச்சொல்ல ஒருப்பட்டமையும் தோற்றுகிறது. மேல்விளைந்த அநர்த்தந்தானேதென்னில்: (வருந்தினேன் மனத்தால்) - மாநஸமான க்லேஶத்தை அநுபவித்துப்போந்தேன். இந்த்ரியங்கள் விஷயங்களிலே ப்ரவணமாய், அவற்றை அநுபவிக்கக்கோலி, அவற்றை லபியாமையாலும், லபித்தாலும் அவற்றில் அநுபவிக்கலாவதொன்றில்லாமையாலும், மாநஸமான க்லேஶத்தை அநுபவித்துப்போந்தேன். ஸர்வேந்த்ரியங்களுக்கும் கந்தமான மநஸ்ஸை ப்ரத்யகர்த்த ப்ரவணமாக்கமாட்டாமையாலே, மாநஸமான க்லேஶத்தை அநுபவித்தேன். இத்தால் சொல்லிற்றாய்த்து - ஶப்தாதிவிஷயங்களிலே ப்ரவணனாய், திருவடிகளை ஒருநாளும் நினைக்கப்பெற்றிலேனென்றபடி. (பெருந்துய ரிடும்பையில் பிறந்து) - விஷயங்களிலே ருசியைப் பிறப்பித்து, வாஸநையை யுண்டாக்கி, ராக த்வேஷங்களை மிகுத்து, இதிலுண்டான அவித்யாகர்மங்களும் ஶரீராரம்ப ஹேதுவாக வந்து பிறந்தேன். (துயர்) என்று - து:கம். (இடும்பை) என்றும் - து:கம். இத்தால் - ஶரீரந்தான் து:காயதநமுமாய், து:கஹேதுவுமாயிருக்குமென்கை. து:காயதநமுமாய் மேலே அநேகது:கங்களை விளைக்கவும்வற்றாயிருக்கை. "பெருந்துயரிடும்பையில்பிறந்து-கூடி-வாடினேன்" என்னாதே, முதலிலே 'வாடினேன்' என்பானென்னென்னில்; கர்மஸம்பந்தமநாதியாய் அசித்ஸம்ஸர்க்கமும் ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கையாலே நடுவே ஒன்றைப்பிடித்துச் சொல்லுகிறார். (பிறந்து) - ஜநநமரணங்களில்லாதவாத்மா "செத்தான் பிறந்தான்" என்று வ்யவஹாராஸ்பதமாகையாலே. (கூடினேன்) - நித்யமாய், ஏகரூபமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் பகவச்சேஷமானவாத்மாவை, "தேவோஹம்,மநுஷ்யோஹம்" "தேவோஹம் மநுஷ்யோஹம்" என்னலாம்படியானபடி. (கூடினேன்) — அசித்ஸம்ஸர்க்கந்தான் ஸத்தாப்ரயுக்தமென்னலாம்படி பொருந்தினபடி. 'கூடினேன்' என்கையாலே, இதுதான் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்று, ஔபாதிகம்-வந்தேறி என்னுமிடம் தோற்றுகிறது. ராஜபுத்ரன்வழிபோகாநிற்க, வேடர்கையிலே அகப்பட்டாற்போலேயிறே ஆத்மாவுக்கு அசித் ஸம்பந்தந்தான் வந்தபடி. அய:பிண்டத்தை அக்நியினருகே வைத்தால், அக்நிபரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அதிலே ஸங்க்ரமித்தாதல், வாஸநையாலேயாதல் அதினுடைய ஔஷ்ண்யஸ்வபாவத்தையும் நிறத்தையும் பஜித்து அதுதானென்னலாமாப்போலே, இவ்வாத்மாவும் அசித்ஸம்ஸர்க்கத்தாலே அதுதானென்னலாம்படி அசித்கல்பமானபடி. பரமாணுப்பற்று சிவப்புமாறினாலும் வாஸநையாலே சுடும். (கூடி)-ஶரீரவிஶ்லேஷம் அஸஹ்யமாம்படி பொருந்தினபடி. ஜ்ஞாநம் பிறந்தால் ஶரீரவிஶ்லேஷந்தான் ப்ரார்த்தித்துப் பெறவேண்டும்படியானபடி. (கூடி) என்கையாலே, அநாதிகாலமித்தோடே பொருந்திப்

(வரந்தரும்) "ஒழிவில்காலம்" என்று இவனுக்கு ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்தைக்கொடுக்கும். (வலந்தரும்) என்றாலும், அது தன்னையே காட்டும். அங்ஙனன்றிக்கே, (வலந்தரும்) என்று - "యఆత్మదాబలదా" "யஆத்மதாபலதா" (சஉங) என்று தன்னையும்கொடுத்து தன்னையநுபவிக்கைக்கீடான ஶக்தியையும்கொடுக்கும். நித்யஸம்ஸாரியாயின்றுசென்றவனுக்கும், நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளோடொக்க அநுபவிக்கைக்கீடானஶக்தியையும்கொடுக்கும். அங்ஙனன்றிக்கே, (அருளொடுபெருநிலமளிக்கும்வலந்தரும்) தன்னை ஆஶ்ரயித்தவர்தங்களளவன்றிக்கே, தங்களோடு ஸம்பந்தித்தார்க்கும், தங்களருளோடேகூட, பெரியநிலமுண்டு - பரமபதம், அத்தைக் கொடுக்கவல்லராம்படியான ப்ரஸாதத்தைப்பண்ணும்.—(மற்றுந்தந்திடும்) இவனுக்கு ஹிதமாய் இவனறியாதவற்றையும் தானேகொடுக்கும். "இவன்கார்யம் தானறிந்தானோ? நாமன்றோ கடவோம்" என்று தானேகொடுக்கும். கோவிந்தஸ்வாமி, தன்னைக்கண்டவநந்தரம், "நான் கூடப்போருவேன்" என்ன; அவனுடைய முன்புத்தை நினைவையறிந்து, "நீயிங்கேயிருந்து சிறிதுநாள் அநுபவித்துவா" என்று போனானிறே.—(பெற்றதாயினுமாயினசெய்யும்) மாதாவானவள், ஶரீரத்துக்கு உத்பாதகையாமளவிறே; ஆத்மாவுக்கு ஸ்வரூபமான ஜ்ஞாநவிநாஶத்தைப் பிறப்பிப்பானவனேயிறே. "శరీరమేవమాతాపితరౌజనయతః" "ஶரீரமேவமாதாபிதரௌஜநயதः" (சஉச) என்று - விரோதியானஶரீரத்தை உத்பாதித்து விடுமளவிறே அவர்கள் செய்வது; "సహివిద్యాతస్తంజనయతిశ్రేష్ఠంజన్మ" "ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதிதச்ச்ரேஷ்ட்டம்ஜந்ம" (சஉரு) என்று-ஜ்ஞாநப்ரதனானவனேயிறே.—

---

தொ.—(வலந்தரும்) என்றது-மேன்மேலும்அநுபவஜநிதப்ரீதிகாரிதமானகைங்கர்யத்தில் ஸ்வகர்த்ருத்வ ஸ்வபோக்த்ருத்வ ப்ரதிபத்தியன்றியே அந்வயிக்கைக்கீடான பலத்தைக்கொடுக்குமென்றபடி. (மற்றுந்தந்திடும்) என்றது - மற்றும் ஸ்வரூபாநுரூபமானவை யெல்லாவற்றையும் கொடுக்குமென்றபடி. (பெற்றதாயினுமாயினசெய்யும்) என்றது - பாகவதஶேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வஜ்ஞாநமுடைய வதிகாரிக்கு, விதிமூலமாயன்றிக்கே ராகமூலமாய்வருமவற்றையெல்லாம் செய்யுமென்றபடி.

மூ.—கக. ஐஸ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு

வ்யா.—கக.—அத்தை விவரிக்கிறார்,

(ஐஸ்வர்ய) இத்யாதியாலே. அதாவது – "ஐஹலௌகிகைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம்பாரலௌகிகம் । கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி" "ஐஹலௌகிகைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம்பாரலௌகிகம்|கைவல்யம்பகவந்தஞ்ச மந்த்ரோயம ஸாதயிஷ்யதி" (ரு0) என்கிறபடியே – ஐஹிகமாயும், பார

எ.—(நலந்தரும்சொல்லை) ஆர்த்தாநுஸந்தாநமொழியவே பாடத்தைச்சொன்ன மாத்ரத்திலே பக்தியைப் பிறப்பிக்குமென்னுதல்; நலமென்று – வ்ர்த்தமாய், கைங்கர்யத்தைத் தருமென்னுதல்; ஆகையாலே, கைங்கர்யக்துககடியான ருசியைப்பிறப்பிக்குமென்னுதல்; கைங்கர்யம் தருமென்னுதல். (நான் கண்டுகொண்டேன்) இப்படி யிருப்பதொன்றுண்டு என்றறியாத நான் காணப்பெற்றேன். (நாராயணாவென்னும்நாமம்) "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:" "நமோ நாராயணாயேதிமந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:" (சஉகூ)என்னுமத்தை. *

கக.— (அத்தைவிவரிக்கிறார்) என்றது-"குலந்தரும்" என்கிறபாட்டில் அதிகாரிநிர்தேசம் பண்ணுகையாலே, ஸர்வாபேக்ஷித ப்ரதத்வ வைபவமாத்ரத்துக்கு த்ர்ஷ்டாந்தமாகத் திருவுளம்பற்றி அதிகாராநுகுணமாக ஸர்வாபேக்ஷித ப்ரதத்வத்தை வ்யக்தமாகவருளிசெய்கிறாரென்றபடி.

(ஐஹலௌகிகமிதி) – புத்ரபஶ்வந்நாதிரூபமான இஹலோகைஶ்வர்யத்தையும், ஸ்வர்க்காநுபவம்முதலாக ப்ரம்ஹபதபர்யந்தமான பரலோகைஶ்வர்யத்தையும், ஆத்மாநுபவமாத்ரமான கைவல்யத்தையும், நிரதிஶயாநந்தரூபமான பகவதநுபவத்தையும், இந்த மந்த்ரம் ஸாதித்துக்கொடுக்கும்.

தொ.—இவையித்தனையுஞ்செய்யுமதேதென்ன; நலந்தருஞ்சொல்லான நாராயணாவென்னும் நாமம் என்கிறார். "நீராரசொல்லக்கேட்டீர்?" என்ன (நான்கண்டுகொண்டேன்) நான் ப்ரத்யக்ஷமாகக்கண்டுவிட்டேனென்கிறார். இப்படி ஐஶ்வர்ய கைவல்யாத்திகள்விஷயத்திலும தத்ததிகாராநுகுணமான தூலாதிகளை ஊன்றிகொள்வது.

கக.— மேலுக்கவதாரிகை (அத்தையித்யாதி.)

மூலவாக்யார்த்தத்தை யருளிச்செய்கிறார் (அதாவது) இத்யாதியால். (ஐஹலௌகிகமைஶ்வர்யம்) என்றது—பசுபுத்ராதி ஸார்வபௌமத்வபர்யந்தமான ஐஶ்வர்யமென்றபடி. (கைவல்யம்) என்றது ஆத்மாநுபவமென்றபடி. (ச) என்றது – ஸமுச்சயமாகவுமாம்; சரமபர்வத்தை யென்னவுமாம்.

மூ.—அவற்றைக் கொடுக்கும்.

உ௧. கர்ம ஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு

---

வ்யா.—லௌகிகமாயுமிருக்கும் ஐச்வர்யத்தையும், ஆத்மப்ராப்திரூபமான கைவல்யத்தையும், பரமபுருஷார்த்தமான பகவல்லாபத்தையும் ஆசைப்பட்ட அதிகாரிகளுக்கு, ஜபஹோமாதிகளாலே ஸ்வயம் ஸாதநமாய் நின்று, அவ்வோ புருஷார்த்தங்களைக் கொடுக்குமென்கை.

உ௧. இனி, கர்மாத்யுபாய ஸஹகாரித்வரூபமான இதின் வைபவத்தை அருளிச்செய்கிறார்,

(கர்மஜ்ஞாந) இத்யாதியாலே. அதாவது - கர்மயோகத்தில் இழிந்தவர்களுக்கு,

---

எ.— கைவல்யார்த்திக்கு "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந்" "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவ்யாஹரந்" (அ-உ-எ) என்று ப்ரணவமாத்ரத்தை ஸாதநமாக விதித்திருக்க, இங்கு இம்மந்த்ரம் ஸாதித்துக்கொடுக்கும் என்றருளிச்செய்தது-மந்த்ரத்தில ப்ரதமமான ப்ரணவத்தாலே ஸாதித்துக்கொடுக்குமதுபற்ற அருளிச்செய்தாரென்றுகருத்து.

[ஐச்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு]-(ஐஹலௌகிகமாயும் பாரலௌகிகமாயுமிருக்கும் ஐச்வர்யத்தையும், ஆத்மப்ராப்திரூபமான கைவல்யத்தையும், பரமபுருஷார்த்தமான பகவல்லாபத்தையும் ஆசைப்பட்ட அதிகாரிகளுக்கு, ஜபஹோமாதிகளாலே ஸ்வயம ஸாதநமாய் நின்று அவ்வோ புருஷார்த்தங்களைக்கொடுக்கும்) என்று மூலார்த்தம்.

உ௦. — மேல்வாக்யத்துக்கவதாரிகை (இனி) இத்யாதி.

(கர்மயோகத்திலிழிந்தவர்களுக்கு) இத்யாதி-(கர்மயோக)மாவது-யஜ்ஞ தாந தபோத்யாந ஸந்த்யாவந்தந பஞ்சமஹாயஜ்ஞாக்நிஹோத்ர தீர்த்தயாத்ரா புண்யக்ஷேத்ரவாஸ க்ருச்ச்ர சாந்த்ராயண புண்யநதி ஸ்நாந வ்ரத சாதுர்மாஸ்ய பலமூலாசந சாஸ்த்ராப்யாஸ ஸமாராதந ஜபதர்ப்பணாதி கர்மாநுஷ்டாநக்கால்வந்த சாயக்ஷோஷணத்தாலே பாபநாசம்பிறந்து அத்தாலே,இந்த்ரியத்வாரா ப்ரஸரிக்கிற காமரூஜ்ஞாநத்துக்கு ஸப்தாதிகள்விஷயமல்லாமையாலே, விஷயஸாபேக்ஷைபிறந்து யமநியமாஸந ப்ராணாயாம ப்ரத்யாஹார தாரணா த்யாந ஸமாதி ரூபமான அஷ்டாங்கயோக க்ரமத்தாலே யோகாப்யாஸகாலத்தளவும் ஜ்ஞாநத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை. இதுதான், ஜ்ஞாநயோகத்துக்கு ஸஹகாரியுமாய், ஐச்வர்யத்துக்கு ப்ரதாநஸாதநமாயுமிருக்கும் அதிலே. இழிந்தவர்களுக்கு.

---

தா.—உ௧.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.

மூ.—விரோதியைப்போக்கி

---

வ்யா.—ஜபஹோமாதிகளாலே தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், கர்மயோகாரம்பவிரோதியான பாபத்தைப்போக்கி, அந்த கர்மத்தினுடைய அவிச்சேதாபாதகமாய்க்கொண்டு அத்தைத் (தலைக்கட்டிக்கொடுக்கும்). ப்ரதமத்திலே, ஜ்ஞாநயோகத்திலே இழிந்தவர்களுக்கு, தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில், கர்மஸாத்யமான ஜ்ஞாநாரம்ப விரோதி பாப நிவ்ர்த்தியைப்பண்ணி,

---

எ.—(தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில் என்றது-ஸஹாயமாகக் கொள்ளும்போதென்றபடி. (அவிச்சேதாபாதகமாய்க்கொண்டு) என்றது-அந்தராயாபாவத்தைப்பண்ணிக்கொடாநின்றுகொண்டு என்றபடி. "అనేకజన్మసాహస్యాం యోగాస్సిద్ధస్తు యోగినామ్। నిర్వేదకాలస్సంప్రాప్తో యస్సత్త్వే సంసారవిదుః॥, సువిరక్తస్య సుస్యాస్త్రిజన్మ స్తర్పతో వినా। అస్మిన్నతిరజన్యే నైవ కీర్త్యతే నాత్రసంశయః॥" "அநேகைவஹிகர்மாத்யாயோகாஸ்யாத்யந்தியோகிநாம் । ஸித்தேர்நதத்வ்யபேக்ஷாஸ்யதஸ்மாதேகம்பராமவிஷ்ணு:॥, குருரப்யாகிலபாப்மாஜந்மாந்தரக்ரோபிவா । அஷ்டாக்ஷரஜபேநைவக்ஷீயதேநாத்ரஸம்ஶய:॥" (சஉஅ) என்னக்கடவதிறே.

(ப்ரதமத்திலே ஜ்ஞாநயோகத்திலே இழிந்தவர்களுக்கு) என்றது-கர்மயோகத்திலே ப்ரவேஶித்து அதிலே நிர்மலாந்த:கரணராய் ஜ்ஞாநயோகத்திலே இழிகையன்றிக்கே, முதலிலே தானே ஜ்ஞாநயோகத்திலே ப்ரவேஶித்தவர்களுக்கென்றபடி. ஜ்ஞாநயோகமாவது-யோகஜந்யஜ்ஞாநத்துக்கு ஹ்ர்தயகமலம், ஆதித்யமண்டலம் தொடக்கமான ஸ்தலவிஶேஷங்களிலே, எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை விஷயமாக்கி, அவ்விஷயந்தன்னை ஶங்கசக்ரகதாதரமாய், பீதாம்பரயுக்தமாய் கிரீடாதிநூபுராந்தமான திவ்யபூஷணாலங்க்ர்தமாய், லக்ஷ்மீஸஹிதமாகவும் அநுபவித்து, யோகாப்யாஸக்ரமத்தாலே, அநுபவகாலத்தைப் பெருக்கி, அநவரதபாவநாரூபமாக்குகை. (ஜ்ஞாநாரம்பம்) என்றது-ஜ்ஞாநயோகாரம்பமென்றபடி.

---

தொ—(ப்ரதமத்திலே) என்றது-கர்மயோகத்தைப்பண்ணி அநந்தரம் ஜ்ஞாநயோகத்திலே இழிகையன்றிக்கே, முதலிலேதானேயென்றபடி.

---

பி.—உ0.—(கர்மஸாத்யமான ஜ்ஞாநாரம்பவிரோதி பாபநிவ்ர்த்தியைப்பண்ணி) என்றது-அந்தகர்மஸ்த்தாநேதானிருந்து அந்தகர்மம் போக்குகிற ஜ்ஞாநாரம்பவிரோதியான பாபத்தைப்போக்கு மென்றபடி.

மூ.—அவற்றைத் தலைக்கட்டிக்கொடுக்கும்.
உக. ப்ரபத்தியிலே

வ்யா.—அந்த ஜ்ஞாநத்துக்கு நாடோறும அதிசயத்தைப்பண்ணுகிறுகொண்டு, அத்தைத் (தலைக்கட்டிக்கொடுக்கும்). பக்தியோகத்திலே இழிந்தவர்களுக்கு, தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில், பக்தியோகாரம்பவிரோதியான பாபத்தைப்போக்கி பக்திவிவ்ருத்தி ஹேதுவாய்க்கொண்டு அத்தைத் (தலைக்கட்டிக்கொடுக்கும்) என்கை.

உக.— இங்ஙனன்றிக்கே ப்ரபந்நர்க்கு இது செய்யுமுபகாரவைபவத்தை அருளிச்செய்கிறார்,

(ப்ரபத்தியிலே) என்று துடங்கி. அதாவது – கீழ்ச்சொன்னவை போலே துஃஸகமுமாய் ஸ்வரூபவிருத்தமுமாய் இருக்கையன்றிக்கே, ஸுஸகமுமாய் ஸ்வரூபாநுரூபமுமான

ஏ.— (நாடோறும்) என்றது – நாள்தோறுமென்றபடி, பக்தியோகமாவது – தைலதாராவத் அவிச்சிந்நஸ்ம்ருதி ஸந்தாநரூபமான அநுபவத்தை ப்ரீதிரூபாபந்நமாககுகையும், அதுதன்னையறியப்பார்த்தால, ப்ராரப்தகர்மம் கழியும்படி,ஸாதநஸாத்யங்களை அநுஸந்தித்து அதினுடைய ஸங்கோசவிகாஸமாம்படி பரிணமிப்பிக்கை. [கர்மஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவாகளுக்கு] – கர்மயோக ஜ்ஞாநயோகபக்தியோகங்களிலே ப்ரவேசித்தவர்களுக்கு,[விரோதியைப்போக்கி] - (யோகாரம்பவிரோதியான பாபத்தைபபோக்கி), [அவற்றை]-அந்தகர்மஜ்ஞாந பக்தியோகங்களை, [தலைக்கட்டிக்கொடுக்கும்] – முடித்துக்கொடுக்குமென்று மூலார்த்தம்.

உக.—மேல்வாக்யத்துக் கவதாரிகை(இங்ஙனன்றிக்கே என்று துடங்கி.
(இங்ஙனன்றிக்கே) என்றது-உபாஸகர்க்கு, இது செய்யுமுபகாரவைபவமன்றிக்கேஎன்றபடி. (ஸ்வரூபவிருத்தமுமாய இருக்கையன்றிக்கே) என்றது-பாரதந்த்ர்ய (ஸ்வரூபவிருத்தமுமாய் இருக்கையன்றிக்கே) என்றபடி. (ஸ்வரூபாநுரூபமுமான) என்றது-பாரதந்த்ர்ய(ஸ்வரூபாநுரூபமுமான) என்றபடி.

தா.—(நாடோறும) என்றது – நாள்தோறுமென்றபடி. (பக்தியோகத்திலே இழிந்தவர்களுக்கு) என்றது -ப்ரதமம (பக்தியோகத்திலே இழிந்தவர்களுக்கு) என்றபடி. [தலைக்கட்டிக்கொடுக்கும்] என்றது – ஸம்பூர்ணமாக்குமென்றபடி.

உக.— மேலுக்கவதாரிகை (இங்ஙனன்றிக்கே) இத்யாதி. (இங்ஙனன்றிக்கே) என்றது – ஸ்வயத்நஸாத்யங்களான கர்மாத்யுபாயங்களிலே யிழிகையன்றிக்கே யென்றபடி. (ப்ரபந்நர்க்கு) என்றது– "ஈச்வரனே உபாயோபேயம்" என்றிருக்கும் (ப்ரபந்நர்க்கு) என்றபடி.

மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (கீழ்ச்சொன்னவை) என்றது – கர்மாத்யுபாயங்களையென்றபடி.

தி.— (நாடோறும்) என்றது – ப்ரதிதினமுமென்றபடி.

மூ.—இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞானத்தைப்பிறப்பித்து காலக்ஷேபத்தாக்கும்

---

வ்யா.—ப்ரபத்யுபாயத்திலே இழிந்தவர்களுக்கு, தத நுரூபமான பகவத்பாரதந்த்ர்யரூப ஸ்வரூப ஜ்ஞானத்தை விசதமாகப் பிறப்பித்து அர்த்தாநுஸந்தாநாதிகளாலே போதுபோக்குகைக்குமேறுதுவாய், "எனக்கென்றுந் தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம்"

---

ஸ.— (ப்ரபத்யுபாயத்திலே) என்றது - "అనన్యసాధ్యే స్వాభీష్టే మహావిశ్వాసపూర్వకమ్। తదేకోపాయతాయాచ్ఞా ప్రపత్తిశ్శరణాగతిః॥" "அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஸ்வாஸபூர்வகம்। ததேகோபாயதாயாச்ஞா ப்ரபத்திஶ்ஶரணாகதி:" (சஉக) என்று பகவச்சாஸ்த்ரத்திலே சொல்லுகிறபடியே ததேகோபாயத்வப்ரார்த்தனையாகிற ப்ரபத்யுபாயத்திலே என்றபடி. (தத நுரூபமான) என்றது - அந்த ப்ரபத்யுபாயாநுரூபமான என்றபடி. (அர்த்தாநுஸந்தாநாதிகளாலே) என்றது - ஸ்வார்த்தாநுஸந்தாநாதிகளாலே என்றபடி. (ஆதி) ஶப்தத்தாலே, மந்த்ராநுஸந்தாநத்தைச் சொல்லுகிறது. (போதுபோக்குகைக்குமேறுதுவாய்) என்றது-காலயாபநத்திற்கும்ஹேதுவாமென்றபடி.

பெரியதிருமொழி - சு - பத்து - க௦ - திருமொழி - சு—பாட்டு.

"கானெண்குங்குரங்கும் முசுவும்படையா வடலரக்கன்
மானமழித்துநின்றவென்றியம்மா னெனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாயதிருமால் திருநாமம்
நானுஞ்சொன்னேன் நமருமுரைமின் நமோநாராயணமே."

"வ்யா—(கானெண்கும்) இத்யாதி-இந்த்ராதிதேவதைகள் முதுகிட்டுப்போமதொழிய, எதிர் நிற்கமாட்டாதபடி பண்ணும்மிடுக்கையுடையனான ராவணனுடைய துர்மாநத்தைப்போக்குமிடத்தில், இடக்கைவலக்கையறியாதே என்றும் காட்டிலேவர்த்திக்குமதொழிய பூசல்கண்டறியாத, (எண்கும்)-கரடியையும், குரங்கையும், முசுவையும் ஸேனையாகக்கொண்டு, திக்பாலாதிகளை அழியச்செய்த மிடுக்கையுடைய ராவணனுடைய துர்மாநத்தைப்போக்கின ஸர்வாதிகன். (எனக்கென்றும்) இத்யாதி-எனக்கு ஸர்வவிதபோக்யமுமான ஶ்ரிய:பதியினுடைய திருநாமத்தை. மிதுநமானவேஷமேகாணும் இவர்க்கு ரஸிப்பது;

---

தொ.- (ப்ரபத்யுபாயத்திலே) என்றது-ப்ரபத்திவிஷயமான உபாயத்திலே யென்றபடி. (தத நுரூபமான) என்றது - அந்த நிரபேக்ஷோபாய ஸ்வீகாராநுரூபமானவென்றபடி.

சூ.—போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

வ்யா.—என்கிறபடியே, ப்ரதிபாத்யவஸ்துவைப்போலே ஸ்வயம்போக்யமாயிருக்கையாலே போகத்துக்கும் ஹேதுவாயிருக்குமென்கை.

எ.—"ரமமாணா வநேத்ரய:" "ரமமாணாவநேத்ரய:" (௪௩0) என்னுமாப்போலே. (நானும் சொன்னேன்) இதர விஷயங்களினுடையபேரையே சொல்லிப்போந்த நானுமன்றோ சொன்னேன். இனி இது கண்டால் எல்லார்க்கும் சொல்லத்தட்டில்லையிறே; என்னோடு ஸம்பந்தமுடையாரெல்லாரும் இத்தையே சொல்லிப்போருங்கோள். (நமோ நாராயணமே) நமக்குவகுத்தத்தைச் சொல்லிப்போருங்கோள். ஆழ்வார்கள் கோஷ்டியில் இதொழிய வேறொரு திருநாமமுண்டாக நினைத்திருப்பாரில்லை; உண்டாகில், ஆயிரமென்று நிரவிச்சொல்லுமித்தனை; "பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்," "தேவோ நாமஸஹஸ்ரவாந்" "தேவோ நாமஸஹஸ்ரவாந்" (௪௩௧) "பலபசுவுடையான்" என்னுமாப்போலே. ஸ்ருதி, வேறொரு திருநாமமுண்டாகச்சொல்லுமன்றுய்த்து, இவர்கள் வேறொருதிருநாமமுண்டாகச்சொல்லுவது. அந்தர்யாமிப்ராஹ்மணத்தோடு காரணவாக்யங்களோடு வாசியற இத்தையேயிறே சொல்லுவது? இதொழிந்தவை, ஜ்ஞாநஸக்த்யாதிகளைப்போலே; இது, ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள்போலே ஸ்வரூபநிரூபகமாயிருக்கும்." *

(ப்ரதிபாத்யவஸ்துவைப்போலே ஸ்வயம் போக்யமாயிருக்கையாலே) என்றது – "ரஸோ வை ஸ:" "ரஸோவைஸ:" (௪௩௨) என்றும், "எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே" என்றும் இத்யாதியில்படியே, ஏதன்மந்த்ரப்ரதிபாத்யமானவஸ்து, ஸ்வயம்போக்யமாயிருக்குமாபோலே தத்ப்ரதிபாதகமான இமமந்த்ரமும், "தேனும்பாலுமமுதுமாயதிருமால் திருநாமம்" என்கிறபடியே, (ஸ்வயம்போக்யமாயிருக்கையாலே) என்றபடி. (போகத்துக்கும்ஹேதுவாயிருக்கும்) என்றது – ஸதாநுபவத்துக்கும் யோக்யமாயிருக்குமென்றபடி. "ஜபேத்போகதயா மந்த்ரம் ஸததம் வைஷ்ணவோத்தம: । நஸாதகதயா ஜப்யம் கர்த்தவ்யம் விஷ்ணுதத்பரை:॥" "ஜபேத்போகதயாமந்த்ரம் ஸததம்வைஷ்ணவோத்தம:। நஸாதகதயா ஜப்யம்கர்த்தவ்யம் விஷ்ணுதத்பரை:" (௪௩௩).

தொ.— (ப்ரதிபாத்யவஸ்துவைப்போலே) என்றது – "ஸர்வகந்த:" என்றசொல்லப்படுகிற ப்ரதிபாத்யவஸ்துவான ஈச்வரனைப்போலே யென்றபடி.

மூ.—உஉ. "மற்றெல்லாம்பேசிலும்"

வ்யா—உஉ.— இனி, ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகத்வமாகிற இதின் வைபவத்தை அருளிச்செய்கிறார்,
("மற்றெல்லாம்பேசிலும்") என்று தொடங்கி.

எ.— [ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு]-ஸாஸகமுமாய், பாரதந்த்ர்ய ஸ்வரூபாநுரூபமுமாயிருக்கிறப்ரபத்யுபாயத்திலே ப்ரவேசித்தவர்களுக்கு, [ஸ்வரூபஜ்ஞாநத்தைப்பிறப்பித்து]- (ததநுரூபமானபகவத்பாரதந்த்ர்யரூப ஸ்வரூபஜ்ஞாநத்தைவிசதமாகப்பிறப்பித்து), [காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும்ஹேதுவாயிருக்கும்]- (போதுபோக்குகைக்கும், ப்ரதிபாத்ய வஸ்துவைப்போலே ஸ்வயம்போக்யமாயிருக்கையாலே, போகத்துக்கும்ஹேதுவாயிருக்கும்) என்று மூலார்த்தம்.

உஉ.— மேலுக்கவதாரிகை (இனி) என்றுதுடங்கி.

(ஜ்ஞாதவ்யம்) என்றது-(ப்ரபத்யுபாயத்திலே இழிந்தவர்களுக்கு ஜ்ஞாதவ்யம்) என்றபடி.["மற்றெல்லாம் பேசிலுமென்கிறபடியே"]- ("நின்திருவெட்டெழுத்துங்கற்றுமற்றெல்லாம் பேசிலும் என்கிறபடியே"), [அறியவேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு] - (ஆத்மோஜ்ஜீவநத்துக்குடலாக அறியவேண்டும் அர்த்தவிசேஷங்களெல்லாம் இம்மந்த்ரத்துக்குள்ளே உண்டு) என்று மூலார்த்தம்.

பெரியதிருமொழி - அ - பத்து - க0 - திருமொழி - ௩ - பாட்டு.

"மற்றுமோர்தெய்வ முளதென்றிருப்பாரோ
டுற்றிலேன் உற்றதுமுன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம்பேசிலு நின்திருவெட்டெழுத்தும்
கற்றுநான் கண்ணபுரத்துறையம்மானே."

"வ்யா.— வேறுசிலரை ஆஸ்ரயணீயர் அல்லர் என்று நினைத்திருக்கும் அளவேயோ? தாமஸபுருஷர்களோடு ஸம்பர்க்கமுமில்லை; ஸாத்விகரை ஒழிய காலம்செலுத்தவும்மாட்டேன் என்கிறார். * என்னுதமானிடத்தை எண்ணுமவனுமல்லேன், * பேராளன் பேரோதும் பெரியோரையொருகாலும் பிரியுமவனுமல்லேன என்கிறார்.

(மற்றுமோர்தெய்வ முளதென்றிருப்பாரோடுற்றிலேன்) தேவதாந்தரஸ்பர்சம் உடையாரோடு எனக்கொரு ஸம்பந்தமுமில்லை.(உற்றதும்) இத்யாதி—அவர்களைவிட்டு உன்னளவில் நின்றவனும் அல்லேன்; இவ்வநுஷ்டாநந்தான்,"நீர்எங்கே யார்சொல்ல பரிக்ரஹித்தீர்?"என்ன; நீர் சொன்ன முதல்வார்த்தைக்கு அர்த்தமாக நான் நினைத்திருப்பது இது என்கிறார்.

தொ.—உஉ.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. ஜ்ஞாதவ்யஸகலார்த்தம்) என்றது-அர்த்தபஞ்சகமென்றபடி.

மூ.— என்கிறபடியே, அறியவேண்டு மர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு.

---

வ்யா.—அதாவது — "நின் திருவெட்டெழுத்துங்கற்று மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே, ஆத்மோஜ்ஜீவநத்துக்குடலாக அறியவேண்டும அர்த்தவிசேஷங்களெல்லாம் இம்மந்த்ரத்துக்குள்ளே உண்டென்கை.

---

எ.— இதுபின்னை அநேகார்த்தங்களைச்சொல்லுமே! ஜீவஸ்வரூபத்தைச்சொல்லும், நம்முடையஸ்வரூபத்தைச்சொல்லும், ஜீவவஸ்துக்களுக்கும் நமக்கும் உண்டான ஸம்பந்தத்தைச்சொல்லும், ப்ராப்திபலமான கைங்கர்யத்தளவும் வந்திருக்குமே என்ன; அது அநேகார்த்தங்களைச் சொல்லிற்றேயாகிலும், அதிலெங்குமாக நான் அறுதியிட்டிருக்குமர்த்தம் - அநந்யார்ஹசேஷத்வம்; அதுதான் ததீயசேஷத்வபர்யந்தமாயல்லதிராது. (கண்ணபுரத்துறையம்மானே) இதுவன்றோ நீ இங்குவந்திருந்து ஓதுவித்த அர்த்தம்; மேலும் "கண்ணபுரத்துறையம்மானே" என்று போருகையாலே, இதுவும்மப்படி நடத்தப்பார்க்குமென்று அசூயை ஏறிவரும்; அதுக்காக, "கற்று நானல்லது கண்ணபுரத்தானே" என்னுதல்; அன்றிக்கே, ரீதிபேதம் பிறவாமைக்காக "கண்ணபுரத்துறையம்மானே நின் திரு எட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்றுவது. "உன்னையல்லால் இறைவனல்லேன்" என்றபோது "அவன் திருவுள்ளம் என்படுகிறதோ" என்று நஞ்சீயர் அருளிச்செய்ய, பிள்ளை "அல்லிக்கமலக்கண்ணன் ஆகிறான்" என்றருளிச்செய்தார். "நீக்கமில்லாவடியார் தம்மடியாரடியாரெங்கோக்கள்" என்று இவர், பாகவதசேஷத்வத்தளவிலே நின்றவாறே அவன் "அல்லிக்கமலக்கண்ண"னானான். ப்ரபந்நனுடைய லக்ஷணமாகிறது - ஸ்ரீய:பதியே உபாயோபேயங்களென்றிருக்கையும்; தேவதாந்தரஸ்பர்சமும், தாமஸபுருஷர்களோடு ஸம்பர்க்கமுமின்றிக்கேயிருக்கையும், பாகவதரை ஒழியச்செல்லாமை உண்டாயிருக்கையும். தர்மியை அநுபந்தித்திருக்கும் தர்மங்களை நேரே வ்யவஹரித்ததில்லையேயாகிலும், தர்மியைச்சொன்னபோதே தர்மங்களுமெல்லாம் சொல்லிற்றாயிற்றே." ... ... ... *

---

தொ.— மூலார்த்தம் (அதாவது) இப்பாதி. ("நின் திருவெட்டெழுத்து") என்றது - உனக்கு ப்ரதிபாதகமான திருவெட்டெழுத்தென்றபடி. ("எல்லாம்") என்றது - அர்த்தபஞ்சகத்தையென்றபடி.

மூ.—உஎ. அதாவது – அஞ்சார்த்தம்.

---

வ்ய.—உஎ.— (அறியவேண்டும் அர்த்தமெல்லாம்) மாகிறதே தென்னு மாகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்,

(அதாவது அஞ்சார்த்தம்) என்று. ஸ்வஸ்வரூப, பரஸ்வரூப, புருஷார்த்தஸ்வரூப, உபாயஸ்வரூப விரோதிஸ்வரூபங்களாகிற அர்த்தபஞ்சகமும் என்றபடி. "[illegible] ॥" "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகாத்மந: । ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச ॥ வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸ புராணகா: । முநயஶ்ச மஹாத்மானோ வேதவேதார்த்தவேதிந: ॥" (நிக) என்கிறபடியே, ஸகல வேதசாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது இவ்வர்த்தபஞ்சகத்தையுமாகை யாலே, தத்ஸங்க்ரஹமான இம்மந்த்ரத்துக்கும் ப்ரதிபாத்யமிதுவேயி றே. இம்மந்த்ரந்தான், ப்ரணவத்தாலே ப்ரத்யகாத்மஸ்வரூபத்தையும்,

---

எ.—உஎ.— மேலுக்கவதாரிகை [அறியவேண்டும்] என்று தொடங்கி.

[அதாவது] – [அறியவேண்டும் அர்த்தமெல்லாம்] மாவது, [அஞ்சார்த்தம்]– (ஸ்வஸ்வரூப, பரஸ்வரூப, புருஷார்த்தஸ்வரூப, உபாயஸ்வரூப, விரோதிஸ்வரூபங்களாகிற அர்த்தபஞ்சக) மென்று மூலார்த்தம்.

உக்தார்த்தத்தில் ப்ரமாணம் காட்டுகிறார் ("ப்ராப்யஸ்யேதி") ப்ராப்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தையும், ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தையும், ப்ராப்த்யுபாயத்தையும், ப்ராப்திபலத்தையும். ப்ராப்திவிரோதியையும், இதிஹாஸபுராணங்களோடேகூடின ஸகலவேதங்களும் வேதவேதார்த்தப்ரகாரான மஹாத்மாக்களான ருஷிகளும் சொல்லாநின்றார்கள்.[அறியவேண்டுமர்த்தமெல்லாம்]இம்மந்த்ரத்துக்கு ள்ளே [உண்டு]என்றருளிச்செய்த அம்சத்தை ஸஹேதுகமாக விசதீகரித்தருளுகிறார் (தத்ஸங்க்ரஹமான) என்று தொடங்கி. (ப்ரணவத்தாலே ப்ரத்யகாத்மஸ்வரூபத்தையும) என்றது – ப்ரணவம், அக்ஷரத்ரயாத்மகமாகையாலே, ஆறையவும் என்றதுவியாமாய், பகவதநந்யார்ஹசேஷத் வாஶ்ரயோ ஜீவ: என்று ப்ரத்யகாத்மஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கக்கடவ தாயிறே, இருப்பதென்றபடி.

---

தொ.—உஎ.— மேலுக்கவதாரிகை (அறியவேண்டும்) இத்யாதி.

மூலார்த்தம் (ஸ்வஸ்வரூப) இத்யாதி. உக்தார்த்தத்தில் ப்ரமாணம் காட்டுகிறார் ("ப்ராப்யஸ்ய") இத்யாதி. ("மஹாத்மாந:") என்றது— அதிஶயிதஜ்ஞானவான்களானவென்றபடி. இம்மந்த்ரம் அர்த்தபஞ்சக ப்ரகாஶகமானபடியை அருளிச்செய்கிறார் (இம்மந்த்ரந்தான்) இத்யாதியால்.

---

பி.— உஎ.— அர்த்தபஞ்சகத்தை இம்மந்த்ரம் ப்ரதிபாதிக்கும்படி யென்னென்ன அருளிச்செய்கிறார் (இம்மந்த்ரந்தான்ப்ரணவத்தாலே) என்று தொடங்கி.

மூ.— உச. பூர்வாசாரியர்கள்

வ்யா—.நமஸ்ஸாலே விரோத்யுபாய ஸ்வரூபங்களேயும், நாராயண பதத்தாலே பரஸ்வரூபத்தையும, அதில் சதுர்த்தியாலே பலஸ்வரூபத்தையும் ப்ரதிபாதிக்கக்கடவதாயிறே இருப்பது.

உச.— இம்மந்த்ரார்த்தவைபத்தை அருளிச்செய்கிருர்மேல், (பூர்வாசார்யர்கள்) என்று துடங்கி. அதாவது-நாதயாமுநயதிவராதிகளான நம்பூர்வாசார்யர்கள்,

எ.— (நமஸ்ஸாலே, விரோத்யுபாயஸ்வரூபங்களேயும்) என்றது - பதத்வயாத்மகமான நமஸ்ஸு, மஃ என்கிற ஷஷ்ட்யந்தத்தாலேஜ்ஞாத்ருத்வபலாயாதகர்த்ருத்வத்தாலே "ஸ்வதந்த்ரஃகர்த்தா" "ஸ்வதந்த்ரஃகர்த்தா" (சாகூச)என்கிற மீமாம்ஸாவாக்யந்யாயத்தாலே வந்த பகவச்சேஷத்வவிரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைச் சொல்லுகையாலே, விரோதிஸ்வரூபத்தையும், மஃ ந என்று ஸ்வரக்ஷணஸ்வார்வயநிவர்த்தியைச் சொல்லுகையாலே, அத்யந்தபாரதந்த்ரனனவனுக்கு அர்த்தாத் சேஷியானவனே உபாயமாகவேண்டுகையாலே உபாயஸ்வரூபத்தையும், ப்ரதிபாதிக்கக்கடவதென்றபடி. (நாராயணபதத்தாலே, பரஸ்வரூபத்தையும்) என்றது-ஷஷ்டீதத்புருஷனாலே, தன்னையொழிந்த ஸமஸ்தவஸ்துக்களுக்கும் தான் தாரகமாயிருக்கையாகிற பரத்வத்தைச் சொல்லுகையாலேயாதல் ; பஹுவ்ரீஹிஸமாஸத்தாலே,சேதநாசேதநங்களுக்கு அந்தராத்மாவாய் நியந்தாவாய் இருக்குமிருப்பைச் சொல்லுகையாலேயாதல் ; பரஸ்வரூபத்தையும், ப்ரதிபாதிக்கக்கடவதென்றபடி. (அதில், சதுர்த்தியாலே பலஸ்வரூபத்தையும்) என்றது - "ப்ரார்த்தநாயாம்சதுர்த்தீ" என்று இந்தசதுர்த்தி கைங்கர்யப்ரார்த்தநாப்ரகாசகமாகையாலே, ப்ராப்திபலவேஷத்தையும் பரதிபாதிக்கக்கடவதாயிறே இருப்பதென்றபடி.

உச.— மேல்வாக்யத்துக்கவதாரிகை (இம்மந்த்ரார்த்தவைபவ) மென்றுதுடங்கி.

(மேல்) என்றது - இனிமேலென்ருய் மந்த்ரவைபவ ப்ரதிபாதநாநந்தர மென்றபடி. (மந்த்ரார்த்தவைபவத்தை அருளிச்செய்கிருர) என்றந்வயம். [பூர்வாசாரியர்கள்]- நாதயாமுநயதிவராதிகளான நம்பூர்வாசார்யர்கள், (ஆதி) ஶப்தத்தாலே எம்பார்துடங்கி திருவாய்மொழிப்பிள்ளையளவும் உள்ளஆசார்யர்களேச் சொல்லுகிறது. [பூர்வாசார்யர்கள்]-(நாதயாமுநயதிவர) ப்ரப்ருதிதிருவாய்மொழிப்பிள்ளை பர்யந்தமான நம்மாசார்யர்கள்,

தொ.—உச.— மேலுக்கவதாரிகை (இம்மந்த்ரார்த்த) இத்யாதி.
மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.

பி.—உச.—ஶப்தவைபவத்தை அருளிச்செய்தார் கீழ் ; இதின் வைபவத்தை அருளிச்செய்கிருர் [பூர்வாசார்யர்கள்] என்றுதுடங்கி.

மூ.— இதிலர்த்தமறிவதற்குமுன்பு தங்களைப்பிறந்தார்களாக நினைத்திரார்கள் ; இதிலர்த்தஜ்ஞாநம பிறந்தபின்பு. "பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.

---

வ்யா.— "அன்று நான்பிறந்திலேன்" என்கிறபடியே, இம்மந்த்ரத்தில் அர்த்தமறிவதற்குமுன்பு தங்களைப்பிறந்தார்களாக நினைத்திரார்கள் ; இதில், அர்த்தஜ்ஞாநம் தங்களுக்குண்டானபின்பு ("பிறந்தபின்மறந்திலேன்") என்று ஆழ்வார் திவ்யஸூக்தியில்சொல்லுகிறபடியே, இம் மந்த்ரார்த்தத்தையொழிய மற்றொன்றால் (காலக்ஷேபம் பண்ணியறியார்கள்) என்கை. வேதஶாஸ்த்ரங்கள், ஆழ்வார் அருளிச்செயல்கள் இவற்றால போதுபோக்கும்போதும்

---

எ.— [இதில் அர்த்தமறிவதற்கு முன்பு] – (இம்மந்த்ரத்தில்) சொல்லப்படுகிற (அர்த்தமறிவதற்கு முன்பு), [தங்களைப்பிறந்தார்களாகநினைத்திரார்கள்]; [இதில் அர்த்தஜ்ஞாநம் பிறந்தபின்பு] – (இதில்அர்த்தஜ்ஞாநம் தங்களுக்குண்டானபின்பு, ["பிறந்தபின்மறந்திலேன் என்கிறபடியே]-("பிறந்தபின்மறந்திலே")னென்கிற ஆழ்வார் திவ்யஸூக்தியில்சொல்லுகிறபடியே), [இத்தையொழிய வேறொன்றால்]-இம்மந்த்ரார்த்தத்தை ஒழிய மற்றொன்றால), [காலக்ஷேபம்பண்ணியறியார்கள்]. என்றுமூலார்த்தம்.

"ఆచినోతి హి శాస్త్రార్థాన్ ఆచారే స్థాపయత్యపి । స్వయమాచరతే" ஆசிநோதி ஹிஶாஸ்த்ரார்த்தா நாசாரேஸ்தாபயத்யபி । ஸ்வயமாசரதே" (சா.ரு) என்று ஆசார்யலக்ஷணம் நிர்வஹிக்கும்போது (வேதஶாஸ்த்ரங்கள்) என்ன, (ஆழ்வார்களருளிச்செயல்கள்) என்ன இவற்றைக்கொண்டு [காலக்ஷேபம்]பண்ணவேண்டியிருக்க, [இத்தைஒழியவேறொன்றால் காலக்ஷேபம் பண்ணி அறியார்கள்] என்று சொல்லக்கூடுமோவென்னும் ஶங்கையை உட்கொண்டு பரிஹாரம அருளிச்செய்கிறார் (வேதஶாஸ்த்ரங்கள்) என்று தொடங்கி.

---

தா.— ("அன்று") என்றது-இச்சேதநா உஜ்ஜீவநார்த்தமாக ஈஶ்வரன் க்ருஷிபண்ணுங்காலத்திலேயென்றபடி. ("பிறந்திலேன்") என்றது - ஜ்ஞாநரூபஜந்மத்தை யுடையோனல்லேனென்றபடி. (இதில்) என்றது-இம்மந்த்ரத்திலென்றபடி. ["பிறந்தபின்மறந்திலேன்"] என்றது-ஜ்ஞாநஜந்மத்தை ப்ராபிக்கப்பெற்றபின்பு அந்த ஜ்ஞாநஜந்மத்துக்கு ப்ரச்யுதியையுடையேனல்லேனென்றபடி.

வேதார்த்தவிசாரத்காலே காலக்ஷேபம் பண்ணவில்லையோ? என்ன, அருளிச்செய்கிறார் (வேதஶாஸ்த்ரங்கள்) இத்யாதியால்.

---

பி.—எப்போதும் [இத்தை] யேகொண்டு [காலக்ஷேபம்] பண்ணுகிறார்களோ? (வேதஶாஸ்த்ரங்கள் அருளிசசெயல்கள்) கொண்டு போதுபோக்கவில்லையோ ? என்ன அருளிச்செய்கிறார் (வேதஶாஸ்த்ரங்கள் ஆழ்வார் அருளிச்செயலகள்) என்று தொடங்கி.

வ்யா.— இம்மந்த்ரார்த்தத்தைஉட்கொண்டே அநுஸந்திக்கையாலே, (இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்) என்னத்தட்டில்லை.

---

எ.— (இம்மந்த்ரார்த்தத்தை உட்கொண்டே அநுஸந்திக்கையாலே) என்கிற இடத்தில், மந்த்ரார்த்தமாவது - அர்த்தபஞ்சகம்; அத்தை உட்கொண்டே அநுஸந்திக்கையாவது - "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂" "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்" என்று துடங்கி "𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃" "வதந்தி ஸகலா வேதா:" என்கிறபடியே ஸகலஶாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது அர்த்தபஞ்சகத்தையாகையாலே, அத்தை (உட்கொண்டே அநுஸந்திக்கையாலே) என்றபடி.

திருச்சந்தவிருத்தம்—அறுபத்துநாலாம்பாட்டு.

"நின்றதெந்தையூரகத் திருந்ததெந்தைபாடகத்து
அன்றுவெஃகணைக்கிடந்த தென்னிலாதமுன்னெலாம்
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன்
நின்றதுமிருந்ததுங்கிடந்ததுமென்னெஞ்சுளே."

"வ்யா—(நின்றதெந்தையூரகத்து) த்ரைவிக்ரமம்பண்ணின தூளி தாநந்தோற்றத் திருவூரகத்திலே நின்றருளிற்று, எனக்கு ஸ்வாமியென்று நானிசைகைக்காக; நிலையழகைக்காட்டி ருசியைப்பிறப்பித்து த்ரைவிக்ரமாபதாநத்தை ப்ரகாஶிப்பித்து முறையை உணர்த்துகைக்காக; என்கை, அதவா, எனக்கு இசைவின்றிகே இருக்கச்செய்தேயும்வந்து நின்றருளுகிறது உடையவன் உடைமையை இழக்கமாட்டாமையாலே நின்றருளுகிறான் என்றுமாம. (இருந்ததெந்தைபாடகத்து) அந்தநிலையழகிலும் எனக்கு ஆபிமுக்யம் பிறக்கக்காணாமையாலே இருப்பழகைக்காட்டி "𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑌃" "குணைர்தாஸ்யமுபாகத:" (சகூ) என்கிறபடியே "நீ எனக்குஸ்வாமி, நான்அடியேன்" என்னும் முறையுணருகைக்காகத் திருப்பாடகத்திலே இருந்தருளினான். (அன்றுவெஃகணைக்கிடந்தது) கீழ்ச்சொன்ன இரண்டு திருப்பதிகளிலும் எனக்கு ருசிபிறவாதவன்றாகத் திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளிற்றும. அத்திருப்பதிகளை ஆஶ்ரயித்த காலத்துக்கவதி என்னென்னில்; (என்னிலாதமுன்னெலாம்) நானில்லாதமுற்காலமெல்லாம்; நான் அபிமுகீகரிப்பதற்கு முன்பெல்லாம்; "என்னுகி நானுகி" என்னககடவதிறே.உபயவிபூதிநாதனான தான் ஸம்ஸாரியான எனக்கு ருசிபிறவாதகாலமெல்லாம் ருசி பிறக்கைக்காக நிற்பது இருப்பது கிடப்பது ஆவதே ! என்னுடையஸத்தை தன்னுடைய கடாக்ஷாதீநமாயிருக்க, இத்தலையில் கடாக்ஷம் தனக்குத்தேட்டமாவதே !!.

மூ.— உரு. வாசகத்திற்காட்டில்

---

வ்யா.— உரு.—வாசகஶக்திதானே, ஸர்வத்தையும் ஸாதித்துக்கொடுக்கவற்றாயிருக்க, இதினுடைய வாச்யத்திலே இவர்களூன்றுகைக்கு ஹேதுவேதென்ன, அருளிச்செய்கிறார்,

(வாசகத்திற்காட்டில்) என்று தொடங்கி.

---

எ.— அக்காலத்தில நீ செய்த தென்னென்னில; (அன்று நான்பிறந்திலேன்) தன் திருவடிகளிலே தலைசாய்க்கைக்காக ஸ்ருஷ்டிகாலத்திலே நாமரூபங்களைத்தந்தருள, விஷயாந்தரப்ராவண்யத்தாலே அநுபவிக்கப்பெற்றிலேன். (நான்பிறந்திலேன்) ஆத்மாவுக்கு ஜந்மமாகிறது ஜ்ஞாநலாபமாகையாலே அஜ்ஞாநாய்ப்போனேன்; "असद्ब्रह्मेति वेद चेत्, असन्नेव स भवति" "அஸத்ப்ரஹ்மேதி வேதசேத், அஸந்நேவஸபவதி" (சாங-எ) என்னக்கடவதிறே. "क्रियान् ब्रह्मणः पिता" "கரீயாந்ப்ரஹ்மத: பிதா" (சாங-அ). (பிறந்தபின் மறந்திலேன்) அவன் க்ருஷியாக எனக்கு அறிவு பிறந்தபின்பு மறந்தறியேன். "मत्तः स्मृतिर्ज्ञानमपोहनञ्च" "மத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச" (சாங-கூ) அவனடியாகப்பிறந்தஜ்ஞாநம், "மதிநலம்" என்கிறபடியே பக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே விஸ்ம்ருதிப்ரஸங்கமில்லையிறே. ஆக, தன்னுடைய ஸத்பாவா ஸத்பாவங்களாகிறன— பகவத்விஷயத்திலே ருசிபிறக்கையும், அதின்றிக்கே ஒழிகையும். (நின்றதுமிருந்ததுங்கிடந்ததுமென்னெஞ்சகமே) எனக்கு மறக்கவொண்ணாதபடி ருசிபிறந்தபின்பு அவன், திருப்பதிகளில் பண்ணின செயல்களெல்லாவற்றையும், திருப்பதிகளைக் காற்கடைக்கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே பண்ணியருளாநின்றான். முதலிலே தான் எனபககலிலே அபிநிவிஷ்டனாய், அஸத்ஸமனாயிருந்துள்ள என்னையும் உளனாம்படிபண்ணி, தன்னை மறக்கவொண்ணாதபடியான ப்ரேமத்தை விளைத்து, அதுக்கு விஷயபூதனாய்த் தன்னுடைய விடாயுந்தீர்ந்தானென்றதாய்த்து. "சிந்தையுட்சென்றிருந்து தீவினைகள்தீர்த்த" என்றார்கீழ்; "நின்றதுமிருந்ததுங் கிடந்ததுமென்னெஞ்சகமே" என்று அநுபவத்தைச் சொன்னார் இங்கு. இவை இரண்டாலும், ஸாதநாந்தரநிஷ்டரிற்காட்டில் தம்முடைய அதிகாரத்துக்குண்டான ஏற்றத்தை அருளிச்செய்து விட்டாராய்த்து." ... ... ... *

உரு.—மேல்வாக்யத்துக்கவதாரிகை (வாசகஶக்தி) என்று தொடங்கி.

(ஸர்வத்தையும்) என்றது- ("ஐஹலௌகிகம்") இத்யாதிப்படியே ஐஶ்வர்யாதி (ஸர்வத்தையு) மென்றபடி. ( ஊன்றுகைக்கு ) என்றது - நிஷ்டராகைக்கென்றபடி.

---

தொ.—உரு.—மேலுக்கவதாரிகை (வாசகஶக்திதானே) இத்யாதி. (ஸர்வத்தையும்) என்றது - ஐஶ்வர்யாதிகளை யென்றபடி. வாச்யத்திலே) என்றது - அர்த்தபஞ்சகத்திலே என்றபடி. [ஊன்றுகைக்கு] என்றது - ஊற்றமுடையராயிருக்கைக்கென்றபடி.

மூ.—வாச்யத்திலே ஊன்றுகைக்கடி, ஈஶ்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை.

---

வ்யா.— அதாவது—ஸாவபலத்துக்கும் ஸ்வயம் ஸாதநமாயும், ஸாதநாந்தரங்களுக்கும் ஸஹகாரியாய் நின்று தலைக்கட்டிக்கொடுத்தும், போருகிற இதினுடைய வாசகஶக்திதானே அமைந்திருக்கச்செய்தே, அதிலுங்காட்டில் கீழ்ச்சொன்னபடியே, இம்மந்த்ரத்தினுடைய (வாச்யத்திலே, பூர்வாசார்யர்களூன்றுகைக்கடி,) உபேயாந்தரபரராய் இதனைஸாதநமாகக்கொண்டு ஸாதித்தல, உபாயாந்தரபரராய் இத்தை ஸஹகாரியாகக்கொள்ளுதல் செய்யுமவர்களைப்போலன்றிக்கே, உபாயோபேயங்களிரண்டும் ஈஶ்வரனே என்று ப்ரதிபத்திபண்ணி யிருக்கையென்றபடி.

---

எ.— (ஸாவபலத்துக்கும) என்றது — ஐஶ்வர்யாதி ஸர்வபலத்துக்குமென்றபடி.
(ஸ்வயம்ஸாதநமாயும்) என்றது — "చతురన్తాం మహీం భోక్తుం ప్రాప్తుం వా మరరాజతాం । అష్టాక్షరో హ్యుపాయస్స్యాత్ త్రివర్గస్య తు కిం పునః ॥" "சதுரந்தாம் மஹீம் போக்தும் ப்ராப்தும்வாமரராஜதாம் । அஷ்டாக்ஷரோஹ்யுபாயஸ்யாத் த்ரிவர்க்கஸ்ய து கிம்புநஃ॥" (சசப) என்கிறபடியே ஸ்வயம்ஸாதநமாயுமென்றபடி. (ஸாதநாந்தரங்களுக்கும்) என்றது— கர்மஜ்ஞாநாதி (ஸாதநாந்தரங்களுக்கும்) என்றபடி. (வாசகஶக்திதானே அமைந்திருக்க) என்றது—ஶப்தஶக்திதானே அதிகாராநுகுணமாகப் பலத்தைக்கொடுக்கைக்கு ஸமர்த்தமாயிருக்கச்செய்தே என்றபடி. (கீழ்ச்சொன்னபடியே) என்றது—[பூர்வாசார்யர்கள்] என்கிற கீழ்வாக்யத்தில் சொன்னபடியே என்றபடி. (வாச்யத்திலே) என்றது - அர்த்தத்திலே என்றுய் அர்த்தபஞ்சகத்திலே என்றபடி. (உபேயாந்தரபரர்) என்றது-ஐஶ்வர்ய கைவல்யார்த்திகளென்றபடி. (உபாயாந்தரபரர்) என்றது-உபாஸகரென்றபடி. [வாசகத்தில் காட்டில்]- ஸர்வார்த்தஸாதகமான திருமந்த்ரத்தில் காட்டில், [வாச்யத்திலே]- திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்திலே, [ஊன்றுகைக்கடி]-பூர்வாசார்யர்களூன்றுகைக்கடி, [ஈஶ்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை] - உபாயோபேயங்களிரண்டு மீஶ்வரனே என்று ப்ரதிபத்திபண்ணி யிருக்கையென்று மூலார்த்தம்.

---

தொ.—மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (அமைந்திருக்கச்செய்தே) என்றது — பலஸித்திக்குப் பொருந்தியிருக்கச்செய்தேயென்றபடி (அதிலுங்காட்டில்) என்றது — அம்மந்த்ரத்திலுங் காட்டிலென்றபடி (கீழ்ச்சொன்னபடியே) என்றது — [பூர்வாசார்யர்கள்] இத்யாதிவாக்யத்தாலே சொன்னபடியேயென்றபடி. [வாச்யத்திலே] என்றது—அர்த்தபஞ்சகத்திலே யென்றபடி. (ஊன்றுகைக்கு) என்றது — ஊற்றமுடையராயிருக்கைக்கென்றபடி. [அடி] என்றது — காரணமென்றபடி.

---

பி.—உகு.—(கீழ்ச்சொன்னபடியே) என்றது — [இத்தைஒழியவேறொன்றால் காலக்ஷேபம்பண்ணியறியார்கள்] என்றதனை. (ஸஹகாரியாகக்கொள்ளுதல்) என்றது — கர்மஜ்ஞாநங்களுக்கு (ஸஹகாரியாகக் கொள்ளுதல்) என்றபடி.

வ்யா. — (ஆக) திருமந்த்ரத்தினுடைய [சீர்மைக்குப்போரும்படி] என்று துடங்கி இவ்வளவும், வாய்வந்தபடி அநுஸந்திக்க ஒண்ணுதபடியான இதினுடைய கௌரவத்தையும், ஈச்வரன், தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையால் வந்த ஏற்றத்தையும், ஸகலசாஸ்த்ரங்களிலும், ஸகலமந்த்ரங்களிலும், வாச்யந்தன்னிலுங் காட்டில், இதுக்குண்டான பெருமையையும், அக்ரமமாகச்சொல்லி லும் தன்கார்யம் செய்யுமாதிக்யத்தையும், அபேக்ஷித ஸகலபலப்ரதத் வரூப மஹாத்ம்யத்தையும், கர்மாத்யுபாய ஸஹகாரித்வரூபமான உத் கர்ஷத்தையும், ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகதயாவந்த மஹாத் ம்யத்தையும், ஏதத்ப்ரதிபாத்யார்த்த கௌரவவிசேஷத்தையும் அரு ளிச்செய்கையாலே இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை எல்லாரும் அறியும்படி தர்சிப்பித்தருளினாராய்த்து.

---

எ. — கீழ்ச்சொன்ன அர்த்தங்களை யெல்லாம் சேரப்பிடித்தருளிச்செய் கிறார் (ஆக) என்று துடங்கி. (ஆக) என்றது - [திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்கு] என்று துடங்கி [ஈச்வரனே உபாயோபேயமென்று நினைத் திருக்கை] என்னுமளவாக என்றபடி. (எல்லாருமறியும்படி தர்சிப்பித் தருளினார்) என்றது - இம்மந்த்ரத்தினுடைய ப்ரபாவமும், இதினர்த்த ப்ரபாவமுமறிந்தார்களாகில், தங்களுக்குமிது அவச்யம்வேணுமென்று ஆசார்யோபதேச பூர்வகமாக இத்தையறிந்து உஜ்ஜீவிப்பர்களென் னும் அபிப்ராயத்தாலே.

---

தொ. — [திருமந்த்ரத்தினுடைய] [வா - ௩] என்றுதுடங்கி [ஈச்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை] என்னுமளவாகச் சொன்ன அர்த்தத்தை நிகமித்தருளுகிறார் (ஆக) இத்யாதியால். (வாய் வந்தபடி) என்றது - வாய்க்கு வந்தபடியென்றும், ப்ரேமபாரவச்யமா யென்றபடி. ஒண்ணுத என்றது-கூடாதவென்றபடி. (இதினுடைய) என் றது - திருமந்த்ரத்தினுடைய வென்றபடி. (அக்ரமமாகச்சொல்லிலும்) என்றது-ப்ரேமபாரவச்யனாய் அநதிகாரிகள் செவிப்படும்படி அநுஸந் திக்கிலுமென்றபடி. (தன்கார்யம்) என்றது - அநுஸந்திக்குமவர்களுக்கு ரக்ஷகத்வமேயென்றபடி. (கௌரவ விசேஷத்தையும்) என்றது - கௌரவாதிக்யத்தையுமென்றபடி; அதாவது - அறியுமவர்களுக்கு ஸத்தையுண்டாம்படி யிருக்கையென்றபடி.

மூ.— உசு. இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் - ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் ; ஸ்வரூபமும, உபாயமும், பலமுமென்னவுமாம்.

---

வ்யா.—உசு.— இனிமேல, இம்மந்த்ரத்துக்கு, வாக்யார்த்தமிரண்டு படியாக அருளிசசெய்கிருர்,

(இதுதன்னில்) என்று துடங்கி. அதாவது - இம்மந்த்ரந்தன்னில் சொல்லுகிற அர்த்தம்-இவ்வாத்மாவினுடைய ஶேஷத்வபாரதந்த்ரியங்களாகிற ஸ்வரூபமும், அந்தஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள கைங்கர்யமாகிற ப்ராப்யமும்; அன்றிக்கே, ஶேஷத்வமாகிற ஸ்வரூபமும், அந்தஸ்வரூபாநுரூபமான உபாயமும், உபாயலப்யமானபலமும் என்று சொல்லவுமாமென்கை. இதில், ப்ரதமயோஜனையில்

---

எ.—உசு—மேலுக்கவதாரிகை (இனிமேல்) என்று துடங்கி.

மந்த்ரப்ரபாவத்தையும், அர்த்தப்ரபாவத்தையும் அருளிச்செய்த அநந்தரம், மேல்க்ரந்தத்தாலே என்று யோஜிககவுமாம்; (இனிமேல) என்று ஏகபதமாகவும யோஜிக்கவுமாம்.

(இம்மந்த்ரந்தன்னில்சொல்லுகிறஅர்த்தம்-இவ்வாத்மாவினுடைய) என்றது-ப்ரணவத்தில் தரிதீயபதவாச்யஜ்ஞன (இவ்வாத்மாவினுடைய) என்றபடி.(ஶேஷத்வேதயாகிசொல்லவுமாமென்கை என்றது-இரண்டு படியாகச் சொலலவுமாமென்றபடி. யோஜநாத்வயத்தையும் உபபாதிக்கருளுகிருர் (இதில்) என்று துடங்கி. (இதில்) என்றது-யோஜநாத்வயத்திலென்றபடி.

---

தொ.—உசு.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

(இனிமேல்) என்றது-மந்த்ரவைபவத்தையும்,அர்த்தவைபவத்தையும்அருளிச்செய்த அநந்தரமென்றபடி. (படியாக)என்றது-ப்ரகாரமாகவென்றபடி.' இதுதன்னில் இத்யாதியால.மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.(அந்தஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள) என்றது-ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபத்துக்குத் தகுதியாயிருக்கிறவென்றபடி; அதாவது - ஸ்வப்ரயோஜநத்வ ஸ்வகர்த்த்வ கந்தரஹிதமாயிருக்கை; அதாவது - அவன் முகமலர்த்திக்குறுப்பாக அவன் நியமித்தபடிபண்ணுகை. "ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி - ஶேஷத்வபலம், பராதீநப்ரவ்ருத்திநிவ்ருத்திகத்வம-பாரதந்த்ர்யம" என்றிறே அருளிச்செய்வது.சொல்லுகிறபடி தானெங்ஙனேயென்ன அருளிச்செய்கிருர் (இதில்)இத்யாதியால். (இதில்) என்றது-இரண்டுபடியாலென்றபடி. (ப்ரதமயோஜனையில்) என்றது - ஸ்வரூபமும், ஸ்ரூபாநுரூபமான ப்ராப்யமும் என்கிற யோஜனையிலென்றபடி.

---

பி.—உசு.—வாக்யார்த்தமருளிச்செய்கிறவிடத்தில்,(ஸ்வரூபமும்)என்றது - சதுர்த்தியில்சொல்லுகிற ஶேஷத்வஸ்வரூபமும், நமஸ்ஸில் சொல்லுகிற பாரதந்த்ர்யஸ்வரூபமும் என்றபடி. இரண்டாமர்த்தத்தில், சதுர்த்தியில்சொல்லுகிற ஶேஷத்வபாரதந்த்ர்ய ஸ்வரூபமும், நமஸ்ஸில் ஆர்த்தமாகவிக்கிற உபாயமும், வ்யக்தசதுர்த்தியில் புருஷார்த்தமும், ஆக மூன்றர்த்தப்ரகாசகமென்கை.

வ்யா.— ப்ரணவநமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும், நாராயணபதத்தாலே ப்ராப்யமும்சொல்லுகிறது.

---

எ.— (ப்ரணவநமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும்) என்றது - ப்ரணவத்தாலே, பகவதநந்யார்ஹ ஶேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபமுமென்றபடி. பரஏவ-தந்த்ரః- ப்ரதாநః- யஸ்யஸః பரதந்த்ரః; பரதந்த்ரஸ்ய பாவః பாரதந்த்ர்ய மென்றபடி. "తన్త్రం ప్రధానే సిద్ధాన్తే సూత్రవాయే పరిచ్ఛదే" "தந்த்ரம் ப்ரதாநே ஸித்தாந்தே ஸுத்ரவாயே பரிச்சதே" (௪௪௧) இத்யமரః. நமஸ்ஸு பாரதந்த்ர்யத்தைக் காட்டும்படி எங்ஙனேயென்ன; ப்ரணவத்தில் பகவதநந்யார்ஹ ஶேஷத்வாஶ்ரயமாய் ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு "ఉత్తరం బలవత్తరం" "உத்தரம் பலவத்தரம்" (௪௪௨) என்கிறந்யாயத்தாலே ஜ்ஞாத்ருத்வபலத்தாலுண்டான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை நஞ்நிஷேதிக்கையாலே அத்தால் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் நிவர்த்தமாய் ஶேஷியான ஈஶ்வரன் கைபார்த்திருக்கையாலே பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபம் அர்த்தாத் ஸித்தம். (நாராயணபதத்தாலே ப்ராப்யம் சொலலுகிறது) என்றது - நராயணபதோபரிஸ்த்திதையான வ்யக்தசதுர்த்தி, "ప్రార్థనాయాం చతుర్థీ" "ப்ரார்த்தநாயாம் சதுர்த்தீ" (௪௪௩)என்று ப்ரார்த்தனையைச் சொல்லுகிறதாகையாலே அந்த ப்ரார்த்தனைதான் கைங்கர்யவிஷயகப்ரார்த்தனையாகையாலே கைங்கர்யமாகிற ப்ராப்யமும் அர்த்தாத்ஸித்தமென்றபடி.

---

தொ.— (ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும்) என்றது- (ப்ரணவத்தாலே) ஶேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே (பாரதந்த்ர்யமாகிறஸ்வரூபமுமென்றபடி). "நமஸ்ஸு" மஃந என்று மகாரத்தில் சொல்லப்பட்ட ஜ்ஞாத்ருத்வபலத்தாலே ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியையன்றோ ஸாப்தமாகக்காட்டுகிறது? பாரதந்த்ர்யத்தைக் காட்டும்படி யெங்ஙனேயென்னில்; நமஸ்ஸாலே ஸ்வரக்ஷணேஸ்வாந்வய ஹேதுவான ஸ்வஸ்வாதந்த்ர்யம் கழியுண்கையாலே அதடியாகவரும் ஸ்வரக்ஷணேஸ்வாந்வயமும் கழியுண்கையாலே, இனி யிவனை ரக்ஷிப்பான் இவனோடு ஸம்பந்தமுடையானே யாகவேண்டுகையாலே, தன்னுடைய இஷ்டப்ராப்தியிலும் அநிஷ்ட நிவாரணத்திலும் தனக்கு நிருபாதிக ஶேஷியான ஈஶ்வரன் கைபார்த்திருக்கையாகிற ஈஶ்வரபாரதந்த்ர்யத்தை ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்திரூபார்த்தபலத்தாலே காட்டுகிறது.

வ்யா.— அநந்தரயோஜனையில் ப்ரணவத்தாலே ஶேஷத்வமும், நமஸ்ஸாலே உபாயமும், நாராயணபதத்தாலே பலமும் சொல்லுகிறது.

---

எ.— த்விதீயயோஜனையில், நமஸ்ஸாலே உபாயங்காட்டும்படிதான், ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியைச்சொல்லுகிற நமஸ்ஸாலே ஸ்வாதந்த்ர்யகார்யமான ஸ்வரக்ஷணேஸ்வான்வயமும், காரணத்தோபாதி நஶித்துப்போகையாலே, இனி ஶேஷமாய் பரதந்த்ரனான இவனுடைய அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுவான் ஶேஷியாகையாலே [ஈஶ்வரனே உபாயம்] என்னுமிடம் அர்த்தாத்ஸித்தம்; ஆகையாலே ஆர்த்திகமான பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தையும், ஆர்த்திகமான உபாயத்தையும் சொல்லுகிறதென்றபடி. மூன்றாறயோஜனையில்(ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும்)என்றருளிச்செய்தது,ஶேஷத்வாபேக்ஷயா பாரதந்த்ர்யம் அதிஶயாவஹமாகையாலே ஶேஷத்வவிஶிஷ்ட பாரதந்த்ர்யமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்றபடி. ஶேஷத்வ போக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்த்ர்யபோக்யதைகள். ஶேஷத்வமாவது - இஷ்ட விநியோகார்ஹதாமாத்ரம். பாரதந்த்ர்யமாவது - ஶேஷிக்கு இஷ்டமானபடியே விநியோகப்படுகை. போக்த்ருத்வமாவது—ஜ்ஞாத்ருத்வபலத்தாலே போகதசையில் வளர்கிற ரஸங்களுக்கு தான் போக்தாவாகை. போக்யதையாவது— பதார்த்தகதமான ரஸவர்ணாதிகள் போக்தாவுக்கே போக்யமாயிருக்குமாப்போலே, ஆத்மகதமான ஜ்ஞாநாதிகளும் ஈஶ்வரனுக்கு போக்யமாயிருக்கை. போக்த்ருத்வமாவது - போக்தாவானவன், போகஸித்திக்கு யத்நம்பண்ணவேண்டாவோ என்னும் நினைவாலே போக்யதாபூதபகவத்விஷயலாபார்த்தமாக உபாயப்ரவ்ருத்தியிலே மூட்டுவிக்கும். போக்யதையாவது - போக்தாவான ஈஶ்வரனன்றோ போக்யமான இவ்வஸ்துவைப்பெறுகைக்குயத்நம்பண்ணுவான்; தத்போக்யபூதமான

---

தொ. — (அநந்தரயோஜனையிலே) என்றது - த்விதீயயோஜனையிலே என்றபடி. (நமஸ்ஸாலே உபாயமும்) என்கிறவிடத்திலும், நமஶ்ஶப்தம் ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியாகிற அர்த்தபலத்தாலே உபாயத்தைக் காட்டுகிறது. காட்டும்படி யெங்ஙனேயென்னில் ; இந்நமஸ்ஸுதான் ஜ்ஞாத்ருத்வபலத்தால்வந்த ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைக கழிக்கையாலே, அதினடியாகவரும் ஸ்வரக்ஷணேஸ்வான்வயமும் கழியுண்டு போகையாலே, இனியிவனுக்கு ரக்ஷகனாவான் இவனைக் கொண்டுகார்யங்கொள்வான் ஈஶ்வரனேயாகவேண்டுகையாலே, அதில் உத்பாதகத்வேந ரக்ஷகத்வமும், இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்களில ஸ்வயம் கர்த்ருத்வேந ரக்ஷகமும், ஶேஷித்வேந ரக்ஷகத்வமும், அகாரத்திலேசொல்லிற்றுகையாலே அங்கு அநுக்தமான காரணத்வேந ரக்ஷகத்வத்தைச் சொல்லுகிறது. (பலமும்) என்றது - கைங்கர்யமுமென்றபடி.

ஸூ.—௨௭. பலமிருக்கும்படி ப்ரமேயஶேகரத்திலும், அர்ச்சிராதி கதியிலும் சொன்னோம்.

---

வ்யா.—௨௭.— பலவேஷந்தானிருக்கும்படி யெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார்,

(பலமிருக்கும்படி)என்று துடங்கி. அதாவது – இவ்வாத்மாவுக்கு ப்ராப்யமான பலந்தான், அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலே போய், பரிபூர்ணபகவதநுபவத்தைப்பண்ணி, அவ்வநுபவஜநிதப்ரீதி ப்ரேரிதனாய்க்கொண்டு பண்ணும் அஶேஷஶேஷவ்ருத்தி; ஆகையாலே, அதிருக்கும்படியை, ஸங்க்ரஹேண ப்ரமேயஶேகரமாகிற ப்ரபந்தத்திலும், விஸ்தரேண அர்ச்சிராதிகதியாகிற ப்ரபந்தத்திலும் விஶதமாகச்சொன்னோம் ; அவற்றிலே கண்டுகொள்வதென்கை.

---

எ.— இவ்வஸ்துவுக்கு தல்லாபத்துக்கு யத்நிக்கப்ராப்தியில்லையென்னும்நினைவாலே உபாயப்ரவ்ருத்தியில் நின்றும் மூளுவிக்குமென்கை. பாரதந்த்ர்ய போக்யதைகளிரண்டிலும், போக்யதையை கீழ் (அநந்ய போக்யத்வமாகிற ஆகாரத்ரயமும்)என்கிறவிடத்தில் அருளிச்செய்தாரென்றும், இங்கே பாரதந்த்ர்யத்தை அருளிச்செய்தாரென்றும் கண்டு கொள்வது. [இதுதன்னில்சொல்லுகிறஅர்த்தம்]-(இம்மந்த்ரந்தன்னில் சொல்லுகிறவர்த்தம்), இவ்வாத்மாவுக்கு ப்ரணவ நமஸ்ஸுக்களாலே (ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிறஸ்வரூபமும்),(நாராயணபதத்தாலே) ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும், (ப்ரணவத்தாலே) ஶேஷத்வமாகிற ஸ்வரூபமும்; (நமஸ்ஸாலே உபாயமும்), (நாராயணபதத்தாலே) பலமானகைங்கர்யமுமென்று சொல்லுவுமாம் என்று மூலார்த்தம்.
௨௭.— மேலுக்கவதாரிகை (பலவேஷம்) என்று துடங்கி.

(பலவேஷம்) என்றது-பலஸ்வரூபமென்றபடி.[பலமிருக்கும்படி]-பலஸ்வரூபமிருக்கும்படியை, (ஸங்க்ரஹேணப்ரமேயஶேகரமென்கிற ப்ரபந்தத்திலும், விஸ்தரேண அர்ச்சிராதிகதியாகிற ப்ரபந்தத்திலும் விஶதமாகச்சொன்னோம்; அவற்றிலே கண்டுகொள்வது) என்று மூலார்த்தம்.

ப்ரமேயஶேகரே, "நிர்ஹேதுக பகவத்கடாக்ஷத்தாலே அத்வேஷமுண்டாமென்று துடங்கி, அதுண்டானவாறே பகவத்பாகவதவிஷயங்களிலாபிமுக்யமும், த்யாஜ்யோபாதேய விபாகஜ்ஞாநகௌதுகமும், ஸாத்விகஸம்பாஷணமும், ஸதாசார்ய ஸமாஶ்ரயணமும், த்யாஜ்யோபா

---

தா.—௨௭.—மேலுக்கவதாரிகை (பலவேஷந்தான்) இத்யாதி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (இவ்வாத்மாவுக்கு) என்றது – பகவதநந்யார்ஹ ஶேஷமாய்த் ததேகபரதந்த்ரமாயிருக்கிற ஆத்மாவுக்கென்றபடி. (அவ்வநுபவம்) என்றது - பரிபூர்ணபகவதநுபவமென்றபடி. (அதிருக்தும்படியை) என்றது-அந்தகைங்கர்யமிருக்கும்படியை யென்றபடி.

மூ.—உஅ. இதுதான் எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்கும்.

---

வ்யா.—உஅ.—இனி, இம்மந்தரத்துக்கு ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதினுடைய அக்ஷரஸங்க்யையையும், பதஸங்க்யையையும் அருளிச்செய்கிறார்,

(இதுதான்) என்று துடங்கி. அதாவது-இம்மந்த்ரந்தான் "ఓమి త్యేకాక్షరమ్, నమ ఇతి ద్వే అక్షరే, నారాయణాయేతి పఞ్చాక్షరాణి, ఇత్యష్టాక్షరం ఛన్దసా గా

---

எ.— தேய நிஸ்சயமும், ப்ராப்யாந்தரத்தில் வைராக்யமும், பரமப்ராப்யத்திலபிநிவேஸமும், ப்ராப்யாந்தர நிவ்ருத்திக்கும்; பரமப்ராப்ய ஸித்திக்குமடியான ஸித்தோபாயஸ்வீகாரமும், பகவத்ப்ராப்தியிலே த்வரையும், "అహం స్మరామి" "அஹம்ஸ்மராமி" (சசச) என்கிறபடியே ஈஸ்வரஸ்ம்ருதிக்கு விஷயபூதனைகையும், பூதஸூக்ஷ்மஸரீர பரிஷ்வங்கமும், பரமாத்ம ஸம்ஸர்க்கமும், ஹார்தாநுக்ரஹத்தாலேமார்க்கவிஸேஷப்ரகாஸமும், ஹ்ருதய குஹாநிர்க்கமநமும், மூர்த்தந்யநாடீநிஷ்க்ரமணமும், அர்ச்சிராதிமார்க்ககமநமும், ஆதிவாஹிக ஸத்காரமும், ஆவரணாதிக்ரமணமும், ப்ரக்ருதிலங்கநமும், விரஜாஸ்நாநமும், ஸூக்ஷ்மஸரீரவிஸ்லேஷணமும், அபஹதபாப்மத்வாதிகுணகண ப்ராதுர்ப்பாவமும், அமாநவகரஸ்பர்ஸமும், பகவத்ஸங்கல்ப கல்பிதமானதிவ்யதேஹப்ராப்தியும், அகாலகால்யதிவ்யதேஸப்ராப்தியும், ஆரம்ஹ்ரததடஸ்நாநமும், திவ்யாலங்காரமும், திவ்யவிமாநாரோஹணமும், திவ்யகாந்தாரப்ரவேஸமும், திவ்யாப்ஸரஸ்ஸத்காரமும், திவ்யகந்தப்ரவேஸமும், ப்ரஹ்மகந்தப்ரவேஸமும், அப்ராக்ருத கோபுரப்ராப்தியும், திவ்யநகரப்ராப்தியும், ஸூரிபரிஷத்ப்ரத்யுத்கமநமும், ராஜமார்க்ககமநமும், ப்ரஹ்மதேஜ:ப்ரவேஸமும், திவ்யகோபுரப்ராப்தியும், ப்ரஹ்மவேஸ்மப்ரவேஸமும், திவ்யமண்டபப்ராப்தியும், திவ்யபாரிஷத்ப்ராப்தியும், ஸபத்நீகஸர்வேஸ்வரதர்ஸநமும், ஸ்துதிப்ரணாமாஞ்ஜலிப்ரமுகஸம்ப்ரமாநுவர்த்தநமும், பரமாத்மஸமீபப்ராப்தியும், பாதபீடபர்யங்காரோஹணமும், பகவதுத்ஸங்கஸங்கமும், ஆலோகநாலாபாத்யநுபவமும், ஆலிங்கநாத்யநுபவமும், ஸ்வரூபரூபகுண விக்ரஹாத்யநுபவமும், அநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷமும், நாநாவிதவிக்ரஹபரிக்ரஹமும், ஸர்வதேஸஸர்வகாலஸர்வாவஸ்தோசிதமானஸர்வப்ரகார கைங்கர்யமும் உண்டாம்" என்றருளிச்செய்தாரிறே.

உஅ.— மேல்வாக்யத்துக்கு ஸங்கதி (இம்மந்த்ரத்துக்கு) என்று துடங்கி.

அர்த்தமருளிச்செய்கிறார் ப்ரமாணோதாஹரணபூர்வகமாக (அதாவது) என்று.

---

தொ.—உஅ.—மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. (இனி) என்றது-இம்மந்த்ரத்துக்கு வாக்யார்த்தமருளிச்செய்த வநந்தரமென்றபடி. (ப்ரதிபதம்) என்றது - பதங்கள்தோறுமென்றபடி.

[இதுதான்] இத்யாதி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.

வ்யா—ஸஸ்ம்ருதி'', ''ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரஞ்சந்தஸா காயத்ரீ சேதி'', (ருஉ) ''ఓమిత్యగ్రే వ్యాహరేత్, నమ ఇతి పశ్చాత్, నారాయణాయేత్యుపరిష్టాత్'' ''ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பச்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்'' (ருங) என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்குமென்கை. இதினுடைய அஷ்டாக்ஷரத்வஞ் சொல்லுகிறவிடத்தில், ''ఓమిత్యేకాక్షరమ్''

---

எம்.— அக்ஷரஸங்க்யையில ப்ரமாணம் (''ఓమిత్యేకాక్షరమ్'' ''ஓமித்யேகாக்ஷரம்'') (சசரு) என்று தொடங்கி. பதஸங்க்யையில் ப்ரமாணம் (''ఓమిత్యగ్రే వ్యాహరేత్'' ''ஓமித்யக்ரே வ்யாஹரேத்'') (ரசரு) என்று தொடங்கி. (''வ்யாஹரேத்'') என்கிறக்ரியாபதத்தை மூன்றிடத்திலும் யோஜிக்கவேணும். [எட்டுத்திருவக்ஷரமாய்] என்று அக்ஷரங்களை கௌரவித்தருளிச்செய்தது ''నాయకత్వం చ సర్వేషాం నామ నత్వం హరేః పదే। నాశకత్వం పరుద్ధానాం నకారార్థః ప్రకీర్తితః॥, మంగళత్వం మహత్త్వం చ మహానందకరోఽయమత్। ఆశ్రితానాం తతో జ్ఞేయో మకారార్థ స్తథా బుధైః॥. నాస్తిక్యహాని నైర్గుణ్యత్వం నైత్యత్వం చ హరేః పదే। నాకారసేవనార్థానాం మన్త్రి ధీః ప్రకీర్తితః॥, రంజనం భగవత్యస్య రోగహాని స్తతో న్వయః॥, రాష్ట్రత్వ్యాణాదికం చాపి ప్రాప్యతే రేఫసేవయా॥, యోగోద్యోగఫలం చాపి యకారాత్ప్రాప్యతే బుధైః। వర్ణనం చ తథావి ష్ణోర్వాణీ సిద్ధిర్ణకారతః॥, యక్షరాక్షసభేతాళ భూతాదీనాం భయాయయః। ఏవమక్షర నిర్వాణో మన్త్రిర్ద్ధిః ప్రకీర్తితః॥'' ''நாயகத்வஞ்ச ஸர்வேஷாம் நமநத்வம்ஹரேःபதே। நாசகத்வம்விருத்தாநாம் நகாரார்த்தःப்ரகீர்த்திதः॥, மங்களத்வம்மஹத்வஞ்ச மஹாநந்தகரோதியத்। ஆஸ்ரிதாநாந்ததோஜ்ஞேயோமகாரார்த்தஸ்ததாபுதைः॥, நாஸ்திக்யஹாநிர்நித்யத்வம் நேத்ருத்வஞ்சஹரேःபதே। நாகாரஸேவிநாமந்ருணாம்மந்த்ரவித்பிःப்ரகீர்த்திதः॥, ரஞ்ஜநம் பகவத்யாசாரோசஹாநி ஸ்தத்வயதः। ராஷ்ட்ரத்ராணாதிகஞ்சாபி ப்ராப்யதே ரேபஸேவயா॥, யோகோத்யோகபலஞ்சாஹ்யகாராத் ப்ராப்யதேபுதைः। வர்ணநஞ்சததாவிஷ்ணோர்வாணீஸித்திர்ணகாரதः॥, யக்ஷராக்ஷஸபேதாள பூதாதிநாம்பயாபஹः। ஏவமக்ஷரநிர்வாஹோ மந்த்ரவித்பிःப்ரகீர்த்திதः॥'' (சசஎ) என்றுமந்த்ரசாஸ்த்ரத்தில் ஈர நாராயணஸம்வாதத்தில அக்ஷரங்களை ஆதக்ஷः ஆகிபயமாக அருளிச்செய்கையாலே, [இதுதான்] – இந்தத்திருமந்த்ரந்தான், [எட்டுத்திருவக்ஷரமாய் மூன்றுபதமாய் இருக்கும] என்று மூலார்த்தம்.

அக்ஷரநியமத்தை உதாஹரிக்க வேண்டியாமலே, ப்ரணவத்தை ஒழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லும் பக்ஷம் ப்ராஸ்தமென்கிறார், (இதினுடைய) என்று தொடங்கி.

---

தொ.-- இம்மந்த்ரத்தினுடைய அஷ்டாக்ஷரத்வே ப்ரமாணங்காட்டுகிறார் (''ஓமித்யக்ரேவ்யாஹரேத்'') இத்யாதியால் ப்ரணவமொழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுவார் பக்ஷத்தை தூஷித்து பரிஹரிக்கிறார் (இதினுடைய) இத்யாதியால்.

வ்யா.—"ఓమిత్యేకాక్షరం" "ஓமித்யேகாக்ஷரம்" என்றுப்ரணவத்தை ஓரக்ஷரமாகவும், "నమ ఇతిద్వే అక్షరే" "நமஇதித்வே அக்ஷரே" என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும், "నారాయణాయేతి పంచాక్షరాణి" "நாராயணாயேதிபஞ்சாக்ஷராணி" என்று நாராயணபதத்தை அஞ்சக்ஷரமாகவும் ஶ்ருதிசொல்லுகையாலே, ஸமஸ்தபதமான நாராயணபதத்தில நாரபதத்தைப்பிரித்து ஷடக்ஷரமாக்கி, ப்ரணவத்தையொழிய அஷ்டாக்ஷரத்வம சொல்லுமவர்களுடையபக்ஷம், அவைதிகமாகையாலே அநாதரணீயமாகக் கடவது.

---

எ.—(ஸமஸ்தபதமான நாராயணபதத்தில்) என்றது—பிந்நபதமன்றிக்கே ஏகபதத்வேந ஶ்ருதிப்ரஸித்தமான (நாராயணபதத்தில்) என்றபடி. ("నారాయణాయేత్యుపరిష్టాత్") "நாராயணாயேத்யுபரிஷ்டாத்" (சுசஅ) என்றிறேஶ்ருதியும் சொல்லிற்று. (நாரபதத்தைப்பிரித்துஷடக்ஷரமாக்கி) என்றது-நார-அயநாய என்று பிந்நமாகப்பிரித்து (ஷடக்ஷரமாக்கி) என்றபடி. (ப்ரணவத்தைஒழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுமவர்களுடைய பக்ஷம்) என்றது-"తత్రోత్తరాయణస్యాది బిందుమాన్ విష్ణురన్తతః। బీజమష్టాక్షరస్యాస్య తేనాష్టాక్షరతాభవేత్॥" "தத்ரோத்தராயணஸ்யாதி பிந்துமாந்விஷ்ணுரந்ததஃ|பீஜமஷ்டாக்ஷரஸ்யஸ்யாத்தேநாஷ்டாக்ஷரதாபவேத்||" (சசகூ) என்கிற ஸ்ம்ருதிப்ரக்ரியையாலே, (ப்ரணவத்தையொழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகிறவர்கள்பக்ஷம்) என்றபடி. (அவைதிகமாகையாலே) என்றது-வைதிகமல்லாமையாலே என்றபடி; அதாவது-'అప్రసక్తిర్విరోధశ్చ' "அப்ரஸக்திர்விரோதஶ்ச" (சகு0) என்று விரோதார்த்தே நஞ்ஞாகையாலே வேதவிருத்தமென்றபடி. (அநாதரணீயமாகக்கடவது) என்றது-ஆதரிக்கத்தக்கதன்று என்றபடி. ஶ்ருத்யவிருத்த ஸ்ம்ருதிப்ரக்ரியை ஆதரணீயமாயிருக்குமென்னுமம்ஶத்தை ("ప్రణవాద్యం") ("ப்ரணவாத்யம்") (சறுக) என்கிற உதாஹரணத்தில் ஸுஸ்பஷ்டமாக ப்ரகாஶிப்பிக்கையாலே ஶ்ருதிவிருத்தஸ்ம்ருதிப்ரக்ரியை அநாதரணீயமென்னுமிடம் அர்த்தாத்ஸித்தம். அத்ரேயமபியுக்தோக்திஃ-"వేదేకర్త్రాద్యభావాద్బలవతి హి నయైస్త్వన్మతే నీయమానే తన్మూలత్వేన మానం తదితరదఖిలం జాయతే రంగధామన్ । తస్మాత్సాంఖ్యం సయోగం పశుపతిమతం క్వాపిచిత్పాంచరాత్రం సర్వం త్వేవ ప్రమాణం తదిదమధిగతం పంచమాద్వేదవాదాత్॥" కర్త్రాద్యభావాత్-కర్తురభావాత్, ఆదిశబ్దేన-తన్మూలదోషశంకాభావాచ్చ, బలవతి-అనుమానాదిభ్యః ప్రబలతరే. వేదే-వేదే, నయైః-న్యాయైః, త్వన్మతే-త్వత్పరే, నీయమానే-యోజ్యమానే సతి, తన్మూలత్వేన-తాద్రశవేదమూలత్వేన, తదితరత్ —, అఖిలం-సర్వం, మానం-ప్రమాణం, (యతః) జాయతే —; తస్మాత్ —, సాంఖ్యం-సాంఖ్యతన్త్రం, యోగం-యోగతన్త్రం, పశుపతిమతం —, క్వాపిచిత్-వేదావిరుద్ధస్థలే,

---

தொ.—(அவைதிகமாகையாலே) என்றது-வேதவிருத்த ஸாரவாகமஸித்தமாகையாலே யென்றபடி.

மூ.—உகூ. மூன்றுபதமும் மூன்று அர்த்தத்தைச்சொல்லுகிறது.

மூ.—கூ0. அதாவது - ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்.

---

வ்யா.—உகூ.—இந்த பதத்ரயமும் எவ்வர்த்தத்தைச் சொல்லுகிறதெனுமாகாங்க்ஷையிலே,

(மூன்றுபதமும் மூன்றர்த்தத்தைச்சொல்லுகிறது) என்கிறார்.

கூ0.—அவ்வர்த்தங்கள் தம்மை விபாதமாக அருளிச்செய்கிறார், (அதாவது - ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும் கைங்கர்யமும்) என்று. (ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்,) என்று முதற்சொன்ன வாக்யார்த்தம், இதனை நினைத்திறே.

---

எ.—ఈ వాక్యాదిస్వ్యత్యేవిరుద్ధస్థలేచ,ప్రమాణం ; (విరోధేత్వప్రమాణం;) పంచరాత్రం-శ్రీపాంచరాత్రంతు, సర్వత్ర—, ప్రమాణం ; తత్ ఇదం - పంచరాత్రప్రామాణ్యం, పంచమాత్ వేదాత్ ఏవ - పారమార్థేవ, అధికం—. "வேதேகர்த்ராத்யபாவாத்பலவதிஹிநயைஸ்தவந்மூகேநீயமாநேதந் மூலத்வேநமாநந்தகிதரததிலம்ஜாயதேரங்கதாமந் | தஸ்மாத்ஸாங்க்யம்ஸயோகம்ஸபஶுபதிமதம் ருக்ராசித்பஞ்சராத்ரம்ஸர்வத்ரைவப்ரமாணம் ததிதமதிகதம்பஞ்சமாதேவவேதாத்||" கர்த்ராத்யபாவாத் - கர்துரபாவாத், ஆதிஶப்தேந - தந்மூலராகத்வேஷகளங்காபாவாச்ச, பலவதி - அநுமாநாதிப்யஃப்ரபலதரே, வேதே-வேதே, நயைஃ - ந்யாயைஃ, த்வந்முகே - த்வத்பரே, நீயமாநே - யோஜ்யமாநேஸதி, தந்மூலத்வேந - தாத்ருஶவேதமூலத்வேந, ததிதரத்—, அகிலம் - ஸர்வம், மாநம் - ப்ரமாணம், (யதஃ) ஜாயதே—; தஸ்மாத்—, ஸாங்க்யம் - ஸாங்க்யதந்த்ரம், யோகம்-யோகதந்த்ரம், பஶுபதிமதம்—,ருக்ராசித்-வேதாவிருத்தஸ்தலே,மந்வாதிஸ்ம்ருத்யவிருத்தஸ்தலேச, ப்ரமாணம் ; (விரோதேது அப்ரமாணம்); பஞ்சராத்ரம் - ஸ்ரீபாஞ்சராத்ரந்து, ஸர்வத்ர—, ப்ரமாணம்— ; தத்இதம்-பஞ்சராத்ர ப்ராமாண்யம், பஞ்சமாத்வேதாத் ஏவ-பாரதாதேவ, அதிகம்—. (சுருஉ)

உகூ.—மேலவாக்யத்துக்கவதாரிகை (இதில்) என்றுதுடங்கி.

கூ0.— மூலத்துக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (அதாவது) என்றுதுடங்கி. (அதாவது) என்றது - [மூன்றுபதமும் மூன்றர்த்தத்தை] ச்சொல்லுகையாவதென்றபடி ; [அதாவது] என்றது-மூன்றர்த்தமாவதென்னவுமாம்.

---

தொ—உகூ.—மேலுக்கவதாரிகை (இதில்) இத்யாதி. (இதில்) என்றது-திருமந்த்ரத்திலென்றபடி.

கூ0.— மேலுக்கவதாரிகை (அவ்வர்த்தங்கள்தம்மை) இத்யாதி. இப்போது ஶேஷத்வாதிகள் பதத்ரயத்துக்கு அர்த்தமாகவருளிச்செய்தது, இம்மந்த்ரத்துக்கு வாக்யார்த்தமருளிச்செய்கிறவிடத்தில் மூந்தினயோஜனைக்குச்சேரவேணும்; அத்தையருளிச்செய்கிறார் (ஸ்வரூபமும்) இத்யாதியால.

மூ.—கக. இதில் முதற்பதம் ப்ரணவம்.

மூ.—கஉ. இது (அ) என்றும், (உ) என்றும், (ம) என்றும் மூன்று திருவக்ஷரம.

வ்யா.—கக.—இப்பதத்ரயத்திலும் ப்ரதமபதந்தானேதென்ன, (இதில் முதற்பதம் ப்ரணவம்) என்கிறார்.

"ஓமித்யக்ரே வ்யாஹரேத்" என்றிறே ச்ருதிசொல்லிற்று. ஸ்ம்ருதியும் "ப்ரணவாத்யம் நமோமத்யம் நாராயணபதாந்திமம் | மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ந்ருணாம்||" "ப்ரணவாத்யம் நமோமத்யம் நாராயணபதாந்திமம்|மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத்ஸர்வஸித்திகரம்ந்ருணம்||"(ருசு) என்றதிறே.

கஉ.— இனி ப்ரணவத்துக்கு அர்த்தமருளிச்செய்வதாக, இதினுடைய அக்ஷரத்ரயாத்மகதையை அருளிச்செய்கிறார்,

(இது அ - என்றும, உ - என்றும், ம - என்றும் மூன்று திருவக்ஷரம்) என்று.

எ.— [ சேஷத்வம் ] ஆவது - யதேஷ்ட விநியோகார்ஹத்வம். பாரதந்த்ர்யமாவது-யதேஷ்ட விநியுஜ்யமானத்வம். கைங்கர்யமாவது - பகவன்முகவிகாஸ ஹேதுவான வ்ருத்திவிசேஷம். பரமஸம்ஹிதாயாம், "யதேஷ்டவிநியோகார்ஹ: சேஷசப்தேந கத்யதே | ஈச்வரஸ்ய ஜகத்ஸர்வம் யதேஷ்டம் விநியுஜ்யதே||, பரமாத்மா ஹரிச்சேஷீ ஸ்வசேஷாஸ்ய கிங்கர: | கைங்கர்யமகிலாவ்ருத்தி ரித்யேதஜ்ஜ்ஞாந ஸங்க்ரஹம்||" "யதேஷ்டவிநியோகார்ஹச் சேஷசப்தேநகத்யதே | ஈச்வரஸ்ய ஜகத்ஸர்வம் யதேஷ்டம் விநியுஜ்யதே||, பரமாத்மா ஹரிச்சேஷீ ஸ்வசேஷாஸ்யகிங்கர:| கைங்கர்யமகிலாவ்ருத்தி ரித்யேதத் ஜ்ஞாந ஸங்க்ரஹம்||" (சருக)

கக.— உத்தரவாக்யஸ்யஸங்கதி: (இப்பதத்ரயம்) இத்யாதி.

ப்ரதமபதத்தில் ப்ரமாணம்காட்டுகிறார் ("ஓமித்யக்ரேவ்யாஹரேத்") என்று. இஸ்ம்ருத்யர்த்தத்துக்கு உபப்ரும்மணம் காட்டுகிறார் ("ப்ரணவாத்யம்" "ப்ரணவாத்யம்") என்று. (சருச)

கஉ.— மேல்வாக்யத்துக்கவதாரிகை (இனி) என்று துடங்கி.

[மூன்றுதிருவக்ஷரம்] என்று கௌரவித்தது வேதஸாரமாகையாலே. இவ்வர்த்தம் மேலேஸுஸ்பஷ்டம்.

தொ.— கக.— அவதாரிகாபூர்வகமாக ப்ரதமபதமின்னதென்கிறார் (இப்பதத்ரயத்திலும்) இத்யாதியால். ப்ரணவம் ப்ரதமபதமென்னுமிலேப்ரமாணம்காட்டுகிறார் ("ஓமித்யக்ரேவ்யாஹரேத்")இத்யாதியால.

கஉ.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

பி.—கக.— [முதல்பதம் ப்ரணவ] மானபடி என்னென்ன அருளிச்செய்கிறார், ("ஓமித்யக்ரேவ்யாஹரேத்") என்றிறேச்ருதிசொல்லிற்று என்றுதுடஙகி.

கஉ.— ப்ரணவம்,

வ்யா.— இப்ரணவந்தான், அஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய், மூன்றுபதமாய், மூன்றர்த்தப்ரகாசகமாய்; ஸம்ஹிதாகாரத்தாலே ஏகாக்ஷரமாய், ஏகபதமாய், ஏகார்த்தப்ரகாசகமாயிறே இருப்பது.

---

எ —(அஸம்ஹிதாகாரம்)- பிரிந்திருக்கை. (மூன்றர்த்தப்ரகாசகமாய்) என்றது - லுப்தசதுர்த்தீவிபக்தி ஸஹிதமான அகாரம், பகவச்சேஷத்வரூபார்த்தப்ரகாசகமாயும், உகாரம், அநந்யார்ஹத்வ ஸம்பந்தார்த்தப்ரகாசகமாயும், மகாரம், அந்தசேஷத்வாச்ரயமாய் ஜ்ஞாதாவாயிருக்கிற ஜீவாத்மரூபார்த்த ப்ரகாசகமாயும் இருக்குமென்றபடி. अकारो विष्णुरित्युक्तो मकारो जीववाचकः। तयोस्तु नित्यसंबन्ध उकारेण प्रकीर्तितः॥" அகாரோ விஷ்ணுரித்யுக்தோ மகாரோ ஜீவவாசகः। தயோஸ்து நித்யஸம்பந்த உகாரேணப்ரகீர்த்திதः॥" (சுஙு) (ஸம்ஹிதாகாரம்) ஆவது - மூன்றக்ஷரம்கூடி ஒன்றாயிருக்கை. (ஏகார்த்தப்ரகாசகமாய்) என்றது - "பகவதநந்யார்ஹ சேஷத்வாச்ரயோஜீவः" என்று ஜீவஸ்வரூபரூபை கார்த்தப்ரகாசகமாய் இருக்குமென்றபடி. "प्रणवो जीववाची स्यात् ज्ञानानन्दकलक्षणसंभवात्। शब्दतो जीववाची स्यात् द्विजशूद्रतरुषडक्षवत्॥" "ப்ரணவோ ஜீவவாசீஸ்யாத் ஜ்ஞாநாநந்தலக்ஷணஸம்பவாத் । சப்ததோஜீவவாசீஸ்யாத்ராஜபுருஷோப்தவத்॥" (சுகூ)

---

தொ. ("ஓமித்யேகாக்ஷரம்") என்று ப்ரணவத்தை ஒரு திருவக்ஷரமாக ச்ருதி சொல்லாநிற்க. இவர் ப்ரணவத்தை மூன்று அக்ஷரமாக அருளிச்செய்கிறது ச்ருதிவிருத்தமன்றோ? என்ன அருளிச்செய்கிறார், (இப்ரணவந்தான்) இத்யாதியால். ப்ரணவத்துக்கு ஸம்ஹிதாகாரமும், அஸம்ஹிதாகாரமும் இரண்டுமுண்டாகையாலே, இதில், அஸம்ஹிதாகாரத்தை முந்துற ஸப்ரமாணமாக அருளிச்செய்து அநந்தரம் ஸம்ஹிதாகாரத்தையருளிச்செய்கிறார்; ஆகையாலே விரோதமில்லையென்று கருத்து.

---

பி.— ஏகாக்ஷரமாயன்றோ இருப்பது? மூன்றக்ஷரமானபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (இப்ரணவந்தான் அஸம்ஹிதாகாரத்தாலே) என்று தொடங்கி. [இது (அ) என்றும் (உ) என்றும் (ம) என்றும்] அஸம்ஹிதாகாரம்-சப்தப்ராப்தியாலே பிறந்தவாகாரம். (ஸம்ஹிதாகாரத்தாலே) ஓரர்த்தப்ரகாசகமாவது - மகாரவாச்யனான சேதநன், அகாரவாச்யனான ஈச்வரனுக்கு சேஷபூதனென்று சேஷத்வ ஸ்வரூபப்ரகாசகமென்னுதல்; ஆத்மஸமர்ப்பணமென்னுதல்; "ओमित्यात्मानं युञ्जीत" "ஓமித்யாத்மாநமயுஞ்ஜீத" என்றதிறே.

மூ.—பகவத்ஸேநாபதிமிச்ரர்வாக்யம்

வ்யா.— இவ்விடத்திலே ஜ்ஞாநாதிகரான ஸ்ரீஸேநாபதிஜீயர் அருளிச்செய்யும்வார்த்தை "அகலகில்லேனிறையும்" என்று

எ.— திருவாய்மொழி – சு – பத்து – க0 – திரு – க0 – பாட்டு.

"அகலகில்லேனிறையுமென்றலர்மேன்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன்றுடையாயென்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே".

"அவ.— தம்முடைய அபேக்ஷிதம் சடக்கென ஸித்திக்கைக்காகப் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம் புகுகிறார். ஆக, ஒன்பதுபாட்டாலும் சரண்யன் ஸ்வரூபத்தைச்சொன்னார்; இதில் தம்முடைய ஸ்வரூபத்தைச்சொல்லி சரணம் புகுகிறார். கீழே "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும் தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும், சேஷத்வத்தையும், அவனுடைய சரண்யதைக்கு உறுப்பாகச் சொல்லிக்கொடுபோந்தார்; இங்கு அதுதன்னையே பேற்றுக்குடலாகச்சொல்லி சரணம் புகுகிறார். இப்பாட்டுத்தன்னை த்வயத்திற் பதங்களோடொக்க யோஜித்துத் தலைக்கட்டக்கடவது. அதில் அர்த்தப்ராப்தமான அஹமர்த்தத்தை இங்கு அடியேன் என்கிறது.

வ்யா.— (அகலகில்லேனிறையுமென்று) இது–அகன்றிருந்து சொல்லுகிற பாசுரமுமன்று; நித்யஸம்ச்லேஷம்பண்ணாநிற்கச்செய்தேயாயிற்று "இறையுமகலகில்லேன்," "இறையுமகலகில்லேன்" என்றுரைப்பது. நித்யாநுபவம் பண்ணுவார்க்கெல்லாம் பாசுரமிதுவே. நாட்டாருடைய (அகலகில்லேன்)போலன்று இவளுடைய(அகலகில்லேன்); அதுகர்மாதீநமாகவருவது, இதுவிஷயாதீநமாகவிளையுமது. (அலர்மேல்மங்கை) அவன்தன்னை "ந ஜீவேயம் க்ஷணமபி" "நஜீவேயம்க்ஷணமபி" (ரு0ஹ) என்னப்பண்ணவல்லபோக்யதையையும்பருவத்தையுமுடையவள். பரிமளந்தான் ஒருவடிவுகொண்டாப்போலேயிருக்கை. (உறைமார்பா) இத்தால் நித்யயோகஞ்சொல்லுகிறது. எனக்கொருகாலம்பார்த்துசரணம்புகவேண்டும்படியாயோவிருக்கிறது. இத்தலையில் அபராதத்தையும்ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும்அநுஸந்தித்துப் பிற்காலிக்கவேண்டாதபடியாயிருக்கை. "ஒருநாள் பட்டர், பிள்ளையழகியமணவாளரையர்க்கு த்வயமருளிச்செய்கைக்காக 'எல்லாரும்போங்கோள்' என்ன, நஞ்சீயருமெழுந்திருந்து

தா.—(இவ்விடத்திலே) என்றது–(இவ்வகாரத்திலே) என்றபடி. ஸேநாபதிமிச்ரர் என்றது – மஹாவம்சஸமுத்பவாய, ஆழ்வான்சிஷ்யராய, ஸகலசாஸ்த்ரவித்தரான (ஸ்ரீஸேநாபதிஜீயர்) என்றபடி,

ஏ.—போய், நம்மை 'இராய்' என்றருளிச்செய்திலர் என்று வெறுத்திருக்க, அப்போதே 'ஜீயரெங்குற்றார்' என்று கேட்டருளித் தேடியழைத்துக் கூடவைத்துக்கொண்டிருந்து த்வயத்தை அருளிச்செய்யாநிற்கச்செய்தே அப்போதருளிச்செய்தவார்த்தை" என்று ஜீயருளிச்செய்வர்:- "இவ்வாத்மவஸ்து ஶேஷமாகில் அவன் ஶேஷியாகில் இங்குப்பிராட்டி ஸம்பந்தத்தால்செய்கிறதென்" என்றுகேட்க, "அதிருக்கிறபடிகேளீர்; ராவணனுக்கும் காகத்துக்கும் ஸம்பந்தமும் அநுஷ்டானமும் ஒத்திருக்க; இனி ராவணன் ஶாபத்தாலே கிட்டமாட்டாதே இருப்பதொன்றுண்டிறே!, அங்ஙனன்றிக்கே ஜநநிபக்கல் அபராதத்தில்கைதொடனாயிருக்க, தலைகொண்டு தப்பினானிறே! அவள் ஸந்நிதியுண்டாகையாலே. அவள்கடக்கவிருக்கையாலே ராவணன் தலையறுப்புண்டான்." போக்கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை அவனுக்கும் ஒக்குமிறே!, இங்ஙனே இருக்கச்செய்தேயும் கார்யமாயிற்றதில்லையிறே! அவனுக்குப் பிராட்டி ஸந்நிதியில்லாமையாலே. இனித்தான், மாதாவும் பிதாவுமானால் பிதாவைப்போலன்றிறே! ப்ரஜைகள்விஷயத்தில் மாதாவிருக்கும்படி; இவன்செய்தகுறை தான் காணக்கண்ணிட்டிருக்கையன்றிக்கே, பிதாவின் பக்கலிலும் மறைத்துக்காட்டிவாளொருத்தியிறே!. ஆகையிறே! உத்தரார்த்தத்தில் - அவனோடொப்புச்சொல்லி, பூர்வார்த்தத்தில்- புருஷகாரமாகையாகிற நீர்மையிலேற்றஞ்சொல்லுகிறது. தொட்டாரைத்தொட்டு "न कश्चिन्नापराध्यति" "நகஶ்சிந்நாபராத்யதி" (௫0௭) என்னக்கடவளிவள், 'நம்மையொருகார்யத்திலே யேவுவதுகாண்' என்று அவஸரப்ரதீக்ஷனாயிருக்குமவனைப் பெற்றால் விடாளிறே!. தன்வார்த்தைகேளாதார்க்குங்கூட "मित्रमौपयिकं कर्तुम्" "மித்ரமௌபயிகம்கர்த்தும்" (௫0௬) என்னக்கடவளிவள், தன்முகம்பார்த்து வார்த்தைகேட்குமவனைப் பெற்றால் விடாளிறே! "दासीनां रावणस्याहं मर्षयामीह दुर्बला" "தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்ப்பலா" (௫0௫) என்றாளிறே!. திருவடி, 'ராக்ஷஸிகளை என்கையிலே காட்டித்தரவேணும்' என்ன, பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலைகாண் என்றாளிறே!. ராவணன் பட்டானாகில், பெருமான் விஜயத்தோடேநின்றாராகில, திருவடிவந்து முன்னேநின்றானாகில், வேறொருதௌர்ப்பல்யமில்லையிறே!; இனி தௌர்ப்பல்யமாவது—பிறர் நோவுகாணமாட்டாமையிறே!. (நிகரில்) இத்யாதி. அதுக்கநந்தரபதத்தில் அர்த்தஞ்சொல்லுகிறது. "தாமரையாளாகிலுஞ்சிதகுரைக்குமேல் "என்னடியாரதுசெய்யார்" என்னும் குணாதிக்யஞ்சொல்லுகிறது. (உலகமூன்றுடையாய்) தான் நிர்க்குணனென்னிலும் விடவொண்ணாத ப்ராப்திசொல்லுகிறது. (என்னையாள்வானே) ப்ராப்தியை க்ரயஞ்செலுத்திக் கொடுக்கும்படி. மோக்ஷத்தளவும்செல்ல நடத்திக் கொடுபோந்து நடுவுள்ள அபேக்ஷிதப்ரதனானையிறே! ஆளுகையாவது. (நிகரில்) இத்யாதி. அப்பதத்தில் முடிநிறஸௌலப்யஞ் சொல்லு

எ—. கிறது. (புகலொன்றில்லாவடியேன்) ஆகிஞ்சந்யமும் ஸ்வரூபமும் ப்ரபத்திக்குபரிகரமிறே!. (உன்னடிக்கீழ்) * சரணௌ. (அமர்ந்து) நடுவோரிடையீடின்றிக்கேயிருக்கை. (புகுந்தேனே) இவ்வத்யவஸாயம்உபாயபாவத்தில் அந்வயியாமையாலும், உபகாரஸ்ம்ருதி ஸ்வரூபமாகையாலும், ஸ்வீகாரமும் சைதந்ய ப்ரயுக்தமாகையாலும் (இவையெல்லா) மதிகாரிவிஶேஷணமாகிற்றிறே! (த்வயார்த்தவிவரண ப்ரதேஶங்களிலே) இவையெல்லாம்-பூர்வார்த்தத்தில் முடிகிறபதத்தோடே சேரக்கடவதிறே!.

(அகலகில்லேன்) இத்யாதி. இதில்-உபாயபாவஞ்சொல்லச்செய்தே,உபேயவிஷயஸூசகமுமாயிருக்கிறது.அதாகிறபடியெங்ஙனேயென்னில்; இருவருமான சேர்த்தியிலேயிறே! இவனடிமைசெய்வது, அச்சேர்த்திதன்னையேயிறே! இவனுபாயமாகப் பற்றுகிறதும்.இத்தால்சொல்லிற்றாகிறது-நித்யப்ராப்யத்வமிறே!. நித்யாபூர்வவிஷயமிறே! நித்யப்ராப்யமாகவல்லது. (பிராட்டி நித்யஸம்ஶ்லிஷ்டையாய்இருக்கச்செய்தேயும் 'ப்ரியக்ஷமையல்லேன்' என்னும்போது அவ்விஷயம்நித்யப்ராப்யமாகவேணுமிறே!; இனி, இருவருமான சேர்த்தி நித்யப்ராப்யமென்னுமிடஞ் சொல்லவேண்டாவிறே!.) (அகலகில்லேனிறையுமென்று) இது அகன்றிருந்துசொல்லுகிறவார்த்தையன்று.தனக்ககலுகைக்குஸம்பாவனையின்றிக்கே யிருக்கச்செய்தேயும், அங்குத்தை போக்யதையையநுஸந்தித்து, 'க்ஷணகாலமும் நானகலுகைக்கு ஶக்தையாகிறிலேன்,' என்னும்.“ஶக்தா” “அநந்யா” (ஞ0க)என்றும்,“அநபாயிநீ”‘அநபாயிநீ”(ஞ0எ)என்றுஞ் சொல்லாநிற்கச்செய்தே சொல்லுகிறவார்த்தையிறே!.யிது.'க்ஷணகாலமும்ப்ரியக்ஷமையல்லேன்,என்று. (அலர்மேல்மங்கை)இங்ஙன் சொல்லுகிறவளாரென்னில், தன்வடிவழகாலும் பருவத்தாலும் அவன்றனக்குங்கூட உத்தேஶ்யமாயிருக்கிறவள்.

அவனை,“நஜீவேயம்க்ஷணமபி” என்னப்பண்ணுமவள்.நாட்டாரகலகில்லேன்போலன்றிறே! இவளுடைய அகலகில்லேன்; அது கர்மநிபந்தமாகவரு மகலுகையிறே!, இவளுக்கதில்லாமையாலு மவன்றன்மேல்விழும் ஸ்வபாவனாகையாலும்.அவனால் வரும்பிரிவுமில்லை, தன்னால்வரும் பிரிவுமில்லையானால், இவ்வுக்திக்கு ப்ரஸங்கமென்னென்னில்;அவனாகையாலேவந்தது. நாட்டாருடைய ப்ரார்த்தனை கர்மமடியாகவருமது, இவளுடைய ப்ரார்த்தனை விஷயாதீநமாக விளையுமது. உறைமார்பா) ப்ரதமபதத்தில் மதுப்பால் சொல்லுகிற நித்யயோகத்தைச்சொல்லுகிறது. இதுவு மிங்ஙனே புலிக்கக்கண்டோமித்தனை. இச்சேர்த்திக்கு ப்ரயோஜநம் - அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையாதல், தன்னுடைய ஸம்ஸாரித்வத்தையாதல் அநுஸந்தித்துக் கைவாங்கவேண்டாதபடியாயிருக்கை.அவன் ஸர்வஜ்ஞத்வத்தையும்தன்னுடைய ஸாபராதத்வத்தையும்அநுஸந்தித்து அஞ்சவேண்டாதபடியாயிருக்கை.

எ.— அதாகிறது-இவனுடைய அபராதகாலம் பார்த்திருந்து ப்ரதிபத்திபண்ணுகைக்கு அவனுக்கவஸரமில்லை அவள்கூட இருக்கையாலே. பிராட்டிபக்கல்அபராதம் காகத்துக்கும் ராவணனுக்குமொத்திருக்கச்செய்தேயும்,இவள்ஸந்நிதியாலே தலைபெற்றதுகாகம்; அத்தனை அபராதமின்றியிலே யிருக்க, ராவணன் தலையறுப்புண்டானிறே! இவள்ஸந்நிதியில்லாமையாலே.இத்தனையுண்டிறே!யிவள்ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கும்வாஸி.தமப்பன் பகையாக,மாத்ர்ஸந்நிதியிலேப்ரஜையையழியச்செய்யமாட்டாமையு மொன்றுண்டே! அவன் பண்ணின அபராதத்துக்கு ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட்டு,அது தொடர்ந்துகொண்டு திரிந்தவாறேபுகலற்றுவிழ,இவளைநோக்கி, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒருகண்ணழிவு சொல்லிவிட்டானித்தனையிறே!. "ஸ்வ ஶரணம் ஜ꞉" " தமேவஶரணங்கத꞉" (ரு0அ)என்றதுவும்,"ஸ்வ ஶம்" "நமேயம்"(ரு0கூ) என்றதுவும், இரண்டுமெப்ரயோஜகம், அதென்னென்னில்; காகத்துக்கும் போகிறபோது அகவாயில் நினைவதுவேயிறே!. அங்ஙனன்றாகில் "ஸ்வகமாலயம்-ஜகாம" "ஸ்வகமாலயம் –ஜகாம" (ருக0) என்று போகப்பாரானே, செயல்மாட்சியாலே விழுந்தவித்தனையிறே!. இது ராவணனுக்கும் உண்டாயிருக்கச்செய்தே கார்யமாயிற்றதில்லையிறே! இவள் அஸந்நிதியாலே. கீழ்ச்சொன்ன அர்த்த மித்தனையும் - த்வயத்தில் முதற்பதத்தோடேயற்றது. மேல் ( நிகரில் ) என்றுதொடங்கி, ( திருவேங்கடத்தானே ) என்னுமளவும்வர - அநந்தரபதத்திலர்த்தஞ்சொல்லுகிறது. (நிகரில்புகழாய்) இப்படியிருக்கிறவள்தானே சிதகுரைக்குமன்றுமவளுடனே மன்றும் குணுகிய விஶேஷஞ்சொல்லுகிறது. அதாகிறது-"என்னடியாரது செய்யார்என்று" என்னைப்பற்றினார்க்கதில்லைகாணென்கை. 'இல்லை, நானிப்போது இன்னகுற்றஞ்செய்யக்கண்டேன்' என்று காட்டிக்கொடுத்தாலும்; ஆனாலென், 'தர்மாதர்மங்களும் பரலோகமுமில்லை' என்றுசெய்கிறார்களோ ? ப்ராமாதிகத்துக்கு 'நாமுளோம், என்றன்றோ செய்கிறதென்கை. இவளுடைய உத்கர்ஷத்துக்கடி சொல்லும்போது அவனைப்பற்றிச்சொல்லலாம், அவனுடைய உத்கர்ஷத்துக்கொன்று தேடிச்சொல்லலாவதில்லை. இதுவோதான் அர்த்தஸ்வரூபமிருக்கும்படி. இத்தால் சொல்லிற்றாயிற்று-இவள் அவனுடையஸ்வாதந்த்ர்யத்தை அநுஸந்தித்து 'இவற்றின்பக்கலென்னாய் விளைகிறதோ' என்றிருக்கையும், அவனிவளுடைய மார்த்தவத்தையும் மௌக்த்யத்தையு மநுஸந்தித்து 'இவற்றின்பக்கலெவ்வளவாயிருக்கிறாளோ' என்றிருக்கையும். ஆக, ஒருவரையொருவர் அதிஶங்கைபண்ணி நோக்குமிருவர்நிழலையும் பற்றியிறே!உபயவிபூதியுங்கிடக்கிறது.(உலகமூன்றுடையாய்)தான் நிர்க்குணனென்றாலும் விடவொண்ணாதப்ராப்தியைச்சொல்லுகிறது. "சிதகுரைக்குமேல்" என்றவிடத்தில் - அவளுக்கு

எ.—ஸ்வரூபாநுரூபமானகுணங்கள்கூடாதவன்றிறே! அவள் அதுசொல்லுவது, அப்படியே இவனுக்கும்இக்குணங்களின்றிக்கேஇருந்தாலும் விடவொண்ணாத குடற்றொடக்கைச்சொல்லுகிறது. அவன் "அல்லேன்" என்றுகைவிடுமென்றும் செங்கற்சீரைகட்டி வளைக்கலாம்படியிறே! இஸ்ஸம்பந்தமிருப்பது; இனி இவன்றான் காதாசித்கமாக ப்ரணமம் பண்ணிப் பின்பு கைகழியப்போகப்பார்க்கிலும், காலிலே விலங்கைத் தைத்துக் காரியங்கொள்ளலாம்படியான உரிமைசொல்லுகிறது. (என்னையாள்வானே) அடிமை தன்னை க்ரயஞ்செலுத்திக் கொடுக்கும்படி 'ஶேஷத்வ ஸாமாந்யத்தைப்பற்றச் சொல்லுகிறீராகில் அவ்வளவிறே! யுமக்கும்' என்ன வொண்ணாதபடி; என்னை*மயர்வறமதிநலமருளியிவ்வளவும்வர நிறுத்திப்போகடப்போமோ? (நிகரிலமரர்) இத்யாதி. அங்குள்ளாரும்விரும்பிவந்து அடிமைசெய்கிறதும்இங்கேயிறே! "வைகுந்தத்தமரரும்முனிவரும்" என்றிரண்டுகோடியாயிறே! யிருப்பது; குணநிஷ்டரும் கைங்கர்யநிஷ்டரும். (திருவேங்கடத்தானே) அதுக்குமுடிந்தபொருள்ஸௌலப்யமென்னக் கடவதிறே!; குணயோகமும், ஶேஷித்வமும், விஶேஷகடாக்ஷமும், ஸௌலப்யமும், இவையித்தனையு முண்டிறே! யிப்பதத்துக்கு. இவனுக்கு ஸகலாபேக்ஷித பலப்ரதனாகைக்காக அந்தராத்மதயா ஸ்த்திதிபண்ணுமென்றிறே! நாராயணஶப்தத்திற்சொல்லுகிறது; அந்தஸௌலப்யம், இங்கு ஸதா ஸந்நிதி பண்ணுகையாலே திருவேங்கடமுடையான் பக்கலிலே கிடக்குமிறே!. இந்தஸௌலப்யமுபாயமாகிறபடியெங்ஙனேயென்னில்; "𑌮𑌾𑌮𑍇𑌕𑌂" "மாமேகம்" (ருகக) என்கிறவிடத்தில்ஸாரத்யவேஷத்தையிறே! காட்டுகிறது. இன்னுமவ்வளவன்றிறே! யிங்கு. அதுக்கு முன்புமில்லை பின்புமில்லையிறே! அந்தஸௌலப்யந்தான்; நித்யஸந்நிதி பண்ணுகிறவிடமிறே! யிவ்விடம். அங்குத்தானும் "𑌮𑌯𑍍𑌯𑌾𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥" "மய்யாஸக்தமநா:பார்த்த" (ருகஉ) என்றொருதேவையிட்டிறே! சொல்லிற்று; அதுவுமில்லையிறே! யிங்கு. இனித்தம்படி. சொல்லுகிறார் (புகலொன்றில்லாவடியேன்) கீழே "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும்–தம்முடையஶேஷத்வத்தையும், ஆகிஞ்சந்யத்தையுமுருவச்சொல்லிக்கொடுபோந்தார்; இனித்தான்; வெறுமையும், ஸ்வரூபமும், இரண்டும் ப்ரபத்திக்குப் பரிகரமிறே!; அத்தை இங்கேயும் ப்ரயோகிக்கிறார் அதுதன்னைச் சொல்லவேணுமிறே!. இங்குச்சொல்லவேண்டுகிறதென்னென்னில்; அவனுக்குபாயபாவம் ஸ்வரூபமானவோபாதி இவனுக்கும் இப்ப்ரபத்திஸ்வரூபமாகையாலே. இவனுக்கிதில்லாதவன்று ஸர்வமுக்திப்ரஸங்கமுமாமே. (அடியேன்) அதிலர்த்தப்ராப்தமான அஹம்ஶப்தத்தை யிங்குவாசகஶப்தத்தாலே சொன்னதுவேவாசி. (உன்னடிக்கீழ்) "𑌚𑌰𑌣𑌂" "சரணௌ" என்கிறது தன்னையே சொல்லுகிறது. "𑌸 𑌭𑍍𑌰𑌾𑌤𑍁𑌶𑍍𑌚𑌰𑌣𑍌" "ஸப்ராதுஶ்சரணௌ" (ருகந) என்றாப்போலேசொல்லக்கடவதிறே!. (அமர்ந்துபுகுந்தேனே)

எ.—"मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" "முமுக்ஷுர்வை ஶரணமஹம்ப்ரபத்யே"(ருகச)என்னுமாப்போலே.(அமர்ந்து) அவனுக்கொரு ஸஹகாரி வேண்டுதல்,தன்தலையிலே உபாயபாவங்கிடக்தல் செய்யிவிறே!நடுவொருவ்யவதாநவிளம்பங்களுக்கு ஹேதுவுள்ளது. (புகுந்தேனே) போனவெல்லையளவுமிறே!புகுருவதும்; முன்பும்அர்த்தத்திலிழவில்லையிறே!. இவனுடைய விப்ரதிபத்தியேயிறே! யுள்ளது, அதுபோமித்தனையிறே! வேண்டுவது. அத்யவஸித்தேனென்கிறார். இங்குத்தை வர்த்தமாநம்-ஸ்ம்ருதி ஸந்ததிபோலன்றிறே!; ருசிகார்யமாய் வருகையாலே ப்ராப்யத்திலுடைய ப்ராப்தியளவும் நிற்குமிறே!.

ஸகலஶாஸ்த்ரங்களிலும் வ்யாபரிப்பதொன்றாய், இஶ்ஶாஸ்த்ரங்களுக்கெல்லா மடியான வேதாந்தங்களுக்குக் கிழங்காய், நம்மாசார்யர்களெல்லாரு மொக்க வாதரித்துப் போருவதோரர்த்த விஶேஷத்தை இப்பாட்டாலே அருளிச்செய்கிறார். ப்ரதமாசார்யருமாய், "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே பகவத்ப்ரஸாதலப்த ஜ்ஞாநவைபவருமான விவர் பரிக்ரஹிக்கையாலே வந்த ஏற்றமுமுண்டு. இவ்வுபாயந்தன்னைப் பரிக்ரஹித்து ப்ரயோஜநாந்தரத்தைக் கொள்வாரும், ஸாதநாந்தரத்தைப்பரிக்ரஹித்து இவனையே ப்ரயோஜநமாகப்பற்றுவாருமாய் இருப்பர்கள் புறம்புள்ளார்; அங்ஙனன்றிக்கே, இவனையே ப்ராப்யமும்ப்ராபகமுமாக அத்யவஸித்திருக்கிற ஏற்றமுண்டிவர்க்கு. ப்ராப்ய மிவனேயாகில் ப்ராபகாந்தரங்களை பரிக்ரஹித்தால் வரும் குற்ற மென்னென்னில்; அவை ஸாத்யமுமாய்ப் பலவுமாய் துஶ்ஶகமுமாய் ஸ்வரூபத்துக்கு அநநுரூபமாய் இருக்கும்.இப்படி யிருக்கும் ஸாதநாந்தரங்கள்பல. அவையெவையென்னில்; கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்கள். கர்மயோகமாவது – ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாக ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசிதமாய் விஹிதமான கர்மத்தை பலாபிஸந்திரஹிதமாகவும் கர்த்ருத்வத்யாகத்தையும் ஸங்கத்யாகத்தையும் பண்ணி பகவத்ஸமாராதந புத்த்யாபண்ணவே, விரோதியானபாபம் க்ஷபித்து மநஸ்ஸு நிர்மலமாய்ஸ்வரூபப்ரகாஶமும் உண்டாய் பகவத்ஜ்ஞாந ப்ரேமங்கள் பிறந்து, அதுபரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியாய்ப் பேற்றோடே ஸந்திப்பிக்கும். ஜ்ஞாநயோகமாவது-இந்த்ரியங்களை நியமித்துக்கொண்டு ஸ்வரூபத்தை விஷயமாக்கி பகவத்ஜ்ஞாநம் பிறந்து தத்விஷயப்ரேமமும் பிறந்து, மேல் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளும் பிறந்துபேற்றோடே ஸந்திப்பிக்கும். அங்ஙனன்றிக்கே, இக்கர்மஜ்ஞாநங்களிரண்டையும் பகவத்விஷயத்திலேயாக்கி, "मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु" "மந்மநாபவமத்பக்தோமத்யாஜீமாம்நமஸ்குரு" (ருகரு) என்கிறபடியே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாய்ப் பேற்றோடே தலைக்கட்டுமது -யோக

எ.—மாவது. இவைபோல் துஶ்ஶகமன்றியிலே, திருநாமத்தை ஸுஶோபாயமாக விதித்தது எங்கே யென்னில்; தர்மபுத்ரனுக் கநேக தாமங்களையுஞ் சொல்ல, "𑌕𑍋 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌭𑌵𑌤𑌃 𑌪𑌰𑌮𑍋 𑌮𑌤𑌃" "கோதர்மஸ்ஸர்வதர்மாணும் பவதஃபரமோமதஃ" (ருகசு) என்கிறபடியே உன்னெஞ்சாலறுதியிட்டிருக்கும் பரமதர்மத்தைச் சொல்லவேணுமென்ன; "𑌏𑌷 𑌮𑍇 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂" "ஏஷமேஸர்வதர்மாணும்" (ருகஎ) இத்யாதிப்படியே அதிகதமமானதர்மம் திருநாமமென்று சொன்னாரிறே!. திருநாமம்ஸாதநாங்கமன்றோ? ஸ்வயம்சாதநமோ? என்னில்; "𑌜𑌨𑍍𑌮𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌾𑌤𑍍 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇" "ஜந்மஸம்ஸாரபந்தநாத்-முச்யதே" (ருகஅ) என்று-விரோதிநிவர்த்தியையும் "𑌯𑌾𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍" "யாதிப்ரஹ்மஸநாதநம்" (ருககூ) என்று-பலப்ராப்தியையுஞ்சொல்லித் தலைக்கட்டுகையாலே, விரோதிநிவ்ர்த்தி பூர்வகமான அபிமதபலஸித்திக்கும் ஸ்வயம்ஸாதநமே. "𑌦𑍇𑌶𑍋𑌽𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍" "தேஶோயம்ஸர்வகாமதுக்" (ருஉ0) என்று ஸர்வாபிமதஸாதநமாக தேஶவாஸத்தைச்சொல்லிற்று; "𑌆𑌰𑌾𑌧𑌨𑌾𑌨𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂" "ஆராதநாநாம்ஸர்வேஷாம்" (ருஉக) என்று தொடங்கி, "𑌤𑌦𑍀𑌯𑌾𑌰𑌾𑌧𑌨𑌂 𑌪𑌰𑌮𑍍" "ததியாராதநம்பரம்" (ருஉஉ) என்றுதலைக்கட்டுகையாலே ஸர்வாபிமதஸித்தியும் ததியரை ஆராதிக்கவேகிடைக்குமென்று சொல்லிற்று; அப்படிசொன்ன துஶ்ஶகமான ஸர்வோபாயங்களும் அஹங்காரஸ்பர்ஶ முண்டாகையாலே த்யாஜ்யமாகச்சொல்லிற்று. ஒன்றாய் ஸித்தமாய் ஸுஶகமாய் ப்ராப்தமாய், தனக்கவ்வருகொன்றின்றிக்கே "𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌮𑍇𑌷𑌾𑌂 𑌤𑌪𑌸𑌾𑌮𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌮𑌾𑌹𑍁𑌃" "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹுஃ" (ருஉங) என்கிற ப்ரபதநத்தைச் சொல்லுகிறதிப்பாட்டால். இதோன்பது பாட்டாலும் - ஶரண்யன் ஸ்வரூபத்தையும் அதிகாரி ஸ்வரூபத்தையுஞ்சொல்லி, ஶரணாகதி ப்ரகாரத்தைச்சொல்லுகிற இப்பாட்டில். ஶரண்யன்ஸ்வரூபமாவது - நிரதிஶயபோக்யமுமாய் வகுத்தவிஷயமுமாய் விரோதிநிவர்த்தகமுமாய் ஸர்வஸுலபமுமாயிருக்குமது. அல்லாதவைபோலன்றியிலே ஆஶ்ரயணத்துக்குஏகாந்தமாயிருப்பது ஸௌலப்யம். பரவ்யூஹங்கள்சேதநனுக்கு ருசிபிறந்தபோதே ஆஶ்ரயிக்கவொண்ணாதபடி தேஶவிப்ரகர்ஷ்டமாயிருக்கும், வ்யூஹமும் ப்ரஹ்மாதிகளுக்கா மத்தனையாகையாலே தத்ப்ராயம், அவதாரங்கள் பாக்யாதிகராய் அக்காலத்தி லுதவினார்க்கொழியப்பிற்பாடர்க் குதவாமையாலே காலவிப்ரக்ருஷ்டமாயிருக்கும்; அக்குறைகளிரண்டுமின்றியிலே யெல்லாக்காலத்திலு மெல்லார்க்கும்வந்தாஶ்ரயிக்கலாம்படி, "வானவர்வானவர்கோனொடும்" என்கிறபடியே நித்ய ஸூரிகளோடு, இவ்வருகுள்ள ப்ரஹ்மாதிகளோடு, இவ்வருகுள்ள மநுஷ்யர்களோடு கானமும் வானரமுமாய்க்கொண்டு அத்யந்த ஹேயஜந்மாக்களானாரோடு வாசியற ஸர்வ ஸமாஶ்ரயணீய ஸ்த்தலம்திருவேங்கடமுடையான்திருவடிகளே. அஜஹத்ஸ்வபாவனாகையாலே அபிமதஸித்திக்குட

லான ஜ்ஞாநஶக்த்யாதி குணஷ்டகங்களையுமுடையனாகையாலே, ஸர்வகுணங்களாலும் பரிபூர்ணனான திருவேங்கடமுடையான் ஶரண்யன். அதிகாரிஸ்வரூபமாவது-அநந்யகதித்வமும் ப்ராப்யருசியும் ஸ்வரூபப்ரகாஶமுமென்கிற விவையிறே!. திர்யக்குக்களுக்கு இப்படி ஆஶ்ரயணங் கூடுமோவென்னில்; ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணினானாகத் துறைச்சுவடிகளிலே யெழுதியிட்டுவைத்தும் சொல்லியும் கேட்டும்போராநின்றோமே!; இங்கும் "வைப்பன்மணி விளக்காமாமதியைமாலுகவென்,றெப்பொழுதும்கைநீட்டும்யானையை" என்றும்,"புகுமதத்தால்வாய்பூசிக்கீழ்தாழ்ந்தருவி,யுகுமதத்தால்காற்கழுவிக்கையால்-மிகுமதத்தேன், விண்டமலர்கொண்டுவிறல்வேங்கடவனையே, கண்டுவணங்கும்களிறு." என்றும்; ஸ்த்தலாந்தரத்திலே, "புனத்தினைக்கிள்ளிப்புது அவிக்காட்டியுன்பொன்னடிவாழ்கவென், றினக்குறவர்புதியதுண்ணுமெழில்மாலிருஞ்சோலையெந்தாய்" என்றும் ஆழ்வார்களருளிச்செய்துவைத்தார்கள். இனி, அவ்வோபாதியாகிலும் இத்தையும்விஶ்வஸிக்கவேண்டாவோ நமக்கு. இனி, (ஜ்ஞாநாதிகளால் பூர்ணனான)ஶரண்ய விஷயத்தில் ஶரணாகதிபலவ்யாப்தை யென்னுமோபாதி, ஆநுகூல்யாதிவிஶிஷ்டனான அதிகாரி ஶரணம்புக்கால் பலவ்யாப்தி யென்கிற அர்த்தத்தையுஞ்சொல்லுகிறது.(அகலகில்லேனிறையு மென்றலர்மேல் மங்கையுறைமார்பா) என்கிறவித்தாலே தம்முடைய ஆகிஞ்சந்யபூர்வகமாகப் பெரியபிராட்டியார்புருஷகாரமாக, ஸர்வஸுலபனான திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து ஶரணம்புகுகிறார் (அகலகில்லேனிறையுமென்றலர்மேல் மங்கையுறைமார்பா) நிரபேக்ஷமுமாய் ஸாபேக்ஷமுமா யிருக்கு மிவ்வுபாயம் ஆகாரபேதத்தாலே. நிரபேக்ஷமாகிறபடி யெங்ஙனே யென்னில்; ருசியைப்பிறப்பிக்கையும், பிறந்த ருசியை வளர்க்கையும் விரோதிகளைப் போக்குகையும், ஒருதேஶவிஶேஷத்தேறக்கொண்டு போகையும், ப்ராப்தமான கைங்கர்யத்தைக் கொள்ளுகையுமாகிற இவ்வோவிடங்களில் நிரபேக்ஷமாகத் தானே செய்யும்; ஸஹகாரிவேண்டா. (ஸாபேக்ஷமானபடியென்னென்னில்; அதிகாரிஸாபேக்ஷமுமாய்,புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கையாலே). இவ்வுபாயம் ஆர்க்கென்றால், அதிகாரிக்கென்கையாலே, அதிகாரிஸாபேக்ஷம். (அதிகாரிஸாபேக்ஷமானவோபாதி புருஷகாரஸாபேக்ஷம்.) எங்ஙனேயென்னில் ; இவ்வதிகாரி, பூர்வாபாரதத்தையும்பார்த்து அவனுடையஸ்வாதந்த்ர்ய ஸார்வஜ்ஞ்யாதிகளையும் பார்த்துப்பிற்காலிக்க, 'அஞ்சாதே' என்று புருஷகாரமானவள்சொல்லவேண்டுகையாலே. (ஆகையாலே)[அதிகாரி ஸாபேக்ஷமுமாய் புருஷகார]ஸாபேக்ஷமுமாயிருக்கும். "அகலகில்லேனிறையும்" ஒருக்ஷணகாலமும் பிரிய ஶக்தை

எ.—யல்லேன். இப்படி சொல்லுகிறவள்தாநாரென்னில்; த்ரிவிதசேதநர்
க்கும் ஸ்வாமிநியுமாய், உபயவிபூதிநாதனுக்கும் நியாமிகையுமாய்இருக்
குமவள்கிடீர்!. த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநி யென்னுமிடத்தில் ப்ரமா
ணம்:-"𑌈𑌶𑍍𑌵𑌰𑍀𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂" "ஈஶ்வரீம்ஸர்வபூதாநாம்" (ருஉச) என்ன
க்கடவதிறே!. உபயவிபூதிநாதனுக்கும் நியாமிகையென்னுமிடத்துக்கு
ப்ரமாணம்:-"𑌪𑍁𑌂𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑍇𑌶𑍍𑌵𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑍀𑌂" "பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்" (ருஉரு)
என்றுப்ரதாநபுருஷர்களுக்கீஶ்வரனவன், அவனுக்கிவள் ஈஶ்வரியென்று
சொல்லுகையாலே. ஆக ஸர்வர்க்கும் நியாமிகையென்னுமிடஞ்சொல்
லிற்று. இவள்நியமிக்கும் ப்ரகாரமென்னென்னில்; த்ரிவிதசேதநரையு
ம் மாத்ர்த்வ ப்ரயுக்தமாக நியமிக்கும் ஈஶ்வரனை ப்ரணயித்வ நிபந்த
நமாக நியமிக்கும். மாத்ர்த்வம் ஸ்வரூபாநுபந்தி, ப்ரணயித்வம் காதா
சித்கமாகையாலே வந்தேறியாகாதோவென்னில் ; ஆகாது. எங்ஙனே
யென்னில்; உபாதி நித்யமாகையாலே அதுவும் நித்யம். ஈஶ்வரன் ஸ்ர்ஷ்
ட்யாதிகளைப் பண்ணுமிடத்திலும் இவள்நியாமிகை. "𑌯𑌸𑍍𑌯𑌾 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌮𑍁𑌖𑌂
𑌤𑌦𑌿𑌙𑍍𑌗𑌿𑌤𑌪𑌰𑌾𑌧𑍀𑌨𑍋 𑌵𑌿𑌧𑌤𑍍𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌂" "யஸ்யா வீக்ஷ்யமுகம்ததிங்கிதபராதீநோவி
தத்தேகிலம்" (ருஉசு) என்று அவள்கடாக்ஷமடியாக ப்ருகுடிபடனாய்க்
கொண்டு ஸ்ர்ஷ்ட்யாதிகளைப்பண்ணும். அதுவென், "𑌕𑌾𑌰𑌣𑌕𑌲𑍇𑌬𑌰𑍈𑌰𑍍𑌘𑌟𑌯𑌿
𑌤𑍁𑌂 𑌦𑌯𑌮𑌾𑌨𑌮𑌨𑌾𑌃" "காரணகளேபரைர்க்கடயிதும் தயமாநமநா:" (ருஉஎ)
என்று-தன் தயையடியாகவன்றோ ஸ்ர்ஷ்டிப்பதென்னில்; அவற்றின் செ
ல்லாமை பார்த்து ஸ்ர்ஷ்டிக்கிலிறே! தயை யடியாவது; தன்செல்லாமை
யாலே அவள்கடாக்ஷமடியாகத் தன் ஸத்தையுண்டாய், அவள்ப்ரேரிக்கத
யைபிறந்து, அத்தயையடியாகவிறே! அவன் ஸ்ர்ஷ்டிப்பது. நியமிக்குமி
டத்தில் "𑌅𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌾 𑌜𑌗𑌤𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌤𑍍𑌨𑍀" "அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ"
(ருஉஅ) என்றும், "𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌰𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀" "விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ" (ருஉகூ)
என்றுஞ்சொல்லுகிறபடியே தன் ஸ்வரூபங்குலையாமேயிறே! நியமிப்
பது. எங்ஙனேயென்னில்; ப்ரபை ப்ரபாவானுக்கு ஶேஷமாய் நின்றே அ
த்தலைக்குநிறங்கொடுக்குமாப்போலவும், பரிமளம புஷ்பத்துக்கு ஶேஷ
மாய்நின்று பெருவிலையனாக்குமாப்போலவும், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யங்
குலையாதேபாரதந்த்ரனுமாப்போலேயுமிறே! இவளுமத்தலைக்கநந்யார்ஹ
ஶேஷமாய்க்கொண்டே நிறங்கொடுக்கும்படி. விஶ்லேஷத்துக்கடிகர்மம
ன்றோ? கர்மஸ்பர்ஶ மின்றிக்கே யிருக்க, இவள் "அகலகில்லேன்" என்
னப்போமோ? என்னில்; கர்மத்தோபாதி, அவனுடைய வைலக்ஷ
ண்ய மடியாகச்சொல்லுகிறாள். வைலக்ஷண்யம் போக்யமா மத்தனைய
ன்றோவென்ன ; மஹார்க்கமா யிருப்பதொருரத்நத்தை லபித்தால்,
'இது நமக்குத்தொங்குமோ' என்று துணுக்குத்துணுக்கென்னு மவனை
ப்போலே, 'அவன்மார்விலேயிருந்தகலிற்செய்வதென்' என்று அஸ்த்
தாநே பயஶங்கைபண்ணுகிறாள். (இறையும்-அகலகில்லேன்) ஸம்ஶ்லே

எ.—ஷாங்கமான விஶ்லேஷமும் பொறுக்கமாட்டேன். அவனுபாயமா
மிடத்திலங்கத்தை ஸஹியாத சுணையுடைமைபோலே, ஸம்ஶ்லேஷாங்
கமான விஶ்லேஷமும் பொறாதமார்த்தவம். அவன்மார்விலேயிருந்து
அவன் முகத்தைநோக்கி, 'உன்னையகலஶக்தையாகிறிலேன்' என்று
அவன் வைலக்ஷண்யத்தை அவனுக்குச் சொல்லுகிறாள். ஸ்வதஸ்ஸர்வ
ஜ்ஞனாயிருக்கிறவன் தன்னுடைய வைலக்ஷண்யம் ஸ்வகீயஜ்ஞாநத்து
க்கு விஷயமன்றோ? இவள் சொல்லவறியுமிடமவனுக்கு ஜ்ஞாநக்கொ
த்தையன்றோவென்னில் ; இவள்சொல்லவறிந்திலனாகில் அவன் ப்ரண
யித்வத்துக்குக் கொத்தையாமே;"தனக்குந்தன்றன்மை யறிவரியான்"
என்றுஞ்சொல்லா நின்றதிறே!. ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளேயிறே! ஜ்ஞாந
த்துக்குவிஷயம் ; "ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களுஞ்செய்"
என்றதிறே! "அகலகில்லேனிறையும்" என்கிறபாசுரமுஞ்சொல்லமா
ட்டாததசையிறே! அவன்தசை. அவன்வைலக்ஷண்யங்கண்ட இவளி
லும் அவனுக்குண்டானவேற்றம், விஶ்லேஷதசையிலவன்பாசுரத்தேகா
ணுமத்தனையிறே!. "మాసాదూర్ధ్వం నజీవిష్యే" "மாஸாதூர்த்வம்நஜீவிஷ்யே"
(ருக௦)என்றாளிவள், "నజీవేయం క్షణమపి" "நஜீவேயம்க்ஷணமபி"(ருகக)
என்றானவன். பரதந்த்ரராயிருப்பார்க்கு உடையவன் வருந்தனையும்
பொறுக்கவேணுமிறே!, ஸ்வதந்த்ரனுக்கதுவேண்டாவே. இப்படி உப
யமும் விலக்ஷணமான மிதுநமுத்தேஶ்யமாக இருக்கிற முமுக்ஷுக்க
ளுக்கு ஒருகுறையுண்டோ? இவர்களைத் தனித்தனியே பற்றினார்க்கு
ஸ்வரூபவிநாஶமிறே! 'மிதுநமேயுத்தேஶ்யம்'என்றிருப்பார்க்கு ஸ்வரூ
போஜ்ஜீவநமிறே!. ராவணாதிகள் பக்கலிலேஇவ்வர்த்தங்காணவுமாம்.
(அலர்மேல்மங்கை)பூவில் ர்ஜீஷமானதாதும் சுண்ணமுங்கழிந்த பரி
மளமே வடிவானாற்போலே யிருந்துள்ள ஸௌகுமார்யமும், நித்யா
நுபாவ்யமானபருவமுமுடையவள். அவனை "அகலகில்லேன்" என்ன
ப்பண்ணவல்லபரிகரத்தையுடையவிவள் "அகலகில்லேன்"என்கிறாளி
றே!. (உறைமார்பா) அவன்மார்விற்சுவடறிந்தபின்பு,பிறந்தகமானபூவு
ம்நெருஞ்சில்முள்ளோபாதியாயிற்று. ஸ்ரீஜநகராஜன்திருமகள்பெருமா
ளைக்கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலவும், முக்தன்
"నోపజనం స్మరన్నిదం శరీరం" "நோபஜநம்ஸ்மரந்நிதம் ஶரீரம்"(ருகஉ)
என்று – ஸம்ஸாரத்தை நினையாதாப்போலவும், அவன்மார்வில்போ
க்யதையறிந்தபின்பு பூவை நினைத்திலள். அஸங்குசிதஜ்ஞாநராயி
ருக்கச்செய்தே, ஸம்ஸாரத்தைக்காணுதவிடம் ஜ்ஞாநக்குறையன்றே ;
போக்யதாதிஶயமிறே!; இவளும்போக்யதையாலேயிறே!காணுதொழி
கிறது. (உறைமார்பா) இவள், பூவைக்காணுதவோபாதி திருமார்வுக்க
வ்வருகு அவயவங்களைக்காணாள். மற்றுள்ள அவயவங்கள் குமர்கிட
ந்துபோமத்தனை. இவ்வளவால் சொல்லிற்றாய்த்து - * ஸ்ரீஶப்தமும்,

எ.—மதுப்பிலர்த்தமும். * ஸ்ரீஶப்தம்—புருஷகாரம் வேண்டுகையாலே சொல்லிற்று, *மதுப்பில்—நித்யயோகத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில்; ஆஶ்ரயிப்பார்க்குக் காலம்பார்க்கவேண்டாதபடி ஸதாஸந்நிஹிதம்.(நிகரில்புகழாய்)இத்யாதி.*நாராயணஶப்தார்த்தம் சொல்லுகிறது. இதுக்குப்பொருள்-உபயவிபூதியோகமும் "ಸರ್ವಜಾಗತಿಕ್ಕ"" "நராஜ்ஜாதாநிதத்வாநி" (௩௨௩)என்கிறபடியே ஜகத்காரணத்வமும் அர்த்தமாகச் சொல்லாநிற்கச்செய்தே, நம்மாசார்யர்கள் ஆஶ்ரயணத்துக்கேகாந்தமான ஸௌலப்யாதிகுணங்கள் நாலையும் சொல்லிப்போருவர்கள்; அக்குணங்களுக்கு க்ரமமருளிச்செய்கிறாரிவர். அக்குணங்கள் சொல்லுகிறவிடத்தில்,வாத்ஸல்யம் முன்னாகச்சொல்லுவானென்னென்னில்; ஸாபராதனாகையாலே இவ்வபராதம் பொறுக்கைக்குறுப்பாகப் புருஷகாரம் வேண்டினால், அநந்தரம் இவ்வபராதம் போக்யமாவதொரு குணம் முன்னாகவேண்டுகையாலே.(நிகரில் புகழாய்) என்ன- வாத்ஸல்யத்தைக்காட்டுமோவென்னில்; இதுக்குப்பொருள்—கத்யத்திலே"ಅಪಾರಕಾರುಣ್ಯಸೌಶೀಲ್ಯವಾತ್ಸಲ್ಯ" "அபாரகாருண்ய ஸௌஶீல்யவாத்ஸல்ய" (௩௨௪)என்று குணங்களோடோக்கவெடுத்து, "ಆಶ್ರಿತವಾತ್ಸಲ್ಯೈಕಜಲಧೇ" "ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதே" என்றிக்குணத்தை விஶேஷிக்கையாலே சொல்லிற்று. (உலகமூன்றுடையாய்) கீழ்ச்சொன்ன வாத்ஸல்யத்துக்கடியான குடற்றுடக்கைச்சொல்லுகிறது. தன்வயிற்றிற்பிறப்பாலேயிறே!ஜநநி வத்ஸலையாகிறது."என்னையாள்வானே" என்று-ஸௌஶீல்யத்தைச்சொல்லுகிறது. "என்னையாள்வானே" என்று – கைங்கர்யதஶை போலே, உபகாரந்தோற்றச்சொல்லப்பெறுவரோ? ஆகிஞ்சந்யம் முன்னாக ஆஶ்ரயிக்கிறவரென்னில்; (அவன்கைவிடாமல் கைக்கொள்ளுகைக்காக), புருஷகாரத்தைப்பார்த்துவார்த்தைசொன்னார் ப்ரதமபதத்தில், அநந்தரம் உபாயத்தைப்பார்த்து வார்த்தைசொன்னார், இதில் நாட்டைப்பார்த்துச்சொல்லுகிறார்.(தாமுமவர்களிலேயந்யதமரிறே!.) விஷயாந்தரங்களினுடைய லாபாலாபமே பேறிழவாக இருக்கிறவர்களிலே அந்யதமராயிருக்கிறதம்மை, 'கர்மாத்யுபாயங்கள் ஸ்வரூபவிரோதி' என்றறியுந்தனையும் வரநிறுத்தி, பிராட்டி புருஷகாரமாகத்தானே யுபாயமும் தானேப்ராப்யமும் என்னும்படி பண்ணினஉபகாரத்தைச்சொல்லுகிறார். இது – ஸௌஶீல்யமானபடி யெங்ஙனேயென்னில் ; "ಶೀಲಂಹಿನಾಮ - ಮಹತೋಮಂದೈಸ್ಸಹನೀರಂಧ್ರೇಣಸಂಶ್ಲೇಷಃ" "ஶீலம் ஹி நாம-மஹதோமந்தைஸ்ஸஹ நீரந்த்ரேணஸம்ஶ்லேஷ:" (௩௨௫)என்கிறபடியே, தன்மேன்மையையுமென்சிறுமையையும் பாராதே யொருநீராகக்கலந்தானென்கிறார். (நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்புந்திருவேங்கடத்தானே) யென்றுஸௌலப்யம். (அமரர்முனிக்கணங்கள்) என்

எ.—நிறத்தைவித்யம் – "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்றும், "ஶக்தை: பாகவதைஸ்ஸஹ" "பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" (ருகூ) என்றுஞ் சொல்லுகையாலே. "நிகரில்" என்பானென்னென்னில்; இவர்க்கொரு வரு மொப்பல்ல. ப்ரக்ர்தி ஸம்பந்தத்தாலே ஸம்ஸாரிகளொப்பல் லர், ப்ரக்ர்திஸம்பந்தாந் நிர்க்கதராகையாலே முக்தரொப்பல்லர், ஜக த்வ்யாபாராதிகளுண்டாகையாலே ஈஶ்வரனொப்பல்லன்.

"ஜகத்வ்யாபாரவர்ஜம்" "ஜகத்வ்யாபாரவர்ஜம்" (ருகூஎ) என்று நிஷேதித்து, "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" (ருகூஅ) என்று பகவதநுபவத்திலே அந்வயம். (விரும்புந்திருவேங்கடத்தானே) இவர்க ளுக்கு விருப்பமாவது-இருட்டறையிலேவிளக்குப்போலே, பரமபதத் திற்காட்டிலும் "கானமும்வானரமும்" என்கிறபடியேஎத்தனையேனுந்தா ழ்ந்தார்க்கும் முகங்கொடுக்கிற ஶீலாதிகுணங்க ளிங்கேயுண்டாகையா லே, அங்கில்லாதது மிங்கேபெறுகையாலே விரும்புவர்கள்; ஸௌலப் யமாவது – உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடுவாஶியற ஸர்வஸுலபமான அர்ச்சகபராதீநத்வம். (புகலொன்றில்லாவடியேன்) "ப்ரபத்யே" "ப்ர பத்யே" என்கிறவிடத்தி லுத்தமனால் வந்த அதிகாரிஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அநந்யகதித்வமும், ஸ்வரூபப்ரகாஶமான அநந்யார்ஹ ஶேஷத்வமுஞ்சொல்லுகிறது. "புகலொன்றில்லா" என்றும், "அடியே ன்" என்றும் இரண்டுஞ்சொல்லவேணுமோவென்னில்; ப்ரக்ர்திஸம்பந் தத்தில் பாரமார்த்யத்தாலேயும், *மயர்வறமதிநலமருளப்பெற்ற ஜ்ஞாந வைபவத்தாலேயு மருளிச்செய்கிறார். (உன்னடிக்கீழ்) "சரணௌ" என்கிறபதத்தில் விக்ரஹத்தையைச்சொல்லுகிறது. சுபாஶ்ரய மு மாய், விஷயாந்தரங்களி லருசி பூர்வகமாகத் தன்பக்கலிலே ருசியையு முண்டாக்கி, பிறந்தருசியையும்வளர்த்து, ப்ராப்திவிரோதியையுந்த விர்த்து, ஒருதேஶவிஶேஷத்திலேபோனால் நித்யகைங்கர்ய ப்ரதிஸம்ப ந்தியுமாய், *ஸதாபஶ்யந்திக்கு விஷயமுமாவது விக்ரஹமாகையாலே. அடியிலே, "துயரறுசுடரடிதொழுதெழு" என்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்து தாம்பற்றுகிறவிடத்தில், "உனபாதங்கூடுமாறுகூ றாய்" என்றும், "உன்னடிசேர்வண்ணமருளாய்" என்றும், "உன்னடி சேரவடியேற்காவாவென்றுயே" என்றும், "பூவார்கழல்களருவினையே ன்பொருந்துமாறுபுணராய்" என்றும், "உனபாதஞ்சேர்வதடியேனெந் நாள்" என்றும், "மண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கு" என்று ம், "எந்நாளுன்னடிக்களடியேன்மேவுவதே" என்றும், "நொடியார்பொ ழுது முனபாதங்காணநோலாதாற்றேன்" என்றும், "நோலாதாற்றேனு னபாதங்காண" என்றும், "அடியேனுனபாதமகலகில்லேனிறையும்" என்றும், "உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்றும் இவர் அடிவிடாமல நுஸந்தித்தபடிகண்டதே! (அமர்ந்து) அமருகையாவது–உபாயாந்தரங்

எ.—களைவிட்டவோபாதிப்ராப்யாந்தரங்களில்அருசியைச்சொல்லுகிறதோவென்னில்; அதிங்குப்ரஸ்துதமல்லாமையாலேப்ரஸங்கமில்லை. இக்குப்பொருள்—"సర్వధర్మాన్ పరిత్యజ్య" "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" (ருஙகூ) என்றும், "శరణం వ్రజ" "ஶரணம்வ்ரஜ" என்றும்சொல்லச்செய்தேஏகபதப்ரயோகம்பண்ணினவோபாதி, திருவேங்கடமுடையான் திருவடிகளும் தம்முடையதலையும் கொக்குவாயும் படுகண்ணியும்போலே நிர்விவரமாகப் பொருந்தினபடிசொல்லுகிறது. (புகுந்தேனே) ப்ர்தக்ஸ்திதியாதிகளில்லாதபடி ஶரீரவச்சேஷமான தமக்கந்தர்யாமியாய் நிற்கிறபடியை அறிந்திருக்கிறவிவர் (புகுந்தேன்) என்கிறவிது-ஒருபோக்குவரத்துண்டாயன்று; அவனுடைய ஸர்வஜகத்காரணத்வத்தையும்ஸர்வாத்மபாவத்தையும் ஸர்வரக்ஷகத்வத்தையும்அறிந்து 'அவனேயுபாயம்' என்கிற அத்யவஸாயஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. "గత్యర్థా బుద్ధ్యర్థాః" "கத்யர்த்தாபுத்த்யர்த்தா:" (ருச0) என்கிறபடியே. (புகுந்தேனே) "ప్రపద్యే" "ப்ரபத்யே" என்கிறவர்த்தமாநம் கௌணம்; அடைந்தேன் என்கிறப்போலே, புகுந்தேனென்கிறவிதுவே முக்யம்.

[పాపానాం వా] [பாபாநாம்வா] (ருசக) பிராட்டியுடைய அபயப்ரதாநமிஶ்லோகம். 'ராவணனும்பட்டுபெருமாளும்விஜயிகளானார்' என்று பெரிய ப்ரியத்தைப் பிராட்டிக்குத் திருவடி விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே விம்மல் பொருமலாய் ஸ்தப்தையாயிருக்க, இவனும் விக்கலுக்குவெம்மாற்றம்போலே "కిన్ను చిన్తయసే దేవి కిం త్వం మాం నాభిభాషసే" "கிந்நுசிந்தயஸேதேவிகிம்த்வம்மாந்நாபிபாஷஸே" (ருசஉ) என்றுபெரியப்ரியத்தைவந்துவிண்ணப்பஞ்செய்தஎனக்குஒருமறுமாற்றஞ்சொல்லாதே தேவரீரெழுந்தருளியிருக்கிறஇருப்புஎன்தான் என்றுதிருவடிவிண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் 'உனக்கு ஸத்ருஶமாகத் தரலாவதொன்றில்லாமைகாண் நான்பேசாதிருந்தது' என்ன, இவனும் 'இவ்வளவிலே நம்மபேக்ஷிதத்தை விண்ணப்பஞ்செய்துகொள்ளவேணும்' என்றுபார்த்து, 'தேவரைச் சுற்றும்முற்றும் நலிந்தராக்ஷஸிகளாகிறார் க்ரூரைகளாய் கதநுகுணபாவைகளாயிற்று, ராவணனுக்கு முன்பேகொல்லவேண்டுவதிப்பெண்பிள்ளைகளையாயிற்று, அவனும் இவர்களோபாதிகேடனல்லன், இவர்களிப்போது பாம்பு படமடங்கினுப்போலே யிருக்கிறார்களித்தனையாயிற்று, இவர்களைபஹுப்ரகாரமாக ஹிம்ஸிக்கப்பாராநின்றேன், "ముష్టిభిః పాణిభిశ్చైవ" "முஷ்டிபி:பாணிபிஶ்சைவ" (ருசங) என்று கையாலேகுத்தியும், காலாலேதுகைத்தும், நகங்களாலேசாடித்தும், பற்களாலேகடித்தும், துண்டித்தும் "ఛిన్నం భిన్నం శరైర్దగ్ధం" "சிந்நம்பிந்நம்ஶரைர்தக்தம்" (ருசச) என்றுபெருமாள் திருச்சரங்கள்செய்ததெல்லாம் நானேபண்ணப்பாராநின்றேன்; பகவதபசாரிகளையும் பாகவதாபசாரிகளையும் தண்டிக்கும் க்ரம

எ.—த்திலே தண்டிக்கக்கோலாநின்றேன்; முன்புவந்தபோது இடமில்லாமைவிட்டுப்போனேனித்தனை; இப்போதெனக்கெல்லா ப்ரத்யுபகாரங்களும்பண்ணியருளிற்றுகலாம், இதித்தனையும்திருவுள்ளமாகவேணும்' என்றான். என்ன [ [illegible] ] [பாபாநாம்வா] என்றருளிச்செய்கிறாள். [ [illegible] ] [பாபாநாம்வாஸுபாநாம்வா] இவர்கள் நீ நினைத்திருக்கிறபடியே பாபைகளாகவுமாம், நான் நினைத்திருக்கிறபடியே ஸுபைகளாகவுமாம். அதுதானேயன்றோ உத்தேஸ்யம், "[illegible]" "தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்" (ருசரு) என்றாப்போலே. அழுக்குடையவனன்றோ குளிக்க ப்ராப்தியுடையான், அவர்கள் பாபைகளாகிலன்றோ நாம் முகங்கொடுக்கவேண்டுவது. ஸுபைகளாகில் உன் வால்வேணுமோ? அவர்கள் புண்யங்களே அவர்களுக்குக் கைகொடுக்குமே, கைம்முதலில்லாதார்க்கன்றோ நாம் கைம்முதலாகவேண்டுவதென்றாள். [ [illegible] ] [வதார்ஹாணம்] தண்ட்யரை தண்டிக்கவும் அல்லாதாரைத்தவிரவும் சொல்லுகிற தர்மஸாஸ்த்ரம் தேவரைத்தொற்றிக்கிழித்துப் பொகடக் கடவதோவென்ன; ஆரேனுமாக ஸரணாகதரை ரக்ஷிக்கக்கடவதென்கிற விஸேஷ ஸாஸ்த்ரம் உன்னைத்தொற்றிக்கிழித்துப்பொகடக்கடவதோவென்கிறாள். "ஸரணம்" என்று வந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் தோஷவானேயாகிலும் "[illegible]" "நத்யஜேயம்"(ருசகூ)என்று பெருமாள் கடற்கரையிற்சொன்ன வார்த்தை கடலோசையாகக் கடவதோ வென்கிறாள். [ [illegible] ] [ப்லவங்கம] பின்னையுமிவன்புத்தி திரியவிடாமையினாலே ஹரிஹரிஎன்கிறாள். "ப்லவங்கம" என்கிறாள்-நச்சினத்தை நச்சும் ஜாதியானமை கண்டோமேயென்கிறாள். வஸிஷ்டாதிகள் மந்த்ரிக்குங்குடியான இக்ஷ்வாகுவம்ஸத்தில் பிறந்தாயல்லே,யோகிகளான ஜநககுலத்தில்பிறந்தாயல்லே,காட்டிலே பணையோடுபணை தத்தித் திரிகிற ஜாதியிலேயிறே! பிறந்தது; அங்கனுத்தார்க்குஸரணாகதியோட்டையதுதெரியாதிறே!யென்கிறாள். "[illegible]" "வாநரோத்தம" என்றவள் ஹரி ஹரி என்கிறாள் தானேயிறே!.[ப்லவங்கம]என்கிறாள்-ராஜாக்களுமாய்மூலேயடியேநடக்க உரியருமாயிருக்கிற பெருமாளு மெங்கள்முன் இத்தனை கோபித்தறியார், நீ வாநரஜாதியாயிருந்துவைத்து இங்ஙன்கோபிக்கக்கடவையோ ?

[ [illegible] ] [ கார்யம்கருணமார்யேண ] இவர்கள் புண்யபாபங்கிடக்க இப்போதோடுகிற தயநீயதஸையைப் பாராய். உன்கையிலேயகப்பட்டு 'நாமென்படககடவோம்' என்று தியங்குகிறபடி பாராய். இவர்களுக்கு வேறுரக்ஷகரில்லேயே, இப்போது இவ்வளவில் நாமிரங்கவேணுங்காண். [ [illegible] ] [ஆர்யேண] இவையெல்லாமிப்போது நான் கற்பிக்க வேண்டும் படியாவதேயுனக்கு. [ [illegible] ] [ஆர்யேண] ஐந்த்ரவ்யாகரணபண்டிதனென்கிறது பொய்யோ? அவையுமெல்லாம் கற்றுக்

மூ.—"அவன்மார்வு விட்டுப் பிரியில், இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது."

வ்யா.—அவன்திருமார்விலே நித்யவாஸம்பண்ணுமிவள், அம்மார்வை விட்டுப்பிரியிலாய்த்து, அவனுக்கு ப்ரதிபாதகமான இவ்வக்ஷரத்தை விட்டுப்பிரிவது

எ.—கேட்டிருக்கச்செய்தேயும், இப்போதுராமகோஷ்டியிலபரிசயம் பின்னாட்டினபடியாகாதே. அக்கோஷ்டியிற்பழக்கமிறே! மிங்ஙன்சொல்லவல்லையாயிற்று. நான்போந்தபின்பு அக்கோஷ்டியிங்ஙனே நீரற்றதாகாதே யென்றுகருத்து. [నకశ్చిన్నాపరాధ్యతి] [நகஶ்சிந்நாபராத்யதி] ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதாரார்? திரைநீக்கிக்கடலாடப்போமோ? நற்குதிரையாகப்பாவித்திருக்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ? நான்தான் குற்றவாட்டியல்லேனோ?, நீதான்குற்றவாளனல்லையோ? பெருமாள்குற்றவாளரானபடி யெங்ஙனேயென்னில் ;—தாம்காடேறப்போந்தார், அவர்பின்னே மடலூருவாரைப்போலே இளையபெருமாளும் போந்தார், தம்மோடே ஏகாந்தபோகம்பண்ணைக் கடவதாக விலையகலப்படுத்துக்கொண்டு நானும்போந்தேன்; என்னைப்பிரிந்து பத்துமாஸமிருந்தார், தாம்வாராவிட்டால்தம்மதோரம்பு இசங்கமாட்டாமையில்லையிறே! யிவ்வழி; இத்தனைநாள்பிரிந்திருக்கவல்லரானபோதே பெருமாள்பக்கலிலேயன்றோ குற்றம். பாரதந்த்ர்யத்துக்கது குணமாகப்பேசாதிராதே, அதுதன்னைச்சொன்ன என்பக்கலதன்றோகுற்றம். இனி, நாயகன்சொன்னகார்யம் செய்தஅடியாரைதண்டிக்கப்பார்த்தவன்று, பெருமாளருளிச்செய்தகார்யம் செய்யப் போந்தவுன்னை முற்படதண்டித்துக்கொண்டன்றோ ராவணன்சொன்னகார்யம் செய்தஇவர்களை தண்டிப்பது; ஆகையால் நீயல்லவோகுற்றவாளன். 'எல்லாப்படியாலும்பெருமாளொருவிஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்குநாலுண்டு, நானுமவர் வழிபோகவேண்டி யிருந்தவன்றைக்கு நீயுண்டு' என்றிருந்தேன், நீயுமிங்ஙனேயானால் அபராதஞ்செய்தார்க்குப் புகுவாசலுண்டோ? என்கிறாள்". ..........................................................*

"అదర్శనే దర్శనమాత్రకామా దృష్ట్వా పరిష్వంగరసైకచిత్తాః। ఆలింగితాయాం పునరాయతాక్ష్యాం ఆశాస్మహే విగ్రహయోరభేదం॥" "அதர்ஶநே தர்ஶநமாத்ரகாமா த்ருஷ்ட்வாபரிஷ்வங்கரஸைகசித்தா:। ஆலிங்கிதாயாம்புநராயதாக்ஷ்யாமாஶாஸ்மஹேவிக்ரஹயோரபேதம்" (௫௪எ) "బ్రహ్మాదయో బహుతిథం యదపాంగమోక్షకామా స్తపస్సమచరన్ భగవత్ప్రపన్నాః। సాశ్రీస్స్వవాసమరవిందవనం విహాయ యత్పాదసౌభగమలంభజతేऽనురక్తా॥" "ப்ராஹ்மாதயோபஹுதிதம் யதபாங்கமோக்ஷகாமாஸ்தபஸ்ஸமசரந்பகவத் ப்ரபந்நா:। ஸாஶ்ரீஸ்வவாஸமரவிந்தவநம்விஹாயயத்பாதஸௌபகமலம்பஜதேநுரக்தா॥" (௫௪அ) "యః పూర్వ్యాయ వేధసే నవీయసే, సుమజ్జానయే విష్ణవే దదాశతి" "ய:பூர்வ்யாயவேதஸே நவீயஸே ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே ததாஶதி" (௫௪௯) இதிநித்யாபூர்வேப்ரமாணம்.

தொ.— ["இவ்வக்ஷர"] த்தை என்றது - (இவ்வகாரத்தை) என்றபடி.

வ்யா.— என்றென்கை. என்று என்கிற இத்தனையுங் கூட்டாதபோது இதோடு இவ்வாக்யம் அந்வயியாது. இத்தால், அவன் திருமார்வில் ஸம்பந்தம் இவளுக்கு நித்யமாகையாலே, அவன் தோற்றுமிடத்திலே இவளும் தோற்றுகை ஸித்தமாகையால், அவன் திருமார்வில் அந்வயத்தோபாதி, அவனுக்கு வாசகமான அகாரத்தில் அந்வயம் இவளுக்கு நித்யமென்றதாய்த்து.

---

ஸ.—பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (இத்தால்) என்று தொடங்கி.

(இத்தால்) என்றது- [அத்ர பகவத்ஸேநாபதி] இத்யாதிவாக்யத்தால் என்கிறபடி. (திருமார்வில் அந்வயமா) வது—ஸம்பந்தமென்றபடி; அதாவது—நித்யவாஸம் பண்ணுகை.

[அத்ர]-(இந்த அகாரத்திலே) [ஸ்ரீஸம்பந்தம் அநுஸந்தேயம்] என்கிறவிடத்தில், [“அவன்மார்வுவிட்டுப் பிரியில்”] ஆய்த்து [“இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது”] என்று [பகவத்ஸேநாபதிமிஶ்ரர்வாக்யம்] என்றந்வயம். மூலார்த்தம் ஸ்பஷ்டம். மார்விலே நித்யவாஸம் பண்ணுகைக்கு ஸ்ரீபாகவதே அஷ்டமஸ்கந்தே அஷ்டமாத்யாயே:—“తతశ్చావిరభూత్సాక్షాచ్ఛ్రీరమా భగవత్పరా। రంజయన్తీ దిశః కాన్త్యా విద్యుత్సౌదామినీ యథా॥ తస్యాం చక్రుస్స్పృహాం సర్వే ససురాసురమానవాః। రూపౌదార్యవయోవర్ణమహిమాక్షిప్తచేతసః॥ తస్యా ఆసనమానిన్యే మహేన్ద్రో మహదద్భుతం। మూర్తిమత్యస్సరిచ్ఛ్రేష్ఠా హేమకుంభైర్జలం శుచి॥ అభిషేచనికా భూమిరాహరత్సకలౌషధీః। గావః పంచ పవిత్రాణి వసన్తో మధుమాధవౌ॥ అభిషేచనికాః - అభిషేకోచితాః, పంచపవిత్రాణి -పంచగవ్యాని, మధుమాధవౌ - చైత్రవైశాఖౌ, తద్భవం - ఫలపుష్పాది. ఋషయః కల్పయాంచక్రురభిషేకం యథావిధి। జగుర్భద్రాణి గన్ధర్వా నట్యశ్చ ననృతుర్జగుః॥ మేఘా మృదంగపణవమురజానకగోముఖాన్। వ్యనాదయన్ శంఖవేణువీణాస్తుములనిస్వనాన్॥ తతోఽభిషిషిచుర్దేవీం శ్రియం పద్మకరాం సతీం। దిగ్గజాః పూర్ణకలశైస్సూక్తవాక్యైర్ద్విజేరితైః॥ సూక్తవాక్యైః - శ్రీసూక్తవాక్యైః. సముద్రః పీతకౌశేయవాససీ సముపాహరత్। వరుణస్స్రజం వైజయన్తీం మధునా మత్తషట్పదాం॥

---

தா.— (என்று) என்கிறபதம் கூடாதபோது வரும் தோஷத்தை அருளிச்செய்கிறார் (என்று என்கிறவித்தனையும்) இத்யாதியால். பலிதாம்ஶத்தை அருளிச்செய்கிறார் (இத்தால்) இத்யாதியால். (இத்தால்) என்றது-[“அவன்மார்வுவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம்விட்டுப்பிரிவது”] என்னு (மித்தாலே) என்றபடி.

---

பி.— (என்று) என்று சொல்லாதபதத்தைக் கூட்டுகிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (என்றுஎன்கிற இத்தனையும்) என்று தொடங்கி.

ఎ.—భూషణానివిచిత్రాణి విశ్వకర్మా ప్రజాపతిః। హారంసరస్వతీ పద్మమజో నాగాశ్చకుండలే॥ తతః కృతస్వస్త్యయనోత్పలస్రజంనదద్ద్విరేఫాం పరిగృహ్యపాణినా। చచాలవక్త్రం సుకపోలకుండలం సవ్రీడహాసందధతీసుశోభనం॥ స్తనద్వయంచాతికృశోదరీసమంనిరన్తరంకుంకుమచందనోక్షితం। ఇతస్తతోనూపురవల్గుశింజితైర్విసర్పతీహేమలతేవసాబభౌ॥ విలోకయన్తీనిరవద్యమాత్మనః పదంధ్రువంచావ్యభిచారిసద్గుణం। ధ్రువం - నిత్యం. అవ్యభిచారిణః - నిత్యాః - సన్తః - గుణాః - యస్మిన్ - తత్. గంధర్వయక్షామరసిద్ధచారణత్రైవిష్టపేయాదిషు నాన్వవిందత॥ నూనన్తపోయస్యనమన్యు నిర్జయోజ్ఞానంక్వచిత్తచ్చనసంగవర్జితం। కశ్చిన్మహాంస్తస్యనకామనిర్జయస్స ఈశ్వరః కింపరతోవ్యపాశ్రయః॥ ధర్మః క్వచిత్తత్రనభూతసౌహృదంత్యాగః క్వచిత్తత్రనముక్తికారణం। వీర్యంనపుంసోస్త్యజవేగనిష్కృతం నహిద్వితీయోగుణసంగవర్జితః॥ క్వచిచ్చిరాయుర్నహిశీలమంగళం క్వచిత్తదప్యస్తినవేద్యమాయుషః। యత్రోభయంకుత్రచ సోప్యమంగళ స్సుమంగళః కశ్చనకాంక్షతేహిమామ్॥ ఏవంవిమృశ్యావ్యభిచారిసద్గుణైర్వరం నిజైకాశ్రయతాగుణాశ్రయం। వవ్రేవరం సర్వగుణైరపేక్షితం రమాముకుందంనిరపేక్షమీప్సితం॥ తస్యాంసదేశఉశతీంనవకంజమాలాం మాద్యన్మధువ్రతవరూథగిరోపఘుష్టాం। తస్థౌనిధాయనికటేతదురస్స్వధామ సవ్రీడహాసవికసన్నయనేనయాతా॥ తస్యాశ్శ్రియస్త్రిజగతో జనకోజనన్యావక్షోని వాసమకరోత్పరమంవిభూతేః।

క్వచిత్ కస్యచిద్దోషస్య సద్భావాత్ నాన్వవిందత. మన్యునిర్జయోనాస్తి దుర్వాసప్రభృతిషు. గురుశుక్రాదిషు సంగవర్జితంజ్ఞానంనాస్తి. మహత్త్వేపి బ్రహ్మసోమాదౌ నకామనిర్జయః. పరతోవ్యపాశ్రయః-పరాపేక్షః - ఇంద్రాదిః. - సకిం ఈశ్వరః? నభూతసౌహృదం పరశురామాదిషు. నముక్తికారణం త్యాగఃశిబిప్రభృతిషు. పుంసః- కార్తవీర్యాదేః వీర్యమస్తి. అజవేగనిష్కృతం - కాలవేగేననిష్కృతం- పరిహృతం - త్యక్తంనభవతి. అపితు కాలవేగనాశితమేవేతిభావః. గుణసంగవర్జితః-సనకాదిః. ద్వితీయః- భగవతోన్యః. గుణసంగవర్జితః - హేయగుణసంగ వర్జితోనహి. మమపరః నహిసమాధినిష్ఠత్వాత్. చిరాయుష్యమపిమార్కండేయాదౌ శీలమంగళంనాస్తి ఇంద్రియదమనశీలత్వాత్. క్వచిత్ తదప్యస్తి హిరణ్యకశిపుప్రభృతౌ. ఆయుషః- స్థైర్యం.నవేద్యం - దుర్విజ్ఞానం. భగవద్ద్వేషిత్వాకస్మాదేవమృత్యుసంభవాత్. యత్రకుత్రచ శీలం ఆయుశ్చేత్యుభయమస్తి; సచాన్యః- పూర్వోక్తః- కశ్చిత్ దోషః. తథాపిసోప్యమంగళః-స్మశానవాసాద్యమంగళచేష్టితః. శ్రీముకుందంలక్ష్మీకృత్యాహ కశ్చేతి. కశ్చిత్ సుమంగళః నిరవద్యశ్చ, సతుమాంనహికాంక్షతే ఆత్మారామత్వాత్. ఏవం విమృశ్య రమా నిరపేక్షమపి ముకుందమేవ వరంవవ్రే. అవ్యభిచారిభిః - సద్భిః-ధర్మజ్ఞానాదిభిః- గుణైః. నిజైకాశ్రయతయా-చనైరపేక్ష్యేణ. వరం-సర్వోత్తమం. అగుణాశ్రయం - హేయగుణానా

எ.—శ్రియం. అత ఏవ స్వస్య ఈప్సితం. కించ సర్వగుణైః-అణిమాదిభిః. అపేక్షితం-వృతం. తస్యాం సదేశే కమనీయాం నవకంజమాలాం నిధాయ తదనుగ్రహం ప్రతీక్షమాణా తూష్ణీం తస్య నికటే తస్థౌ. కథంభూతాం మాలాం? మాద్యంతః-యే-మధువ్రతాః- తేషాం-వరూథస్య.-యూథస్య. గిరా ఉపఘుష్టాం. - నాదితాం. కథంభూతా శ్రీః? సవ్రీడహాసేన వికసన్నయనాబ్జేన తస్య ఉరఃస్వధామ యథా తథా సతి వక్షః ప్రతీక్షమాణా తస్థావిత్యర్థః".

"ததஶ்சாவிரபூத்ஸாக்ஷாச்ச்ரீரமா பகவத்பரா| ரஞ்ஜயந்தீ திஶ꞉ காந்த்யா வித்யுத்ஸௌதாமிநீ யதா|| தஸ்யாஞ்சக்ருஸ்ஸ்ப்ருஹாம் ஸர்வே ஸஸுராஸுரமாநவா꞉| ரூபௌதார்யவயோவர்ணமஹிமாக்ஷிப்த சேதஸ꞉|| தஸ்யா ஆஸநமாநிந்யே மஹேந்த்ரோ மஹதத்புதம்| மூர்த்திமத்ய꞉ ஸரிச்ச்ரேஷ்டா ஹேமகும்பைர்ஜலம் ஶுசி|| அபிஷேசநிகா பூமிராஹரத்ஸகலௌஷதீ꞉| காவ꞉ பஞ்சபவித்ராணி வஸந்தோ மதுமாதவௌ|| அபிஷேசநிகா꞉-அபிஷேகோசிதா꞉. பஞ்சபவித்ராணி-பஞ்சகவ்யாநி. மதுமாதவௌ-சைத்ரவைஶாகௌ, தத்பவம் -பலபுஷ்பாதி. ருஷய꞉ கல்பயாஞ்சக்ருரபிஷேகம் யதாவிதி| ஜகுர்பத்ராணி கந்தர்வா நட்யஶ்ச நந்ருதுர்ஜகு꞉|| மேகாம்ருதங்கபணவமுரஜாநககோமுகாந்| வ்யநாதயந்ஶங்கவேணுவீணாஸ்துமுலநிஸ்வநாந்|| ததோபிஷிஷிசுர்தேவீம் ஶ்ரியம்பத்மகராம்ஸதீம்| திக்கஜா꞉ பூர்ணகலஶைஸ்ஸூக்தவாக்யைர்த்விஜேரிதை꞉||

ஸூக்தவாக்யை꞉- ஶ்ரீஸூக்தவாக்யை꞉. ஸமுத்ர꞉ பீதகௌஶேய வாஸஸீ ஸமுபாஹரத்| வருணஸ்ஸ்ரஜம் வைஜயந்தீம் மதுநா மத்தஷட்பதாம்|| பூஷணாநி விசித்ராணி விஶ்வகர்மா ப்ரஜாபதி꞉| ஹாரம் ஸரஸ்வதீ பத்மமஜோ நாகாஶ்ச குண்டலே|| தத꞉ க்ருதஸ்வஸ்த்யயநோத்பலஸ்ரஜம் நதத்த்விரேபாம் பரிக்ருஹ்ய பாணிநா| சசால வக்த்ரம் ஸுகபோலகுண்டலம் ஸவ்ரீடஹாஸம் தததீ ஸுஶோபநம்|| ஸ்தநத்வயஞ்சாதிக்ருஶோதரீ ஸமம் நிரந்தரம் குங்குமசந்தநோக்ஷிதம்| இதஸ்ததோ நூபுரவல்குஶிஞ்ஜிதைர்விஸர்பதீ ஹேமலதேவ ஸா பபௌ|| விலோகயந்தீ நிரவத்யமாத்மந꞉ பதம் த்ருவஞ்சாவ்யபிசாரிஸத்குணம்| த்ருவம்- நித்யம். அவ்யபிசாரிண꞉-நித்யா꞉- ஸந்த꞉- குணா꞉-யஸ்மிந்-தத். கந்தர்வயக்ஷாஸுரஸித்தசாரணத்ரைவிஷ்டபேயாதிஷு நாந்வவிந்தத|| நூநந்தபோ யஸ்ய நமந்யுநிர்ஜயோ ஜ்ஞாநம்க்வசித்தஸ்யநஸங்கவர்ஜிதம்| கஶ்சிந்மஹாம் ஸ்தஸ்யநகாமநிர்ஜயஸ்ஸ ஈஶ்வர꞉ கிம்பரதோவ்யபாஶ்ரய꞉|| தர்ம꞉ க்வசித்தஸ்ய ந பூதஸௌஹ்ருதம் த்யாக꞉ க்வசித்தஸ்ய ந முக்திகாரணம்| வீர்யம் ந பும்ஸோஸ்த்யஜவேக நிஷ்க்ருதம் ந ஹி த்விதீயோ குணஸங்கவர்

எ.— ஜிதஃ॥க்வசிச்சிராயுர்நஹிஶீலமங்களம்க்வ சித்ததப்யஸ்திநவேத்யமாயுஷஃ। யத்ரோபயம் குத்ரசஸௌப்யமங்களஸ்ஸமங்களஃகச்சநகாங்க்ஷதேஹிமாம்॥ ஏவம்விம்ர்ஶ்யாவ்யபிசாரி ஸத்குணைர்வரம் நிஜைகாஶ்ரயதாகுணாஶ்ரயம்। வவ்ரேவரம் ஸர்வகுணைரபேக்ஷிதம்ரமாமுகுந்தம் நிரபேக்ஷமீப்ஸிதம்॥தஸ்யாம்ஸதேஶ உஶதீம்நவகஞ்ஜமாலாம் மாத்யந்மதுவ்ரதவரூதகிரோபகுஷ்டாம்। தஸ்தௌ நிதாயநிகடேதது ரஸ்ஸ்வதாமஸவ்ரீடஹாஸவிகஸந்நயநேநயாதா॥ தஸ்யாஶ்ஶ்ரியஸ்த்ரிஜகதோஜநகோஜநந்யா வக்ஷோநிவாஸமகரோத்பரமம் விபூதேஃ।
க்வசித்கஸ்யசித்தோஷஸ்ய ஸத்பாவாத் நாஸ்வவிந்தத.மந்யுநிர்ஜயோநாஸ்தி துர்வாஸப்ரப்ருதிஷு.குருஶுக்ராதிஷு-ஸங்கவர்ஜிதம் ஜ்ஞாநம்நாஸ்தி.மஹத்வேபி ப்ரஹ்மஸோமாதௌநகாமநிர்ஜயஃ. பரதோவ்யபாஶ்ரயஃ-பராபேக்ஷஃ-இந்த்ராதிஃ ஸகிம்ஈஶ்வரஃ? நபூதஸௌஹ்ர்தம் பரஶுராமாதிஷு.நமுக்திகாரணம் த்யாகஃ ஶிபிப்ரப்ருதிஷு. பும்ஸஃ-கார்த்தவீர்யாதேஃ வீர்யமஸ்தி. அஜவேகநிஷ்க்ர்தம்- காலவேகேநிஷ்க்ர்தம்-பரிஹ்ர்தம்-த்யக்தம்நபவதி. அபிது காலவேகநாஶிதமேவேதிபாவஃ. குணஸங்கவர்ஜிதஃ— ஸநகாதிஃ. த்விதீயஃ—பகவதோந்யஃ. குணஸங்கவர்ஜிதஃ-ஹேயகுணஸங்கவர்ஜிதோநஹி. மமபரஃநஹிஸமாதிநிஷ்டத்வாத். சிராயுஷ்யமபி மார்க்கண்டேயாதௌ ஶீலமங்களம்நாஸ்தி இந்த்ரிய தமநஶீலத்வாத். க்வசித் ததப்யஸ்தி-ஹிரண்யகஶிபுப்ரப்ருதௌ.ஆயுஷஃ-ஸ்தைர்யம்.நவேத்யம்-துர்விஜ்ஞாநம். பகவத்வேஷேணகஸ்மாதேவ ம்ர்த்யுஸம்பவாத். யத்ரகுத்ரச ஶீலம்ஆயுஶ்சேத்யுபயமஸ்தி; நசாந்யஃ—பூர்வோக்தஃ-கஶ்சித்தோஷஃ. ததாபி ஸௌப்யமங்களஃ- ஶ்மஶாநவாஸாத்யமங்களசேஷ்டிதஃ. ஶ்ரீமுகுந்தம்லக்ஷீகர்த்யாஹ .கஶ்சேதி. கஶ்சித்ஸமங்களஃ நிரவத்யஶ்ச, ஸது மாம் நஹிகாங்க்ஷதே ஆத்மாராமத்வாத்.ஏவம் விம்ர்ஶ்ய,ரமா நிரபேக்ஷமபி முகுந்தமேவ வரம் வவ்ரே. அவ்யபிசாரிபிஃ—ஸத்பிஃ-தர்மஜ்ஞாநாதிபிஃ—குணைஃ. நிஜைகாஶ்ரயதயா ச நைரபேக்ஷ்யேண. வரம்-ஸர்வோத்தமம். அகுணாஶ்ரயம்— ஹேயகுணாநாஶ்ரயம்.அதஏவ ஸ்வஸ்ய ஈப்ஸிதம்.கிஞ்ச ஸர்வகுணைஃ- அணிமாதிபிஃ.அபேக்ஷிதம்-வ்ர்தம்.தஸ்யாம்ஸதேஶே கமநீயாம் நவகஞ்ஜமாலாம்நிதாய ததநுக்ரஹம் ப்ரதீக்ஷமாணா தூஷ்ணீம்தஸ்ய நிகடே தஸ்தௌ. கதம்பூதாம் மாலாம்? மாத்யந்தஃ-யே-மதுவ்ரதாஃ-தேஷாம்-வரூதஸ்ய-பூதஸ்ய.கிரோபகுஷ்டாம்-நாதிதாம்.கதம் பூதாஶ்ரீஃ? ஸவ்ரீடஹாஸேந விகஸந்நயநாந்தேந தஸ்ய உரஃ ஸ்வதாமயாதாஸதீ வக்ஷஃ ப்ரதீக்ஷமாணா தஸ்தாவித்யர்த்தஃ”.(௫௫०)

மூ.—சஉ பர்த்தாவினுடைய

---

வ்யா.—சஉ.—இன்னமும் இவ்வர்த்தத்தை ஸ்த்திரீகரிக்கைக்காக ஈஶ்வரசேதநவாசகங்களான அகாரமகாரங்களிரண்டிலும், இவளுக்குண்டான அநவரதாந்வயத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் (பர்த்தாவினுடைய) என்று துடங்கி. அதாவது-ஶேஷபூதையான தன் ஸ்வரூபத்துக்குச்சேரும்படி அவனை

---

ஏ.—சஉ.—மேலுக்கவதாரிகை (இன்னமும்) என்று துடங்கி.

(இன்னமும்) என்றது-கீழருளிச்செய்த ப்ரகாரமன்றிக்கே ப்ரகாராந்தரேணவும் என்றபடி. (இவ்வர்த்தத்தை) என்றது-அவனுக்குவாசகமான அகாரத்தில் அந்வயம் இவளுக்கு நித்யம் என்னும் (இவ்வர்த்தத்தை) என்றபடி. (அநவரதாந்வயத்தை) என்றது-நித்யஸம்பந்தத்தை என்றபடி; அதாவது-(ஶ்ரயதே-இதி-ஶ்ரீ:) என்று அவனை நித்யஸேவைபண்ணுகையாலே அவனோடு இவளுக்குண்டான அவிநாபாவ ஸம்பந்தத்தாலே அவனுக்கு வாசகமான அகாரத்திலும், (ஶ்ரீயதே-இதி-ஶ்ரீ:) என்று சேதநர்க்கு இவள் நித்யஸேவ்யையாயிருக்கையாலே சேதநரோடு இவளுக்குண்டான நித்யஸம்பந்தத்தாலே சேதநவாசகமானமகாரத்திலும் இவளுக்குண்டான நித்யஸம்பந்தத்தைஎன்றபடி. (ஈஶ்வரசேதநவாசகங்களான அகாரமகாரங்களிரண்டிலும் இவளுக்கு அநவரதாந்வய) மாவது-வாச்யையாயிருக்கை என்றருளிச்செய்வர்கள்.

---

தொ.—சஉ.—மேலுக்கவதாரிகை (இன்னமும்) இத்யாதி. (இன்னமும்) என்றது-இதுக்குமேலே என்றபடி. (இவ்வர்த்தத்தை) என்றது-(அவன்தோற்றுமிடத்திலே இவளும்தோற்றுகைநிஶ்சிதம்) என்னும் (இவ்வர்த்தத்தை) என்றபடி. (ஸ்த்திரீகரிக்கைக்காக) என்றது - த்ருடப்படுத்துகைக்காக என்றபடி. (அவன்தோற்று மிடத்திலே இவளும் தோற்றும்) என்ற (அர்த்தத்தைஸ்த்திரீகரிக்கைக்காக) த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறவர், அவனுக்குவாசகமல்லாத மகாரத்தில் இவள் தோற்றுகையையும் ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்வானென்னென்னில்; அவன் தோற்றுமிடத்தில் இவளும் தோற்றுகை நிஶ்சிதமாகையாலே, இவளுக்குசேதநகோட்யந்தர்ப்பாவமில்லை, ஈஶ்வரகோ… ந்தர்ப்பாவமே உள்ளது என்கிற பக்ஷத்தை நிரஸித்து சேதநகோட்யந்தர்ப்பாவம் சொல்லுகைக்காக மகாரவாச்யத்வத்தையும் அருளிச்செய்கிறார். ஆனால் அவனுக்குவாசகமானஶப்தம் இவளுக்கு வாசகமாகாவிடில் அவன்தோற்றுகிறவிடத்தில் இவள்தோற்றுகிறபடி எங்ஙனேயென்ன; அவன் ஒரு ஶப்தத்துக்கு வாச்யமாகத் தோற்றும்போது யாத்ருஶகுணவிஶிஷ்டனாய்த்தோற்றுகிறான், அக்குணபலத்தாலே அக்குணாந்யதாநுபபத்யா அர்த்தபலத்தாலே தோற்றுகையாலே அவன்தோற்றுமிடத்தில் இவள் தோற்றும் என்னக்குறையில்லை. இவளுக்கு ஶப்தஶக்த்யாபோதகம் மகாரம் என்கையாலே ஜீவகோட்யந்தர்ப்பாவத்தில் குறையில்லை. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.

மூ.— படுக்கையையும், ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே ப்ரதமசரமபதங்களை விடாதேயிருக்குமிருப்பு.

வ்யா.— ரக்ஷிக்கைக்காக(பர்த்தாவினுடைய படுக்கையையும்) விடாதே, ரக்ஷகையான தன் ஸ்வரூபத்துக்கும் போரும்படி தத்ரக்ஷணம் பண்ணுகைக்காக(ப்ரஜையினுடையதொட்டிலையும்) விடாதேயிருக்கும் மாதாவானவளைப்போலே, இவளும் பர்த்ருபூதனான ஈச்வரனுக்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள ப்ரதமபதமான அகாரத்தையும், ப்ரஜாபூதரான சேதநர்க்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள சரமபதமானமகாரத்தையும தத்தத்விஷயத்தில் தனக்குண்டான ஸம்பந்தத்துக்கிடாக ரக்ஷிக்கை ரக்ஷிக்கையாகிற இவற்றைப்பற்ற (விடாதேயிருக்கு மிருப்பு) என்கை.

ஏ.— (ரக்ஷிக்கை) என்றது-ஸம்ச்லேஷாதிகளாலே (ரக்ஷிக்கை) என்றபடி. (தத்தத்விஷயத்தில் தனக்குண்டான ஸம்பந்தமா) வது-பத்நீத்வமாத்ருத்வரூபஸம்பந்தம். (ரக்ஷிக்கை) யாவது-"[Grantha]" "ஸமஸ்தஜநநீம்வந்தேசைதந்யஸ்தந்யதாயிநீம்" (௫௫௧) என்கிறபடியேசைதந்யமாகிறஸ்தந்யத்தைக்கொடுத்து ரக்ஷிக்கை. சைதந்யமாவது-பகவதாபிமுக்யஜ்ஞாநம்; சேஷத்வஜ்ஞாநமென்னவுமாம். அன்றிக்கே "[Grantha]" "லக்ஷ்ம்யாஸஹஹ்ருஷீகேச:" (௫௫௨) என்கிறபடியே "[Grantha]" "ஸஹயுக்தேப்ரதாநே" (௫௫௩) என்னுங்கணக்கிலே அப்ரதாநரக்ஷகத்வமுண்டிறே! லக்ஷ்மிக்கு. அதாவது-சேதநருடைய அபராதங்களைக்கண்டுதண்டதரனான ஈச்வரனுக்குத் தன்னுடையவாத்ஸல்யத்தாலேக்ருபாகுணத்தைவர்த்திப்பித்துரக்ஷிக்கை என்னவுமாம். ப்ரதமபதமான அகாரத்துக்குத்ருஷ்டாந்தம்-படுக்கை; சரமபதமான மகாரத்துக்குத்ருஷ்டாந்தம்-தொட்டில்; பத்நீத்வேந படுக்கையில்ஸம்பந்தம்; மாத்ருத்வேநதொட்டிலிலேஸம்பந்தம் என்றுகண்டு கொள்வது. ஈச்வரஸ்வரூபாநுபந்தியாகையாலே அகாரவாச்யத்வமும், சேதநகோடிப்ரவிஷ்டையாகையாலே மகாரவாச்யத்வமும் என்றருளிச்செய்வர்கள். அதுவுமல்லாமல் மகாரவாச்யத்வாத் ம் என்றுஜீவவாசகமும் லிங்கஸ்பதம்போலே மா என்றுஸ்த்ரீலிங்கஸ்பதம்லக்ஷ்மீவாசகம் என்றருளிச்செய்வர்கள்.

தொ.— (ரக்ஷிக்கைக்காக) என்றது - ஆநந்திப்பிக்கைக்காக என்றபடி. (ரக்ஷகையான) என்றது - பகவத்கர்த்ரகரக்ஷணோபயோகிபகவந்நிஷ்ட க்ருபாகுணோத்போதகத்வாரா (ரக்ஷகையான) என்றபடி. (தத்ரக்ஷணம்) என்றது - ப்ரஜாரக்ஷணம்என்றபடி. (தத்தத்விஷயத்தில்) என்றது - ஈச்வரசேதநவிஷயத்தில்என்றபடி. (தனக்குண்டான ஸம்பந்தத்துக்கிடாக) என்றது-தனக்குண்டானபத்நீத்வமாத்ருத்வரூப ஸம்பந்தத்துக்கு அநுகுணமாகவென்றபடி.

பி.— ௫௨.—[ப்ரதமசரமபதங்களைவிடாதே இருக்குமிருப்பு] என்கிறவிடத்தில்சரமபதமானமகாரவாச்யனான ஆத்மாவைவிடாதேஇருக்கும்.

மூ.—௪௩ ஸ்ரீநந்தகோபரையும், க்ருஷ்ணனையும்விடாத யசோதைப் பிராட்டியைப்போலே.

---

வ்யா.—௪௩—கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தத்தை ஒரு விசேஷநிஷ்டமாக்கி அருளிச்செய்கிறார்

(ஸ்ரீநந்தகோபரையும்) என்று துடங்கி. அதாவது - பார்யையான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிப்பிக்கைக்காக பர்த்தாவான (ஸ்ரீநந்தகோபரையும்) விடாதே, மாதாவான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காக புத்ரனை (க்ருஷ்ணனையும்) விடாதே, "அம்பரமே" என்கிறபாட்டில் சொலலுகிறபடியே, மத்யே வர்த்திக்கும் (யசோதைப்பிராட்டியைப்போலே)

---

எ.—[பர்த்தாவினுடைய படுகையையும்]-(சேஷபூதையான தன்ஸ்வரூபத்துக்குச் சேரும்படி அவனை ரக்ஷிப்பிக்கைக்காக) [பர்த்தாவினுடைய படுக்கையையும்], [விடாதே] [ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே]-(ரக்ஷகையான தன் ஸ்வரூபத்துக்கும் போரும்படி தத்ரக்ஷணம்பண்ணுகைக்காக) [ப்ரஜையினுடையதொட்டிலையும் விடாதே], [இருக்கும்] [மாதாவைப்போலே] -(மாதாவானவளைப்போலே),(இவளும்) [ப்ரதமசரமபதங்களை]-(பர்த்ருபூதனான ஈச்வரனுக்கு ப்ரதிபாதகமாய் இருந்துள்ள ப்ரதமபதமான அகாரத்தையும், ப்ரஜாபூதரான சேதநர்க்கு ப்ரதிபாதகமாய்இருந்துள்ள சரமபதமானமகாரத்தையும்), (தத்தத்விஷயத்தில் தனக்குண்டான ஸம்பந்தத்துக்கீடாக ரக்ஷிப்பிக்கைரக்ஷிக்கையாகிற இவற்றைப்பற்ற)[விடாதே இருக்குமிருப்பு] என்று மூலார்த்தம்.

௪௩.— மேலுக்கவதாரிகை(கீழ்ச்சொன்ன) இத்யாதி.(ஒருவிசேஷநிஷ்டமாக்கி) என்றது—ஒருவ்யக்தி விசேஷநிஷ்டமாக்கி என்றபடி.

---

தொ.—௪௩.—மேலுக்கவதாரிகை (கீழ்ச்சொன்ன) இத்யாதி.

---

பி.—பிராட்டி என்றத்துக்கு சப்தமெங்கே? என்றுகேட்க, மகாரவிவரணமானநாரசப்தத்துக்குள்ளேசேதநகோடியிலே பெரியபிராட்டியார் துடக்கமான நாச்சிமார்கள் என்று எடுக்கையாலும்,"அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" "அஸ்யேசாநாஜகதோவிஷ்ணுபத்நீ" என்றுபாரதந்த்ர்யம்சொல்லுகையாலே என்று பின்னையும் பலஹேதுக்களாலேயும் சேதநகோடிக்குள்ளே அந்தர்ப்பூதையாகச் சொல்லுகையாலும் சேதநவாசியான (மகாரத்தையும்) விடாதே இருக்கிறாள் என்று அருளிச்செய்தார். (சரமபதமானமகாரத்தை) விடாதே இருக்கும்படி என்னென்ன ; தானும் சேதநகோட்யந்தர்ப்பூதமாகையாலே சேதநரை ரக்ஷிக்கைக்காக அவர்கள் கோடியிலே கூடியிருக்குமென்றபடி.

௪௩.— யசோதைப்பிராட்டித்ருஷ்டாந்தத்தாலே இவளும், உகாரவாச்யையாய்க்கொண்டு நடுவேவர்த்திக்கிறாளென்று தோன்றினாலும்,

வ்யா.—ப்ரதமசரமபதவாச்யரானஈஶ்வரசேதநர்களிருவரையும் விடாதே, இவளும் வர்த்திக்கும்படி யென்கை.

எ.— (ப்ரதமசரமபதவாச்யரான ஈஶ்வரசேதநர்களிருவரையும்விடாதேஇவளும் வர்த்திக்கும்படி) என்றதாலே,த்ருஷ்டாந்தத்தில்உபயமத்யேவர்த்திக்கையிலே தாத்பர்யமில்லை. அதவா (மத்யேவர்த்திக்கும்யசோதைப்பிராட்டியைப்போலே இவளும்வர்த்திக்கும்படி) என்கையாலே, த்ருஷ்டாந்தபலாத் மத்யமபதவாச்யத்வமும் இவளுக்குண்டு என்றபடி."உத்ப்ரேக்ஷை:""உத்த்ரியதஇதிஉ:" என்று உகாரம லக்ஷ்மீவாசகமாகக்கடவது.

[ஸ்ரீநந்தகோபரையும்] -(பார்யையானதன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிப்பிக்கைக்காக பர்த்தாவான) [ஸ்ரீநந்தகோபரையும்],(விடாதே)[க்ருஷ்ணனையும்]-(மாதாவானதன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காக புத்ரனை) [க்ர்ஷ்ணனையும்], (விடாதே) ("அம்பரமே" என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே மத்தயேவர்த்திக்கும்) [யசோதைப்பிராட்டியைப்போலே] (ப்ரதமசரமபதவாச்யரான ஈஶ்வரசேதநர்களிருவரையும் விடாதே இவளும் வர்த்திக்கும்படி) என்று மூலார்த்தம்.

முதலாயிரம்-திருப்பாவை-பதினேழாம்பாட்டு.

மூ.—"அம்பரமே தண்ணீரே சோறேயறஞ்செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா வெழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாங்கொழுந்தே குலவிளக்கே
எம்பெருமாட்டியசோதாயறிவுறாய்
அம்பரமூடறுத் தோங்கியுலகளந்த
உம்பர்கோமானே யுறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச்செல்வாபலதேவா
உம்பியுநீயுமுறங்கேலோரெம்பாவாய்".

" அ.—பதினேழாம்பாட்டு. "நேசநிலைக்கதவம் நீக்கு" என்றார்கள் திருவாசல் காப்பானை; அவன் கருந்தாளையுருவி உள்ளே புக விட்டான். ஒருவரை யொருவர்சென்றெழுப்புகிறபோது அங்குத் தனித்தனியே பட்டத்தை இங்கெல்லாரும் திரளப் படுகிறார்கள். * இமையோர்கள்குழாம் தொழுவதுஞ் சூழ்வதும் செய்தொல்லைமாலைப் பெற்றநுபவிக்கிற திரளிறே! உள்ளுத்திரள்; பெறுகைக்குப் படுகிற திரள் பெற்றநுபவிக்கிற ஸ்ரீநந்தகோபர் துடக்கமானாரை யெழுப்புகிறார்கள், அவர்கள் முன்னாக க்ர்ஷ்ணனைப்பெற வேண்டுகையாலே. அதாவது-* வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான்

பி.— இவ்விடத்துக்கு இரண்டுபதத்தையும் பற்றிக்கொண்டிருக்கிறாள் என்றே அர்த்தங்கொள்ளவேணும்.

ஏ.—திருப்பாதம் பணிகையிறே!; "காலநன்ஞானத்துறைபடிந்தாடி" என்னுமாப்போலே. நன்ஞானமாகிறது ப்ராப்யப்ராபகங்களிரண்டுமவனென்கை; "ஜ்ஞாநம்யத்தத் ப்ராப்தம்" "விஜ்ஞானம்யதிதம்ப்ராப்தம்" (ருருச) என்னுமாப்போலே. துறையாகிறது-முறைதப்பாமே குருபரம்பரைவழியே பற்றுகை. த்வயநிஷ்டர்க்கு குருபரம்பரையே ப்ரதாநமாகக் கடவது; துறைதப்பாத ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே. "வேதம் வல்லார்கள்" என்றவிடத்திலே குருபரம்பரையை நினைத்து நிழப்பத்துப் பாட்டாலும் அநுஷ்டித்தார்கள். * விண்ணோர் பெருமானில், விண்ணோராகிறவர்கள் - த்வாரபாலகர் துடக்கமாக திவ்யமஹிஷிகள் ஈறாக உள்ளவர்களிறே! திருவாசல்காப்பானை அநுமதிகொண்டு உள்ளே புகுந்தவளவிலே, முதல்கட்டிலே பிள்ளைக்குக் காவலாகக் கிடந்தார் ஸ்ரீநந்தகோபர்; க்ர்ஷ்ணனைப்பெண்கள் களவுகாண்பர்களென்று நோக்கிக்கிடப்பரோ; அநிருத்தனை அகப்படக் களவுகாண்கிற பெண்கள் இவனுடைய ஸம்பந்தங்கொண்டு அவனழுக்கும்வாய்த்தலையான இவனைப்பெற்றால்விடார்களே. "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" (ருருரு) என்கிற க்ர்ஷ்ணனைப் பெற்றால் விடார்களென்று நோக்கிக்கொண்டு கிடக்கிறவரைச் சென்று பற்றினார்கள். உள்ளுக்கிடக்கிறது * வைத்தமாநிதியுமாய்த் தாம் * எடுத்தபேராளனுமாய், நிதியெடுத்தவருமானால் நோக்காதிராரிறே!.

வ்யா.—(அம்பரமே) எங்கள் அபிமதம் பெறுமைக்கு லுப்தன் வாசலிலேயோ நாங்கள் துவண்டுகூப்பிடுகிறது. அர்த்திகள் கொண்டல்லது தரியாதாப்போலே, கொடுத்தல்லது தரியாத உம்முடைய வாசலிலே நாங்கள் வந்தது,எங்கள் குறைதீர்க்கைக்காகவோ? உம்முடைய குறை தீர்க்கைக்கு நாங்கள் வந்து நிற்க, நீர் உறங்குகிறதென்? தன்பக்கல் கார்யங்கொள்ளுமவர்களை, "உதாரா:". "உதாரா:"(ருருசு) என்று க்ர்ஷ்ணன் சொல்லுகிறது உம்முடையவயிற்றில் பிறப்பாலேயன்றோ? பெற்றாலும் அங்ஙனேயோவென்று, பெறவிட்டாலும் தரிக்கலாமவையோ நீர் கொடுப்பது, அர்த்திதவர்களுக்கு ரூபஸாதநமான வஸ்த்ரம், தாரகமான தண்ணீர், போஷகமான சோறு,வேண்டுவார்க்கு வேண்டுவதெல்லாம் கொடுக்கிறவர் அன்றோ! நீர். வேண்டுவார்க்கு வேண்டுவதெல்லாம் கொடுக்கிற உமக்கு, நாங்கள் வேண்டிற்றெல்லாம் தரவேண்டாவோ? "அம்பரமே" என்கிற அவதாரணத்தாலே ஒரொன்றேயோ இவர் கொடுக்கத்தக்கது என்னும்படியிருக்கையும், அதுதான் புஷ்கலமாகக் கொடுக்கையும்.

(அறஞ்செய்யும்) யசஸ்ஸுக்குக் கொடுக்கையன்றிக்கே, பலாபிஸந்திரஹிதமாகக்கொடுக்கையும், "கர்த்தவ்யம்" என்கிற ப்ரதிபத்தியோடே தன்பேறாக ஆந்ருசம்ஸ்யத்தாலேகொடுக்கையும். (செய்யும்) "மஹாதபஸாமம்" "மஹாதபஸராமம்"(ருருஎ) என்று சக்ரவர்த்தியைப்

மூ.—எரு. இத்தால்

---

வ்யா.—எரு.—இன்னமும பொய்கையாருடைய திவ்யஸூக்தியாலே சேஷத்வ ப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமென்னுமிடந்தோற்ற, இந்த ஜீவ பரஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார்

(இத்தால் "தாமரையாள்கேள்வன்") என்று துடங்கி. ஆகாவது - இப்ப்ரணவத்தால்

---

எ—.வ்யா.—(விடை) இத்யாதி. சிறிர்ஷபங்களேழையுமெரித்து, த்ரிகூடசிகரததிலேசென்று கிட்டும்படியாக கானவெண்ணும் குரங்கும் முசுவும் படையாககொண்டு கடலேயடைத்த; அன்றிக்கே அஸ்தமய பர்வதத்திலே ஆதித்யன் அஸ்தமித்தான் என்னும்படி திருவாழியாலே ஆதித்யன் தேஜஸ்ஸைத் தடுத்துமறைத்த. (பரமன்) ஸமாதிகதரித்ரன். (பரஞ்சோதி) பிராட்டிக்குவந்த ப்ரதிபந்தகத்தைப்போக்கி, அத்தால்வந்த தேஜஸ்ஸையுடையனாயிருக்கிறவன். (மடை) இத்யாதி. மடைகளையுடைய மிக்க நீலத்தையுடைத்தான வயலாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்தை தனக்கு வாஸஸ்தாநமாக உடையவனுக்கு. ஸ்ரீவைகுண்டநாதனாயிருக்குமிருப்புக்கு அவ்வருகே யொன்றுபோலே காணுமிது. (அடியேன) சேஷபூதனான நான. (ஒருவர்க்குரியேனோ) வேறுசிலர்க்கு உரியேன் அல்லேன.

இத்தால், தம்ஸ்வரூபஞ்சொல்லுகிறார்; பிறர்க்குரியேன் அல்லேன் என்னுமிடஞ்சொல்லுகிறார்; அஸாதாரணவிபூதியுக்தனானவனுக்கு என்னுமிடஞ்சொல்லுகிறார்."]

எரு.— மேலுக்கவதாரிகை (இன்னமும்) என்று துடக்கி.

[இத்கால்]-(இப்ப்ரணவத்தால்),

---

தொ.—எரு.—மேலுக்கவதாரிகை (இன்னமும்) இத்யாதி.

(இன்னமும்) என்றது - இதுக்குமேலேயுமென்றபடி. (சேஷத்வப்ரதிஸம்பந்தி) என்றது - சேஷியென்றபடி. மூலார்த்தம (ஆதாவது)* இத்யாதி.

மூ.— "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றதாய்த்து.

வ்யா.— ("தாமரையாள் கேள்வன்") என்று அகாரவாச்யனாய், சேஷித்வப்ரதிஸம்பந்தியான ஸ்ரீயபதியையும், ("ஒருவனையே நோக்கும்") என்று சதுர்த்யுகாரங்களாலே சொல்லுகிற அநந்யார்ஹசேஷத்வப்ரயுக்தமான ஆத்மாவினுடைய ததேகபரதையையும், ("உணர்வு") என்று அந்தசேஷத்வாச்ரயமாக மகாரத்தாலே சொல்லப்பட்ட ஜ்ஞானைகநிரூபணீயனான ஆத்மாவையும், சொல்லுகிற ஸூக்தியிற்படியே (ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்று) ஆய்த்தென்கை.

எ.— ["தாமரையாள்கேள்வனொருவனையே நோக்குமுணர்வு"] என்று சொல்லுகிற (பொய்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே) (ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்றாய்த்து) என்று மூலார்த்தம்.

முதல் திருவந்தாதி - கூஎ - பாட்டு.

["பெயருங்கருங்கடலே நோக்குமாறொண்பூ
உயருங்கதிரவனே நோக்கும் — உயிரும்
தருமனையே நோக்குமொண் டாமரையாள்கேள்வ
னொருவனையே நோக்குமுணர்வு"]

["ப — ரை. பெயரும் - காற்றுவேகத்திலே கொந்தளித்துக்கிளரக்கடவதாய், கரும் - பரப்பையுடைத்தான, கடல் - கடலே, ஆறு - ஆறானது, நோக்கும் - நோக்காநிற்கும்; ஒண் - அழகிய, பூ - தாமரைப்பூவானது, உயரும் - உச்சஸ்தலவர்த்தியான, கதிரவனே - ஆதித்யனையே, நோக்கும் - நோக்காநிற்கும்; உயிரும் - (பகவத்பரர் அல்லாத நாட்டில்) ப்ராணிகளடங்கலும், (சரீரவிச்லேஷாநந்தரத்தில்) தருமனையே - தர்மராஜாவான யமனையே, நோக்கும் - சென்றுகிட்டாநிற்கும்;

தொ.— [ஜீவபரஸம்பந்தம்] என்றது — ஜீவாத்மபரமாத்மஸம்பந்தமென்றபடி. வ்யஸ்தப்ரணவத்துக்கு அர்த்தமருளிச்செய்தவனந்தரம் ஸமஸ்தப்ரணவத்துக்கர்த்தமருளிச்செய்கிறவர், திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியைமாத்ரம் அதில் ப்ரமாணமாகவிடாதே பொய்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியையும் ப்ரமாணமாக அநுஸந்திப்பானென்? என்னில்; ஸித்தாந்தைக்யம் தோற்றுகைக்காக.

பி.— எ. — ["ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு"] என்கிறவிடத்தில் ["உணர்வு"] என்று மஹாப்ரவேசாதிகளிலே ஜ்ஞானத்தைச் சொல்லிற்றேயாகிலும் இவ்விடத்தில் ஜ்ஞானாச்ரயமான ஆத்மாவைச் சொல்லுகையாலே, இதுவும் பொருந்துமென்றுகண்டுகொள்வது.

மூ.—௭௪. அகாரத்தாலும்

---

வ்யா.—௭௪.—அகாரத்தில் ப்ரத்யயார்த்தப்ரதாநமாக, ப்ரணவார்த்தத்தை யோஜித்தார் கீழ்; அதில் தாத்வர்த்தப்ரதாநமாக ப்ரணவத்துக்கு இன்னமொருயோஜனை அருளிச்செய்கிறார்.

(அகாரத்தாலும்) என்றுதொடங்கி. அகாரவாச்யன் - அகாரத்தாலே ரக்ஷகனான ஈச்வரனைச்சொல்லுகிறது,

---

எ.—(இவை இவைநியதமானுப்போலே) உணர்வு ஜ்ஞாநமானது, ஒள்—அழகிய, தாமரையாள்-தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாருக்கு, கேள்வன் - வல்லபனான, ஒருவனையே-ஸர்வேச்வரனொருவனையுமே, நோக்கும் - சென்றுபற்றநிற்கும்.

அவ.— மோக்ஷேச்சை உடையவர்களுக்கும், அறிவுதலைநின்றவர்களுக்கும் அவனுடைய திருவடிகளையேத்துவது, அவனுடைய திருநாமங்களையேயேத்துவது என்றுசொல்லிற்று, ஜ்ஞாநத்துக்கு அவனேவிஷயமாகையாலே என்கிறது.

வ்யா.— (பெயரும்) இத்யாதி. ஆறானது பூர்ணமாய்ச்சலியாநின்றகடலையே நோக்காநின்றது; அக்கடலை நிறைக்கைக்கு அன்று புகுகிறது, புக்கல்லது தான் தரிக்கமாட்டாமை. தாமரைப்பூவானது தாரஸ்தகளெல்லாம் ஆதித்யனுக்கு அலருமத்தனை, அந்யர்களுக்கு அலராது. (உயிரும்தருமனையேநோக்கும்) யமனைக்கிட்டியல்லது வேறிடத்தில் புகவொண்ணாது. (ஒண்டாமரை) இத்யாதி. ஜ்ஞாநமானது ஸ்ரிய:பதியை அறியுமத்தனை, மற்றொன்றறியாது; "தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்" "தஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்கம்" (௯௯௨.) என்னும்படியே; "வித்யாந்யாசில்பநைபுணம்" "வித்யாந்யாசில்பநைபுணம்"] (௯௯௯).

௭௪.—மேலுக்கவதாரிகை (அகாரத்தில்) என்றுதொடங்கி.

(ப்ரத்யயார்த்தப்ரதாநமாக) என்றது - அகாரத்தில் ஸப்ரத்யயார்த்தமான சேஷித்வ (ப்ரதாநமாக) வென்றபடி. (தாத்வர்த்தப்ரதாநமாக) என்றது - "அவ-ரக்ஷணே" என்கிறதாத்வர்த்தமான ரக்ஷகத்வமே (ப்ரதாநமாக) என்றபடி. (அகாரத்தாலே) என்றது-"அவ-ரக்ஷணே" என்கிறதாதுவில் நிஷ்பந்நமாய் ரக்ஷகவாசியான (அகாரத்தாலே) என்றபடி.

---

தா.—௭௪.—மேலுக்கவதாரிகை (அகாரத்தில்) இத்யாதி.

(ப்ரத்யயார்த்தப்ரதாநமாக) என்றது - சேஷித்வம் (ப்ரதாநமாக) வென்றபடி. (அதில்) என்றது - அகாரத்திலென்றபடி. (தாத்வர்த்தப்ரதாநமாக) என்றது - ரக்ஷகத்வப்ரதாநமாகவென்றபடி. மூலார்த்தம் (அகாரவாச்யன்) இத்யாதி.

---

பி.—௭௪.—(ப்ரத்யயார்த்தப்ரதாநமாக) என்றது - சதுர்த்தியில் சேஷித்வ (ப்ரதாநமாக) வென்றபடி.

மூ.— மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும் உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று.

---

வ்யா.—மகாரத்தாலே தத்ரக்ஷ்யமான ஆத்மவஸ்துவைச்சொல்லிற்று, சதுர்த்தியாலே ரக்ஷிக்கைக்குஹேதுவான ஶேஷத்வமாகிற ப்ராப்தியைச்சொல்லிற்று; இப்படி ரக்ஷிக்கிறதற்கு பலம் இவ்வாத்மவஸ்து அத்தலைக்கநந்யார்ஹமாக விநியோகப்படுகையாலே அநந்யார்ஹ ஶேஷத்வவாசியான உகாரத்தாலே ரக்ஷணபலத்தைச் சொல்லிற்றென்கை.

---

எ.—(மகாரத்தாலே) என்றது - ரக்ஷ்யபூதரில்லாதபோது ரக்ஷகத்வம் ஸித்தியாதாகையாலே ரக்ஷ்யபதார்த்தத்தைச்சொல்லிற்று என்றபடி; "త్వయం భవతా రక్ష్యాః" "த்வயம்பவதாரக்ஷ்யா:" (௯௩௪) என்னக்கடவதிறே! (ஶேஷத்வமாகிறப்ராப்தியை) என்றது-ஶேஷத்வமாகிற ஸம்பந்தத்தையென்றபடி.

[அகாரத்தாலும்] - ரக்ஷகவாசியான (அகாரத்தாலே), (ரக்ஷகனான ஸர்வேஶ்வரனைச்சொல்லிற்று), [மகாரத்தாலும்] - (மகாரத்தாலே), (தத்ரக்ஷ்யமான வாத்மவஸ்துவைச்சொல்லிற்று); [சதுர்த்தியாலே](ரக்ஷிக்கைக்குஹேதுவான) [ப்ராப்தியை]-(ஶேஷத்வமாகிற) ஸம்பந்தத்தை, (சொல்லிற்று), [உகாரத்தாலும்] - (அநந்யார்ஹவாசியான உகாரத்தாலே), [பலத்தையுஞ்சொல்லிற்று] - (ரக்ஷணத்துக்குபலமான அநந்யார்ஹமாகவிநியோகப்படுகையைச்)[சொல்லிற்று]என்று மூலார்த்தம்

ப்ரத்யயார்த்தப்ரதாநமான யோஜநையில், 'భగవన్నిష్ఠశేషిత్వనిరూపితశేషత్వాశ్రయో జీవః' 'பகவந்நிஷ்டஶேஷித்வநிரூபிதஶேஷத்வாஶ்ரயோ ஜீவ:' இதிஶாப்தபோத:. தாத்வர்த்தப்ரதாநமான யோஜநையில், 'భగవన్నిష్ఠరక్షకత్వనిరూపితరక్ష్యత్వాశ్రయో జీవః' 'பகவந்நிஷ்டரக்ஷகத்வநிரூபிதரக்ஷ்யத்வாஶ்ரயோஜீவ:' இதிஶாப்தபோத:. [ரக்ஷணபலத்தைச் சொல்லிற்று] என்கையாலே, "ప్రయోజనమనుద్దిశ్య న మందో౽పి ప్రవర్తతే" "ப்ரயோஜநமநுத்திஶ்யநமந்தோபிப்ரவர்த்ததே" (௯௩௫) என்கிறந்யாயத்தை ஸ்ரீய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனானவனும்விட்டிலன் என்கை. [ஸ்வரூபமும் உபாயமும் பலமுமென்னவுமாம்]என்கிறவிடத்தில், சேதநனுக்கு பலம் சொன்னப்போலே, [ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று] என்கிறவிடத்தில் ஈஶ்வரனுக்கு பலம் [சொல்லிற்று].

---

தொ.—(தத்ரக்ஷ்யமான) என்றது - ஈஶ்வரரக்ஷ்யமானதென்றபடி.

மூ.—௭௫. இனி மேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.

---

வ்யா.—ஆக இம்மந்த்ரத்திற் ப்ரதமபதமான ப்ரணவார்த்தத்தை அருளிச்செய்தாராய்த்து.

௭௫.— இனி மேலிற் பதங்களுக்கும் அர்த்தம் அருளிச்செய்வதாக மந்த்ரஶேஷமும் இதுக்கு விவரணமாயிருக்கும்படியை முந்துற அருளிச்செய்கிறார்

(இனி மேல ப்ரணவத்தை விவரிக்கிறது) என்று.

---

எ.—"అత్రస్వలాభాపేక్షాపి స్వామిలాభావసాయినీ। స్వామిప్రయోజనాపేక్షా హ్యేతస్యానందహేతుతా॥" "அத்ரஸ்வலாபாபேக்ஷாபி ஸ்வாமிலாபாவஸாயிநீ। ஸ்வாமிப்ரயோஜநாபேக்ஷா ஹ்யேதஸ்யாநந்தஹேதுதா॥" (௯௩௯) என்னையடிமைகொண்டு நீயுகக்கவேணுமென்றாலும், உன்னை உகப்பிக்க கைங்கர்யத்தை நான்பெறவேணுமென்றாலும் இருவருக்கும் ப்ரயோஜநஸித்தி உண்டிறே!.

மேல்வாக்யத்துக்கவதாரிகை (ஆக) என்று தொடங்கி.

௭௫.—கீழ்ச்சொன்ன அர்த்தத்தை உபஸம்ஹரித்துக்கொண்டு மேல்வாக்யத்துக்கவதாரிகை அருளிச்செய்கிறார்

(இனி) என்று தொடங்கி. (மந்த்ரஶேஷம்) என்றது - ப்ரணவமாகிற மந்த்ரத்துக்கு ஶேஷமான நமோநாராயண பதங்களென்றபடி. 'అన్యస్యప్రయోజనమేవయస్య పరమప్రయోజనం-సః-శేషః' 'அந்யஸ்யப்ரயோஜநமேவயஸ்யபரமப்ரயோஜநம்-ஸஃ-ஶேஷஃ' 'అన్యః-శేషీ' 'அந்யஃ-ஶேஷீ'; என்கிறபடியே ப்ரணவத்தில்சொல்லுகிற அர்த்தங்களை விவரிக்கையே ப்ரயோஜநமாக உடைத்தானதுகளாகையாலே, நமோநாராயணபதங்கள் ப்ரணவத்துக்கு ஶேஷமென்றபடி. "ఇచ్ఛయాయదుపాదేయం యస్యాతిశయసిద్ధయే। ఉభయోస్తుభయోస్తైజుషాతౌ శేషశేషిణౌ॥" "இச்சயாயதுபாதேயம்யஸ்யாதிஶயஸித்தயே।உபயாருபயைகைகஜுஷாதளஶேஷஶேஷிணௌ॥"(௯௩௭) என்று அசேதநவிஷயத்திலும் ஶேஷஶேஷிபாவங்களுண்டிறே! "ఇత్యేవంప్రణవస్యార్థో జ్ఞాతవ్యో.క్తమ్మయానఘ।వివృతః ప్రణవస్యార్థోమంత్రశేషేణవైశుభే॥" "இத்யேவம்ப்ரணவஸ்யார்த்தோஜ்ஞாதவ்யோக்தம்மயாநகே| விவ்ர்தஃ ப்ரணவஸ்யார்த்தோமந்த்ரஶேஷேண வைஶுபே||" (௯௩௮)இதி பாத்மே.

---

தா.—ப்ரணவார்த்தத்தை நிகமித்தபடியை அருளிச்செய்கிறார்(ஆக) இத்யாதியால்.

௭௫.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

(மேலிற்பதங்களுக்கு) என்றது - நமஃபதநாராயணபதங்களுக்கென்றபடி. (மந்த்ரஶேஷம்) என்றது - பதத்ரயாத்மகமான திருமந்த்ரத்தில் அர்த்தம்சொல்லுமிந்த நமோநாராயணபதங்களிரண்டு மென்றபடி. (இதுக்கு) என்றது - ப்ரதிபாதிதார்த்தமான ப்ரணவத்துக்கு என்றபடி. (முந்துற) என்றது - முதலிலேயென்றபடி.

---

பி.—௭௫.— (முந்துற) - முன்னம். மேல்பதார்த்தஞ்சொல்லுவதாக விவரணம் முதலருளிச்செய்கிறார் என்றபடி.

வ்யா.—“ இவ்விடத்தில் விவரணமாகிறது, ப்ரஸ்துதமான அர்த்தத்துக்கு உபயுக்தமானஅர்த்தத்தைச்சொல்லிக்கொண்டு பூர்வோக்தமான அர்த்தத்தை விஶதீகரிக்கை” என்று தீபப்ரகாஶத்திலும், “ ఉక్తార్థవిశదీకారయుక్తార్థాన్తరబోధనమ్।మతంవివరణంతత్ర. మహితానాంమనీషిణామ్॥” “ உக்தார்த்தவிஶதீகாரயுக்தார்த்தாந்தரபோதநம் । மதம்விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணும்॥” (அகூ) என்று ரஹஸ்யத்ரயார்த்த விவரணக்ரமம் அருளிச்செய்த ப்ரபந்தத்திலும், விவரணலக்ஷணத்தை ஜீயரருளிச்செய்தாரிறே !.

---

எ.—(விவரணலக்ஷணத்தை ) உபபாதித்தருளுகிறார்

(“இவ்விடத்தில்”) என்றுதுடங்கி. (ஜீயர்) என்றது - வாதிகேஸரி அழகியமணவாளஜீயர் என்றபடி.

---

தொ.— விவரணலக்ஷணத்தை யருளிச்செய்கிறார் (“இவ்விடத்தில்”) இத்யாதியால்.

(“ இவ்விடத்தில்” ) என்றது - இம்மந்த்ரத்திலே யென்றபடி. “పదచ్ఛేదః పదార్థోక్తిః” “ பதச்சேதஃ பதார்த்தோக்திஃ” இத்யாதிகளில் சொல்லுகிற விவரணலக்ஷணம்போலன்றிக்கே இங்கு விவரணலக்ஷணம் வேறுபட்டிருக்கையாலே (“இவ்விடத்தில்விவரண” லக்ஷணம்) என்று விஶேஷித்தருளிச்செய்கிறார். (“ ப்ரஸ்துதமான”) என்றது - ப்ரக்ருதமானவென்றபடி. (“பூர்வோக்தமான”) என்றது - பூர்வமூலத்திலே சொல்லப்பட்டவென்றபடி. (“ మహితానాం”) (“மஹிதாநாம்”) என்றது-புத்திமான்களான எல்லாராலும்கொண்டாடப்பட்டவர்களென்றபடி.(ஜீயர்)என்றது—வாதிகேஸரி அழகியமணவாளஜீயரென்றபடி.

---

பி.—(விவரணமா) கையாவதென்னென்ன அருளிச்செய்கிறார்

(“ இவ்விடத்தில் விவரணமாகிறது”) என்றுதுடங்கி.

மூ.—௭௯. உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு;

---

வ்யா.—௭௯.—விவரிக்கிறபடிதானெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார்

(உகாரத்தைவிவரிக்கிறது நமஸ்ஸு) என்று தொடங்கி. அதாவது—அந்யஶேஷத்வத்தைக் கழிக்கிறவிடத்தில் அந்யரிலே அந்யதமனாகச் சொல்லப்பட்ட தன்னை வெளியாகச்சொல்லிக்கழிக்கையாலே, (உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு;)

---

அ.—௭௯.—(வெளியாகச்சொல்லி) என்றது-ஶாப்தமாகச்சொல்லியென்றபடி. (கழிக்கையாலே) என்றது-அஹங்காரமமகாரங்களைக் (கழிக்கையாலே) என்றபடி. "నాహంమ్మమస్వతంత్రోహంనాస్మీత్యస్యార్థఉచ్యతే। నమేదేహాదికంవస్తుసశేషఃపరమాత్మనః॥" "நாஹம்மமஸ்வதந்த்ரோஹந்நாஸ்மீத்யஸ்யார்த்தஉச்யதே। நமேதேஹாதிகம் வஸ்துஸஶேஷ꞉ பரமாத்மந꞉॥" (௯௬௯) 'நான் எனக்கல்லேன்' என்கிற இதுக்குப்பொருள் ஸ்வதந்த்ரனல்லேனென்று சொல்லப்படுகிறது; தேஹாதிகமானவஸ்துவுமெனக்கு ஶேஷமன்று; என்னோடு அத்தோடுவாசியற எல்லாம் பரமாத்மாவுக்கேஶேஷம் என்கிறது; இதிபகவச்சாஸ்த்ரே.

---

தொ.—௭௯.—மேலுக்கவதாரிகை (விவரிக்கிறபடிதான்) இத்யாதி.

(எங்ஙனே) என்றது-எப்படியென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (அந்யரிலே அந்யதமனாக) என்றது - (அந்யரிலே) ஒருவனாகவென்றபடி. (வெளியாக) வென்றது - வேறாகவென்றபடி. (கழிக்கையாலே) என்றது - (அந்யரிலே) ஒருவனாகச்சொல்லப்பட்ட ஸ்வஶேஷத்வத்தைக் (கழிக்கையாலே) யென்றபடி.

---

பி.—௭௯.— இங்கே (வெளியாகச்சொல்லிக்கழிக்கை) என்கையாலே உகாரத்திலர்த்தமாகக் கழிக்கிறதென்று ஸித்தம்.

மூ.—அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம் ;

---

வ்யா —ரக்ஷகனான ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும், ரக்ஷ்யபூதசேதநாசேதநங்களையும், ரக்ஷணோபயோகியான குணங்களையும், ரக்ஷணப்ரகாரத்தையும், விஶதமாகச்சொல்லுகையாலே, (அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம் ;)

---

எ.—(ரக்ஷகனானஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும்)என்றது—"అవ రక్షణే" "அவ-ரக்ஷணே" என்கிறதாதுவிலேநிஷ்பந்நமான அகாரத்தாலே ரக்ஷகனாகச்சொல்லப்பட்ட (ஈஶ்வரனுடைய) "నారో నరాణాం సంఘాతః తస్యాహమయనం గతః। తేనాస్మి మునిభిర్నిత్యం నారాయణ ఇతీరితః॥" "நாரோநராணாம்ஸங்காதஸ்தஸ்யாஹமயநம்கதி: । தேநாஸ்மிமுநிபிர்நித்யம் , நாராயணஇதீரித:॥ (௬௪0) என்று நாரஶப்தத்தாலே நரஶப்தவாச்யரான சேதநருடைய ஸமூஹத்தைச்சொல்லி, அதுக்கு நான் அயநம் என்று "இண்" தாதுவுக்காதல், "அய" தாதுவுக்காதல் கர்மணிவ்யுத்பத்தியாலும், கரணேவ்யுத்பத்தியாலும் "గతిర్గమ్యంచ" "கதிர்கம்யம்ச"(௬௪௧)என்கிறபடியே ப்ரதமாக்ஷரத்தில்சொன்ன ரக்ஷகத்வஶேஷித்வஸித்தமான உபாயோபேயத்வமாகிற (ஸ்வரூபத்தையும்) என்றபடி ; அதவா ஸமஸ்தவஸ்துஶரீரதயா ஸர்வரக்ஷகனாயிருக்கையாகிற ஈஶ்வர (ஸ்வரூபத்தையும்) என்றுமாம். (விஶதமாகச்சொல்லுகையாலே) என்றது—ஆர்த்திகமாகச்சொல்லுகையன்றிக்கே ஶாப்தமாகச் (சொல்லுகையாலே) என்றபடி.

---

தொ.— (ஸ்வரூபத்தையும்) என்றது - ஸர்வாந்தர்யாமிதயா ஸர்வவ்யாபகமான (ஸ்வரூபத்தையு)மென்றபடி. (குணங்களையும்) என்கிறவிடத்தில் (ஆதி) ஶப்தத்தாலே விக்ரஹத்தை நினைக்கிறது. (ரக்ஷணப்ரகாரத்தையும்) என்றது - மாத்ர்த்வாதி (ப்ரகாரத்தையும்) என்றபடி.

---

பி.— (ரக்ஷணப்ரகாரத்தையும்) என்றது — பாஹ்யாப்யந்தரங்களை வ்யாபித்துரக்ஷிக்கை.

மூ.— மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி, நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.

---

வ்யா.— "[illegible]" "நாகிஞ்சித் குர்வதஶ்ஶேஷத்வம்" (அஎ) "[illegible]" "அகிஞ்சித்கரஸ்யஶேஷத்வாநுபபத்தி:" (அஅ) என்கிறபடியே கிஞ்சித்காரமில்லாதபோது ஶேஷத்வஸித்தியில்லாமையால், தத்ஸித்திக்குறுப்பான கிஞ்சித்காரத்தை ப்ரதிபாதிக்கிற (சதுர்த்தி) ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற (மகாரத்தை விவரிக்கிறது ;) மகாரவாச்யனான ஆத்மாவினுடைய நித்யத்வம், ஏகரூபத்வம், பஹுத்வம் தொடக்கமானவற்றை ப்ரதிபாதிக்கையாலே (மகாரத்தைவிவரிக்கிறது) (நாரபதமென்றுஞ்சொல்லுவர்கள்) என்கை.

---

எ.— (தத்ஸித்திக்குறுப்பான) என்றது – ஶேஷத்வ (ஸித்திக்கு) ப்ரகாஶகமானவென்றபடி. (ஆத்மாவினுடைய) இத்யாதி.

[நாரபதம்] (ஆத்மாவினுடைய நித்யத்வா)திகளை ப்ரதிபாதிக்கிறபடி எங்ஙனே? என்னில் ; "[illegible]" "ரிங் - க்ஷயே" என்கிற தாதுவிலே கர்த்தரி டப்ரத்யயமாய் அநுபந்தலோபம்பண்ணி "[illegible]" "ப்ர்க்ர்தேஃஷ்டே:" என்று ப்ரக்ருதிக்கு டிலோபமும்பண்ணி 'ர:' என்று க்ஷயிஷ்ணுவாசியாய் நகாரம் நிஷேதிக்கையாலே நர: என்று அக்ஷயார்த்தத்தைச்சொல்லுகையாலே நித்யத்வமும் ; "[illegible]" "நஜாயதேம்ரியதேவாகதாசித்"(கூசஉ)என்று (ஏகரூபத்வ)த்தையும்; அதுக்குமேலே அண்ப்ரத்யயமும் ஆவ்ருத்தியும் ஆயதிலே பஹுத்வத்தையும் ; நரஶப்தத்துக்கு, "[illegible]" "ந்ர்-நயே" என்கிறதாதுவிலே கர்த்தரி அச்ப்ரத்யயமும் குணமுமாய் கர்த்ருத்வமுண்டாகையாலே அணுத்வோபபாதகமான உத்க்ராந்தி கத்யாதிகளைக்காட்டுகையாலும் விவரிக்கிறதென்றுகண்டுகொள்வது.

---

தொ.— (தத்ஸித்திக்குறுப்பான) என்றது – ஶேஷத்வஸித்திக் (குறுப்பான)வென்றபடி. (கிஞ்சித்காரத்தை ப்ரதிபாதிக்கிற) என்றது-லக்ஷணயா (கிஞ்சித்காரத்தை ப்ரதிபாதிக்கிற) என்றபடி. நரஶப்தத்தாலே (நித்யத்வத்)தையும், அதின்மேலேவந்த அண்ப்ரத்யயத்தாலே (மகாரவாச்யனான ஆத்மாவினுடைய பஹுத்வஞ்) சொல்லப்படுகையாலே, ஶேஷத்வஜ்ஞாத்ருத்வப்ரக்ருதே: பரத்வாதிகளாலே (ஏகரூபத்வ)மும், "மஸி - பரிமாணே" என்கிறதாதுவாலே மகாரத்திலே பரிமாணம் ஸித்தித்தாலும் அத்தை அணுபரிமாணமாகச்சொல்லுகிறது [நாரபத]மாகையாலே (நித்யத்வம் ஏகரூபத்வம் பஹுத்வம்) அணுத்வம் இவற்றை ப்ரதிபாதிக்கையாலேயென்கிறார்.

---

பி.—("நாகிஞ்சித்குர்வத:")இத்யாதிக்கு கிங்கரகர்த்யம்பண்ணுகவனுக்கு(ஶேஷத்வ) மில்லையென்று கருத்து. [சதுர்த்தி] யென்றது—வ்யக்த [சதுர்த்தி]யை. (ஶேஷத்வாஶ்ரயம்) என்றவிடத்தில் லுப்தசதுர்த்தியில் (ஶேஷத்வாஶ்ரய)மென்றபடி. மகாரவிவரணம் [நாரபதம்] என்கிறபக்ஷத்தில், "ரிங் - க்ஷயே" என்கிற தாதுவர்த்தமான க்ஷயமாவது-நாசமும் அபக்ஷயாதிகளும். "ஸ்ர் - கதௌ" என்கிறதாதுவாலே அணுத்வஞ்சொல்லுகிறவழி விவரணரூபத்வமென்றநுஸந்திச்செய்வர்.

மூ.—எஎ. அடைவே விவரியாதொழிகிறது விரோதிபோய்

---

வ்யா.—எஎ.— அக்ஷரக்ரமத்திலே விவரியாதே வ்யுத்க்ரமமாக விவரிப்பானேனென்ன அருளிச்செய்கிறார்

(அடைவே) என்று துடங்கி. அதாவது - அக்ஷரக்ரமத்திலே (விவரியாதொழிகிறது) அகாரவிவரணமான நாராயணபதத்தில் பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்காரமமகாராதிகள், நமஸ்ஸாலே கழியுண்டுபோய்

---

எ.— [உகாரத்தைவிவரிக்கிறது நமஸ்ஸு]-உகாரார்த்தத்தை விஶதமாகச்சொல்லுகிறது [நமஸ்ஸு] என்று மூலார்த்தம்.

[அகாரத்தை] - அகாரத்தில்சொன்ன அர்த்தத்தை, [நாராயணபத]மானது [விவரிக்கிறது] - (ப்ரகாஶமாகச்சொல்லுகிறது) என்று மூலார்த்தம்.

[மகாரத்தை]-மகாரத்தால்சொன்ன அர்த்தத்தை, [சதுர்த்தி]-நாராயணபதோபரிஸ்த்திதையான [சதுர்த்தி] யானது, [விவரிக்கிறது] — (ப்ரகாஶமாகச்சொல்லுகிறது) என்று மூலார்த்தம்.

மகாரார்த்தத்தை (விஶதமாகச்சொல்லுகிறது)[நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்] - [நாரபத] மென்றுஞ்சிலர்[சொல்லுவர்கள்] என்று மூலார்த்தம்.

எஎ.— (நாராய்ணபதத்தில் பக்வதநுபவத்துக்கு) என்றது - (நாராயணபதத்தில்) சொல்லுகிற (பகவதநுபவத்துக்கு) என்றபடி; அதாவது - (நாராயணபதத்தில்) மேல், 'வ்யக்தசதுர்த்தி, ப்ரார்த்தநாயாம்சதுர்த்தி' என்று கைங்கர்யப்ரார்த்தநா ப்ரகாஶகமாகையாலே, அந்தகைங்கர்யந்தான் பகவதநுபவஜநித ப்ரீதிகாரிதமாகையாலே, கைங்கர்ய பூர்வபாவியான பகவதநுபவத்தை லக்ஷணயா (நாராயணபதம்) சொல்லுகிறதென்கை. (பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்கார மமகாராதிகள்) என்கிறவிடத்தில் (அஹங்காராதிகள் பகவச்சேஷத்வஜ்ஞாநத்துக்கு விரோதியாகையாலே;

---

தொ —எஎ.—மேலுக்கவதாரிகை (அக்ஷரக்ரமத்திலே) இத்யாதி.

(நாராயணபதத்தில் பகவதநுபவத்துக்கு) என்றது - நாராயணபதத்தில்) சொலலுகிற (பகவதநுபவத்துக்கு) என்றபடி.

---

பி.—எஎ.— (அக்ஷரக்ரமத்திலே விவரியாதே) என்றது - [அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு;] என்று (அக்ஷரக்ரமத்திலே விவரியாதே) என்றபடி.

மூ.— அநுபவிக்கவேண்டுகையாலே.

மூ.—எ அ. நமஸ்ஸு (ந என்றும் (மঃ) என்றும் இரண்டுபதம்.

---

வ்யா.— பின்னை (அநுபவிக்கவேண்டுகையாலே) என்கை.

எ அ.—இனி மத்யமபதமான நமஸ்ஸுக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, அதில் அவாந்தரபதபேதத்தை அருளிச்செய்கிறார

(நமஸ்ஸு (ந) என்றும் (மঃ) என்றும் இரண்டுபதம்) என்று.

---

எ.—அநுபவந்தான் ஶேஷத்வஜ்ஞாநகார்யமாகையாலே லக்ஷணயா (அநுபவத்துக்குவிரோதி)கள் என்றபடி.

[அடைவே] - (அக்ஷரக்ரமத்திலே), [விவரியாதொழிகிறது]- விவரணமாகச் சொல்லாதேபோகிறது, [விரோதிபோய்] - (பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்காரமமகாராதிகள் நமஸ்ஸாலே கழியுண்டுபோய்), [அநுபவிக்கவேண்டுகையாலே] - (பின்னை) [அநுபவிக்கவேண்டுகையாலே] என்று மூலார்த்தம்.

எ அ.— மேல்வாக்யத்துக்கவதாரிகை (இனி) என்றுதுடங்கி.

(அவாந்தரபதபேதத்தை) என்றது-மத்யே உண்டான(பதபேதத்தை) என்றபடி. இப்படி அருளிச்செய்தது- "நமஇதி" "நமஇதி பஶ்சாத்" "ப்ரணவாத்யம் நமோமத்யம்" "ப்ரணவாத்யம் நமோமத்யம்" என்று பூர்வம் ஒருபதமாக அருளிச்செய்திருக்கையாலே. முன்னே ஏகபதமாக அருளிச்செய்தது - 'ஆர்த்தைகத்வாதேகம்வாக்யம்' என்னுமபிப்ராயத்தாலே.

---

தொ.—[அநுபவிக்கவேண்டுகையாலே] என்றது - ஸமஸ்தகல்யாணகுணாத்மகனை நாராயணனை [அநுபவிக்கவேண்டுகையாலே] யென்றபடி. (அஹங்காரமமகாராதிகள்) என்கிறவிடத்தில் (ஆதி) ஶப்தத்தாலே ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயத்தைச்சொல்லுகிறது.

எ அ.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

(அதில் அவாந்தரம்) என்றது - அந்தர்நமஸ்ஸிலே அந்தர்க்கதமான என்றபடி.

மூ.—எகூ. (மः) என்கிறவித்தால் தனக்குரியனென்கிறது, (ந) என்று அத்தைத்தவிர்க்கிறது.

---

வ்யா—.எகூ.— இவ்விரண்டுபதங்களுக்கும் அர்த்தமேதென்ன அருளிச்செய்கிறார்

(மःஎன்கிறவித்தால்) என்றுதுடங்கி. அதாவது - (மः) என்றுஷஷ்ட்யந்தமான இம்மகாரத்தால் மகாரவாச்யனான ஆத்மாவுக்கு கீழ்ச்சொன்ன தாதர்த்ய ப்ரதிகோடியான ஸ்வார்த்தத்வந்தோற்றுகையாலே (தனக்குரியனெ)ன்னுமத்தைச்சொல்லுகிறது ; (ந) என்று நிஷேதவாசியான நஞ்ஞாலே (அத்தைக்கழிக்கிறது) என்கை.

---

எ.—எகூ.— (கீழ்ச்சொன்ன) என்றது - ப்ரணவத்தில்சொன்ன என்றபடி. (தாதர்த்யப்ரதிகோடியான ஸ்வார்த்தத்வம்) என்றது - ஶேஷத்வவிரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யமென்றபடி.

---

தொ.— எகூ.— மேலுக்கவதாரிகை ( இவ்விரண்டுபதத்துக்கும் ) இத்யாதி.

மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (கீழ்ச்சொன்ன தாதர்த்யப்ரதிகோடியான) என்றது - கீழ் ப்ரணவத்தால் சொல்லப்பட்ட பகவதநந்யார்ஹ ஶேஷத்வவிரோதியான என்றபடி. (ஸ்வார்த்தத்வம்) என்றது - ஸ்வாதந்த்ர்யமென்றபடி. [அத்தை] என்றது - ஸ்வாதந்த்ர்யத்தையென்றபடி.

---

பி.—எகூ.— நமஶ்ஶப்தத்தில் மகாரம் ஷஷ்ட்யந்தபதமாகையாலே ஸப்ரதியோகிகமாகையாலே “ చేతనస్యయదామమ్యం” “சேதநஸ்யயதா மம்யம்” இத்யாதிப்படியே, ‘மம அஹம்’ என்றும், ‘மமேதம்’ என்றும் த்விவிதமான அபிமாநவாசித்வமுண்டேயாகிலும், தாத்ர்ஶாபிமாநம் ப்ரதமக்ஷணத்திலே கழிகையாலே, ப்ரதமாக்ஷரோதித ஶேஷத்வோதயாநந்தரம் த்ரிதீயாக்ஷரத்தில் ஜ்ஞாத்ர்த்வநிபந்தநஸ்வரக்ஷணே ஸ்வாநுரூபாபிமாநவாசியாய், நகாரம் தந்நிஷேதவாசியுமாயிருக்கையாலே, நமஸ்ஸுக்கு ஶாப்தமான அர்த்தம் – பாரதந்த்ரத்வமாய் அத்தாலே ஈஶ்வரோபாயத்வமும் பலிக்கையாலே, ஆர்த்தமான அர்த்தம் உபாயப்ரதிபாதகம் என்றும் அருளிச்செய்வர்.

மூ.—அ0. ஆக (நம:) என்கிறவித்தால், தனக்குரியனன்றென்கிறது.

வ்யா.—அ0.—உபயபதத்தாலும் சொன்ன அர்த்தத்தைச் சேரப்பிடித்த ருளிச்செய்கிறார்

(ஆக (நம:) என்கிறவித்தால் தனக்குரியனன்றென்கிறது) என்று, பதக்ரமத்திலே அர்த்தஞ்சொல்லாதே வ்யுத்க்ரமமாகச்சொல்லுகிறது, நிஷேத்த்யத்தைச்சொல்லி நிஷேதிக்கவேண்டுகையாலே. க்ரமத்திலேசொல்லும்போது "வீடுமின்முற்றவும்" என்னுமாப்போலே நிஷேதபூர்வகமாக நிஷேத்த்யத்தைச் சொல்லுகிறதென்று யோஜிக்க வேணும்; அதுதானும் பரந்தபடியிலே இவர்தாமே அருளிச்செய்தார்.

எ.—அ0.— நிஷேதத்தில் ஆதரம்தோற்ற நஞ் முன்னாகக்கிடக்கிறது என்று தேசிகர்.

திருவாய்மொழி - க - பத்து - உ - திரு - க - பாட்டு.

"வீடுமின்முற்றவும்
வீடுசெய்தும்முயிர்
வீடுடையானிடை
வீடுசெய்ம்மின்னே".

தொ.—அ0.— மேலுக்கவதாரிகை (உபயபதத்தாலும்) இத்யாதி.

(சேரப்பிடித்து) என்றது - கூட்டியென்றபடி.

(நமஸ்ஸுக்கு பதக்ரமத்திலே அர்த்தம) ருளிச்செய்யாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்

(பதக்ரமத்திலே) இத்யாதியால். (பதக்ரமத்திலே) என்றது - பதமிருந்த க்ரமத்திலேயென்றபடி.

பதக்ரமத்திலேசொல்லுகைக்கு உபபத்தியை அருளிச்செய்கிறார் (க்ரமத்திலேசொல்லும்போது) இத்யாதியால்.

இது தன்னை (இவர்தாமே அருளிச்செய்தார்)என்றருளிச்செய்கிறார் (அதுதானும்) இத்யாதியால்.

பி—அ0.— (பதக்ரமத்திலே அர்த்தஞ்சொல்லாதே) என்றது - நகாரத்துக்கர்த்தம் சொல்லிவிட்டு மகாரத்துக்கு அர்த்தம்சொல்லாதே என்றபடி. நகாரத்துக்கர்த்தஞ்சொல்லி (வ்யுத்க்ரமமாக) அர்த்தஞ்சொல்லுவானென் ? என்ன, அருளிச்செய்கிறார் (பதக்ரமத்திலே அர்த்தம்சொல்லாதே) யென்று துடங்கி. (பதக்ரமத்திலே சொல்லும்போது) எப்படி இருக்குமென்ன அருளிச்செய்செய்கிறார் (க்ரமத்திலே சொல்லும்போது "வீடுமின்முற்றவும்") என்று துடங்கி.

எ.—"அவ— இதரவிஷயங்களைவிட்டு, உங்களுக்கு வகுத்தவிஷயத்தைப் பற்றப்பாருங்கோளென்கிறார்.

வ்யா.— (வீடுமின்) "வீடுமின்" என்று ஒருசொல்லாய்க்கிடக்கவுமாம்; விடுமினென்றத்தைநீட்டி "வீடுமின்" என்று கிடக்கிறதாகவுமாம். முதலிலே "வீடுமின்" என்பானென்னென்னில்; சிறுப்ரஜை கையிலே ஸர்ப்பத்தைப்பிடித்துக்கொண்டு கிடந்தால், பொகட்டுக்கொடு நிற்கச்சொல்லி, பின்னை 'ஸர்ப்பம்' என்பாரைப்போலேயும், ஒருவன் க்ர்ஹத்துக்குள்ளேகிடந்துறங்காநிற்க, நெருப்புப்பற்றிப்புறம்பேயெரியாநின்றால் 'புறப்பட்டுக்கொள்கிடாய்' என்று, பின்பு 'நெருப்பு' என்பாரைப்போலேயும், முந்துற விடுங்கோளென்கிறார். ஜந்மமரணங்களுக்கு நடுவேயிறே இவைதான் நோவுபடுகிறது. "த்யக்த்வா புத்ராம்ஶ்சதாராம்ஶ்ச" "த்யக்த்வா புத்ராம்ஶ்சதாராம்ஶ்ச" (கூ௩௩) என்றும், "பரித்யக்தாமயாலங்கா" "பரித்யக்தாமயாலங்கா" (கூ௪௪)என்றும், விடுகைமுன்னாகவிறே முன்புபற்றினவர்களும்பற்றிற்று. "வீடுமின்" என்கிறபன்மையாற் சொல்லுகிறதென்னென்னில்; ஒருவன் தாந்தனுய்வந்துநிற்க அவனுக்குபதேஶிக்கிறானன்றே! ஸம்ஸாரவெக்காயம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே ஒருவரல்லாவொருவருக்காகிலும் ருசிபிறக்குமோவென்று எல்லார்க்குமுபதேஶிக்கிறார்.

எத்தைவிடுவதென்னில்; (முற்றவும்) சண்டாளரிருப்பிடத்தை ப்ராஹ்மணர்க்காக்கும்போது சில கூட்டிச் சில கழித்தன்றேகொள்வது, அப்படியே அஹங்காரமமகாரங்களாலே தூஷிதமானவற்றிலே சிலகூட்டிக்கொள்ளவொண்ணாதே! ஆகையாலே கட்டடங்க விடுங்கோளென்கிறார்.

(வீடுசெய்து) "வீடுமின்முற்றவும்" என்றாராகில் திரிய "வீடுசெய்து" என்கிறவிதுக்குக் கருத்தென்னென்னில்; மேலொருபேறுபெறுவதிலும் இவற்றைவிட்டு நிற்கும்நிலைதானே பேறாகப்போருகையாலே விடுகையாகிற பேற்றைப்பெற்றென்கிறபடி; ராஜபுத்ரன் அழுக்குசிறையிலேகிடந்தால், முடிசூடி ராஜ்யம்பண்ணுவதிலும் சிறைவிடுகைதானே ப்ரயோஜநமாயிருக்குமிறே!

(உம்முயிர் வீடுடையானிடை) இதுக்குப்பலபடியாக அருளிச்செய்வர். "யஸ்யாத்மா ஶரீரம், யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்" "யஸ்யாத்மாஶரீரம், யஸ்யப்ருதிவீஶரீரம்" என்கிறபடியே, உம்முயிரையும், அதினுடைய வீட்டையும், உடையவனென்னுதல்; உம்முயிரை வீடாகவுடையவனென்னுதல்; உம்முயிரை, வீடுமிடத்தில் - ஸமர்ப்பிக்குமிடத்தில்: உடையான்பக்கலிலேயென்னுதல்; வீடுடையான் - பரமபதநிலயன் பக்கலிலேயென்னுதல்.

எ.—(உம்முயிர்) அநித்யமான ஶரீரத்துக்கு நன்மைபார்க்கச்சொல்லுகிறேனோ? நித்யமான ஆத்மவஸ்துவுக்கன்றோ நான் நன்மை பார்க்கச்சொல்லுகிறது; அதுதானு மென்னுயிர்க்கோ? உம்முயிர்க்கன்றோ? (உடையானிடை) பொதுவிலே உடையவனென்கிறார்; ருசிபிறந்து 'அவனார்' என்றால் "வண்புகழ்நாரணன்" என்பாராக. அவன்உடையவனாய் உங்கள்ஸத்தையை நோக்கிக்கொண்டுபோராநிற்க, நீங்களும் 'நான் என்னது' என்றகலப்பாராதே உங்களை அவன்பக்கலிலே ஸமர்ப்பிக்கப்பாருங்கோள். அவன்உடையவனானபின்பு அவனோடு அவிவாதமேயுங்களுக்குவேண்டுவது;[யம:](கூசரு)ப்ராதேஶிகமான நியமநத்தையுடையவனையன்று சொல்லுகிறது,] "ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:" "ப்ரபவதிஸம்யமநேமமாபிவிஷ்ணு:" என்று அவன் றன்னையும் நியமிக்குமவனாயிற்றிவன். [வைவஸ்வத:] [வைவஸ்வத:] விவஸ்வானுடைய குலத்திலே பிறந்தவனென்னுதல், ஆதித்யாந்தரவஸ்த்திதனென்னுதல். [ராஜா] [ராஜா] அவனைப்போலே 'தஹ பச' 'தஹ பச' என்கையன்றிக்கே எல்லார்க்குமினியனாயிருந்தமவனாயிற்றிவன். [ய:] அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகளில் ப்ரஸித்தி. [தவைஷ ஹ்ருதி ஸ்த்தித:] [தவைஷஹ்ருதிஸ்த்தித:] அவனெங்குற்றானென்ன; கண்டிலையோ? உன்னுடைய ஹ்ருதயத்திலேபுகுந்து ஆட்சியிற்றொடர்ச்சி நன்றென்றிருக்கிறான். ஆனால் செய்யவேண்டுவதென்னென்னில்; [தேந சேத விவாதஸ்தே] [தேநசேதவிவாதஸ்தே] உடையவனாயிருக்கிறவனோடே உனக்கு அவிவாதமுண்டாகில். இத்தால் பேறென்னென்பாயோ? [மா கங்காம் மா குரூந் கம:] [மாகங்காம்மாகுரூந்கம:] ஒருதீர்த்தந் தேடிப்போதல், புண்யக்ஷேத்ரந் தேடிப்போதல், செய்யவேண்டா; அஹங்காரமமகாரங்கள் கிடக்க ப்ராயஶ்சித்தம்பண்ணுகையாவது, நிஷித்தத்ரவ்யத்தை யுள்ளேவைத்து மெழுக்கூட்டினவோபாதியிறே. உடையவனுக்கு முடைமைக்குந் தக்கபடியிறே ப்ராயஶ்சித்தமும். உடையவன் – ஸர்வேஶ்வரன்; த்ரவ்யங்களில்ப்ரதாநமான ஆத்மத்ரவ்யத்தையிறே அபஹரித்தது; அபஹரித்த த்ரவ்யத்தைப்பொகட்டு ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமே. பொகடுகிற த்ரவ்யம் தானாகையாலே ப்ராயஶ்சித்தம்பண்ணுகைக்கு வேறதிகாரியுமில்லையே. ஆகையாலே நீங்களுமுடையவன்பக்கலிலே (வீடுசெய்ம்மினோ). வீடு – ஸமர்ப்பிக்கை, அதாவது – விடுகை"

மூ.—அக. பிறர்க்குரியனுனவன்று

வ்யா.—அக.—(தனக்கும்பிறர்க்குமுரித்தன்றெ)ன்று அந்யஶேஷத்வத்தை நிஷேதித்த உகாரத்தை விவரிக்கிறதாகில், பிறர்க்குரித்தன்றென்றத்தையும் விவரியாமல் தனக்குரியனன்றென்ற இத்தையே விவரிப்பானேன்? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் (பிறர்க்குரியனுனவன்று) என்று துடங்கி.

எ.—அக.— மேலுக்கவதாரிகை (தனக்கும்) இத்யாதி.

தொ.—அக.—மேலுக்கு ஶங்காபூர்வகமாக அவதாரிகை (தனக்கும்) இத்யாதி.

(தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்று) என்றது - தன்னையும் அந்யரிலே ஒருவனுக்கியென்றபடி.

இவ்விடத்திலே பூர்வபக்ஷமிருக்கும்படி:—

நநு, மகாரம் ஸ்வஶேஷத்வ பரஶேஷத்வரூபமான அந்யஶேஷத்வத்தைக் கழிக்கிறதாகில் தத்விவரணமான நமஸ்ஸிலும் இரண்டையும் விஶதமாகச்சொல்லி கழிக்கவேண்டியிருக்க, அப்படிசெய்யாதே ஸ்வஶேஷத்வநிவ்ருத்திமாத்ரத்தை விஶதமாகச்சொன்னால் அதுக்கு விவரணமானபடியெங்ஙனே? உகாரத்தாலேதானே ஸ்வஶேஷத்வபரஶேஷத்வங்களிரண்டும் கழியுண்கையாலே இங்கு ஸ்வஶேஷத்வ ப்ரஸக்தியில்லையே? இப்படி அப்ரஸக்தமான ஸ்வஶேஷத்வநிவ்ருத்தியை நமஸ்ஸாலே சொல்லுகை அஸங்கதமன்றோ? புநருக்தமன்றோ? என்னில்; என்றது.

ஸித்தாந்தமிருக்கும்படி:—

இங்கு விவரணமாகிறது "உக்தார்த்தவிஶதீகார யுக்தார்த்தாந்தரபோதநம்" "உக்தார்த்தவிஶதீகார யுக்தார்த்தாந்தரபோதநம்" ஆகையாலே, உகாரத்தால் அந்யஶேஷத்வநிவ்ருத்திக்கு அந்யரிலே அந்யதமனுக்ச் சொல்லப்பட்ட ஸ்வஶேஷத்வநிவ்ருத்தி மிகவும் விஶதீகாரஹேதுவாகையாலே, அத்தை ப்ரதிபாதிக்கிற நமஸ்ஸு உகாரத்துக்கு விவரணமாகக் குறையில்லை; உகாரத்தாலே அந்யஶேஷத்வநிவ்ருத்தியைச்சொன்ன அநந்தரம் இப்படி பகவதநந்யார்ஹ ஶேஷமான ஆத்மா 'ஜ்ஞாதாவாயிருப்பன்' என்று மகாரத்தாலே சொல்லுகையாலே, 'உத்தரம் பலவத்தரம்' என்கிற ந்யாயத்தாலே ஜ்ஞாத்ருத்வம் பலிஷ்ட்டமாகையாலே, ததநுரூபமான ஶேஷத்வமே ஸ்வரூபமாகையாலே, ஆத்மஸ்வரூபம் பரார்த்தமாயும் ஸ்வார்த்தமாயுமிருக்குமென்று ஸ்வஶேஷத்வம் ப்ராப்தமாகையாலே,

மூ.—தன் வைலக்ஷண்யத்தைக்காட்டி மீட்கலாம். தனக்கென்றுமன்று

---

வ்யா.—அதாவது-அந்யசேஷபூதனானவன்று சேஷத்வத்துக்கிசைகை யாலே, அந்யரிற்காட்டில் தனக்குண்டான ஸர்வகாரணத்வ, ஸர்வ ரக்ஷகத்வ, ஸர்வசேஷித்வாதியான (வைலக்ஷண்யத்தைக்காட்டி) அந் நிலையில் நின்றும் (மீட்கலாம்,); (தனக்குரியன்) என்றுநிற்குமன்று "త్వన్మే" "த்வம்மே" (அகூ) என்றால் "అహంమ్మే" "அஹம்மே" என்னுமை தொழிய சேஷத்வத்துக் கிசையாமையாலே,

---

எ.—(அந்யசேஷபூதனானவன்று) என்றது - தனக்கு அந்யரன்றிக் கே பகவதந்யராய் "సంసారవశవర్తినః" "ஸம்ஸாரவசவர்த்திந:" என்று ம், "ఆవిరించాదమంగళం" "ஆவிரிஞ்சாதமங்களம்" என்றும் சொல்லு கிறபடியே ஸம்ஸாரிகளானவர்களுக்கு (சேஷபூதனானவன்று) என் றபடி. (இசைகையாலே) என்றது- அநுமோதிக்கையாலே என்றபடி. (சேஷித்வாதியான) என்கிறவிடத்தில, (ஆதி) சப்தத்தாலே ஸ்ரிய: பதித்வமும் ஸமஸ்த கல்யாண குணாத்மகத்வமும் சொல்லப்படுகிறது. (அந்நிலையில்நின்றும்) என்றது-அந்யசேஷபூதனாயிருக்கும் இருப்பில் நின்றும் என்றபடி.

ஸ்ரீபராசரபட்டார்யோக்தி:— ("త్వన్మేహన్మేకుతస్తదపికుత ఇదం వేదమూల ప్రమాణాదేతచ్చానాది సిద్ధాదనుభవవిభవాత్తర్హిసాక్రోశఏవ ।

---

தொ.—ப்ரஸக்தமான ஸ்வசேஷத்வநிவ்ருத்தியைச் சொல்லுகை யாலே நமஸ்ஸுக்கு அஸங்கதார்த்த வ்யுத்பாதநரூப தோஷமும் புநருக்திதோஷமுமில்லையென்று இப்படி ஜ்ஞாத்ருத்வபலத்தாலவந்த ஸ்வசேஷத்வ நிவ்ருத்தியல்லது அந்யசேஷத்வநிவ்ருத்தி விசத மாக ப்ரகாசியாமையாலே ஸ்வசேஷத்வநிவர்த்தகமான நமஸ்ஸு உகாரவிவரணமாகக் கடவது.

ஜ்ஞாத்ருத்வபலத்தாலே ஸ்வஸ்வாதந்த்ர்யம் ப்ரஸக்தமானாப்போ லே ஹேத்வந்தரத்தாலே அந்யசேஷத்வம் ப்ரஸக்தமானாலோ? என்கிறசங்கையிலே அருளிச்செய்கிறார்

[பிறர்க்கு] இத்யாதி. அன்றிக்கே அந்யசேஷத்வநிவர்த்தக மாய் உகாரவிவரணமான நமஸ்ஸிலே அந்யசேஷத்வத்தை விவரி யாமல் அந்யரிலே அந்யதமனான ஸ்வசேஷத்வமாத்ரத்தைக் கழிக் கும்படி, ஸ்வசேஷத்வமப்படி க்ரூரமோ? என்ன அருளிச்செய்கி றாராகவுமாம். மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. பகவதந்யார்ஹ சேஷபூதனாகைக்கு யோக்யதையை உண்டாக்குகிற அந்யசேஷத்வ த்திலுங்காட்டில் பகவச்சேஷத்வத்துக்கு யோக்யதையையும் அழிக் கிற ஸ்வசேஷத்வம் அதிக்ரூரமாகையாலே அத்தைக்கழிக்கிற நமஸ் ஸாலே அந்யசேஷத்வம் தன்னடையே கழிந்ததாமென்றுகருத்து.

எ.—క్వాక్రోశః కస్యగీతాదిషు మమ విదితః కోత్ర సాక్షీ సుధీస్స్యాద్ధంత త్వత్పక్షపాతీ స ఇతి నృకలహే మృగ్యమధ్యస్థవత్త్వం॥") ("த்வம்மேஹம்மே குதஸ்தத்ததபி குத இதம்வேதமூலப்ரமாணாதேதச்சாநாதி ஸித்தாதநுபவவிபவாத்தர்ஹி ஸாக்ரோஶஏவ|க்வாக்ரோஶ: கஸ்யகீதாதிஷுமமவிதித: கோத்ரஸாக்ஷீ ஸுதீஸ்யாத்தந்தத்வத் பக்ஷபாதீஸ இதிந்ருகலஹேம்ருக்யமத்யஸ்தவத்த்வம்||") நாயிந்தே! "హ్రీశ్చతే లక్ష్మీశ్చ పత్న్యౌ" "ஹ்ரீஶ்சதேலக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" (௩௪௬) என்றும், "వైకుంఠేతు పరేలోకే శ్రీసహాయో జనార్దనః। ఉభాభ్యాం భూమినీళాభ్యాం సేవితః పరమేశ్వరః॥" "வைகுண்டேதுபரேலோகே ஸ்ரீஸஹாயோஜநார்தந: | உபாப்யாம் பூமிநீளாப்யாம்ஸேவித: பரமேஶ்வர:||"(௩௪௭) என்றும், "வடிவிணையில்லாமலர்மகள்மற்றைநிலமகள்பிடிக்குமெல்லடி" என்றும், "திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந்திகழ" என்றுஞ்சொல்லுகிறபடியே லக்ஷ்மீ பூமீநீளாநாயகனாய், "యతో వా ఇమాని భూతాని జాయంతే" "யதோவா இமாநிபூதாநிஜாயந்தே" (௩௪அ) என்றும், "సదేవ సోమ్యేదమగ్ర ఆసీత్" "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்" (௩௪௯) என்றும், "స కారణం కరణాధిపాధిపః" "ஸகாரணம்கரணாதிபாதிப:"(௩௫0) என்றும், "స్థితిసంయమకర్తాసౌ జగతోస్య జగచ్చ సః" "ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌஜகதோஸ்யஜகச்சஸ:" (௩௫௧) என்றும், "தானோருருவே தனிவித்தாய்" என்றுஞ்சொல்லுகிறபடியே ஸகலஜகத்காரணபூதனாய், "అపహతపాప్మా విజరో విమృత్యుర్విశోకో విజిఘత్సోఽపిపాసస్సత్యకామస్సత్యసంకల్పః" "அபஹதபாப்மாவிஜரோவிம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோபிபாஸஸ்ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:"(௩௫௨) என்றும், "పరాస్య శక్తిర్వివిధైవ శ్రూయతే స్వాభావికీ జ్ఞానబలక్రియా చ।" "பராஸ்யஶக்திர் விவிதைவஶ்ரூயதேஸ்வாபாவிகிஜ்ஞாநபலக்ரியாச|"(௩௫௩) என்றும், "సత్యం జ్ఞానమనంతం బ్రహ్మ" "ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம" (௩௫௪) என்றும், "సమస్తకల్యాణగుణాత్మకోసౌ" "ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ"(௩௫௫) என்றும், "గుణానామాకరో మహాన్" "குணநாமாகரோமஹாந்" (௩௫௬) என்றும், "బహవో నృప కల్యాణగుణాః పుత్రస్య సంతి తే" "பஹவோந்ர்பகல்யாணகுணா: புத்ரஸ்யஸந்திதே" (௩௫௭) என்றும், "వశీ వదాన్యో గుణవానృజుశ్శుచిస్సమస్తకల్యాణగుణామృతోదధిః।" "வஶீவதாந்யோகுணவாந் ருஜுஶ்ஶுசிஸ்ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததி:|"(௩௫அ) என்றும், "దయాక్షాంత్యౌదార్యాద్యాః" "தயாக்ஷாந்த்யௌதார்யாத்யா:"(௩௫௯) என்றும், "உயர்வறவுயர்நலமுடையவன்" என்றும், "சீலமெல்லையிலான்" என்றும் சொல்லுகிறபடியே ஸமஸ்த கல்யாணகுணவிபூஷிதரான தேவரீர், "యత్రర్షయః ప్రథమజా యే పురాణాః" "யத்ரர்ஷய:ப்ரதமஜாயேபுராணா:" என்றும், "సదా పశ్యంతి సూరయః" "ஸதாபஶ்யந்திஸூரய:" (௩௬0) என்றும், "அயர்வறுமமரர்க

எ.—ளதிபதி" என்றும், "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர் கள்நன்னீராட்டியந்தூபந்தராநிற்க" என்றுஞ்சொல்லுகிறபடியே நித்ய ஸூரிகளாலே அநவரதபரிசர்யமாணசரணநளிநயுகளனாய் நிற்கச்செய்தேயும் 'సదాకాంక్షంతే' 'ஸதா காங்க்ஷமேத' (ஙஙக) என்கிறபடியே உண்டதுருக்காட்டாதே தேசாந்தரகதனானபுத்ரனிடத்தில் பித்ருஹ்ருதயம் கிடக்குமாப்போலே ஸம்ஸாரிசேதநர்பக்கலிலே திருவுள்ளம் குடிபோய் "అనుగ్రహాయలోకానాం మాస్థితోండమహాప్రభుః । క్షీరోదమండలంభానౌ ఉపేంద్రశ్శతధాదివి॥" "அநுக்ரஹாயலோகாநா மாஸ்த்திதோண்டம்மஹாப்ரபுஃ । க்ஷீரோதமண்டலம்பாநௌ உபேந்த்ரஶ்சததாதிவி॥" (ஙஙஉ) என்றும், "అవతారసహస్రాణికల్పేకల్పేకరోమ్యహం" "அவதாரஸஹஸ்ராணிகல்பேகல்பேகரோம்யஹம்" (ஙஙங) என்றும், "పూజానామాకరం పార్థపునరర్చాత్మనాభువి" "பூஜாநாமாகரம் பார்த்தபுநரர்ச்சாத்மநாபுவி" (ஙஙச) என்றும், "பின்னானார்வணங்குஞ்சோதி" என்றும் சொல்லுகிறபடியே ஸகல சேதநோஜ்ஜிஜீவிஷையாலே பர வ்யூஹ விபவாந்தரங்களில் அத்யந்தஸுலபனாய், அபராதஸஹனாய், ஆபிரூப்யமூலகந்தமான அர்ச்சாவதாரரூபியாய், சதுர்முகே க்ஷ்வாகு ப்ராப்தி தஶரதநந்தந விபீஷண தர்மவர்ம தபஃபலபூத ஸ்ரீரங்கேசரூபேண அவதரித்தருளி, "ఆద్యంస్వయంవ్యక్తమిదం విమానంరంగసంజ్ఞికం" "ஆத்யம்ஸ்வயம்வ்யக்தமிதம் விமாநம் ரங்கஸம்ஜ்ஞிகம்" (ஙஙரு) என்றும், "செங்கயல்பாய் நீர்திருவரங்கம்" என்றும், "குயில்கொள்பொழில்சூழ் திருவரங்கம்" என்றும், "அற்றபத்தர்சுற்றிவாழு மந்தணீரரங்கமே" என்றுஞ்சொல்லுகிறபடியே பகவதபிமதாஷ்டோத்தர ஶதஸ்தாநஶ்ரேஷ்டதமமாய் அபிஹ்ருத்யமானகோயிலிலே எழுந்தருளியிருக்கும் தேவரீர், இவ்விஶேஷோத்ஸவத்தில் திருமஞ்சநங்கண்டருளாநிற்கிற நிலை இங்ஙனே விண்ணப்பஞ்செய்யலாயிராநின்றது;

அது எங்ஙனே? என்னில்; ("த்வம்மே") இத்யாதி. 'ఏకోహవై నారాయణఆసీత్" "ஏகோஹவைநாராயணஆஸீத்" (ஙஙசா) என்றும், 'ఏకఏవాభవత్తత్రదేవోనారాయణఃప్రభుః" "ஏகஏவாபவத்தத்ரதேவோநாராயணஃப்ரபுஃ" (ஙஙஎ) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸகலஜகத்காரணபூதனான எனக்கு "மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து" என்கிறபடியே ஜந்மபரம்பரைகளிலே தோள்மாறி நித்யஸம்ஸாரியாய்ப் போந்த நீ ஶேஷபூதனென்று ஜீவனைக்குறித்து தேவரீரருளிச்செய்ய. ("அஹம்மே") தேஹாத்மாபிமாநியான நான் "ఈశ్వరోహమహంభోగీ" 'ஈஶ்வரோஹமஹம்போகீ" (ஙஙஅ) என்றும், "யானேயென்றனதே" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்வதந்த்ராத்மாபிமாநியான னக்கு ஶேஷபூதனென்று ஜீவன்சொல்ல. ("குதஸ்தத்") அது எதி

எ.—ருலேயென்ன. ("ததபிருதகு:") தேவரீர் அருளிச்செய்தது எதிரு
லே என்ன. (" இதம் வேதமூலப்ரமாணாத்") "వాచావిరూపనిత్యయా"
"வாசாவிரூபநித்யயா"(௬௬௬) என்றும், "అనాదిర్నిధనాహ్యేషా" "அநாதி
நிதநாஹ்யேஷா" (௬௭௦)என்றும், "சுடர்மிகு சுருதியுள்"என்றும் நித்
யாபௌருஷேயமான வேதரூபவிகிதமுண்டாயிருக்கையாலே என்ன,
அதில்சொல்லுகிறதென்னென்னில்; "పతింవిశ్వస్యాత్మేశ్వరం" "பதிம்விஶ்வ
ஸ்யாத்மேஶ்வரம்" (௬௭௧) என்றும், "తమీశ్వరాణాంపరమంమహేశ్వరంతందైవ
తానాంపరమంచదైవతం" "தமீஶ்வராணாம்பரமம் மஹேஶ்வரம்தம்தைவதா
நாம்பரமஞ்சதைவதம்" (௬௭௨) என்றும், "క్షరాత్మానావీశతేదేవఏకః" "க்ஷ
ராத்மாநாவீஶதேதேவஏக:"என்றும், "ప్రధానక్షేత్రజ్ఞపతిర్గుణేశః" "ப்ரதாந
க்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ:" (௬௭௩)என்றும், "భోక్తాభోగ్యంప్రేరితారంచమ
త్వా" "போக்தாபோக்யம்ப்ரேரிதாரஞ்சமத்வா"(௬௭௪)என்றும், "నిత్యోని
త్యానాంచేతనశ్చేతనానాం" "நித்யோநித்யாநாம்சேதநம்சேதநாநாம்"(௬௭௫)
என்றும், "అంతఃప్రవిష్టశ్శాస్తాజనానాంసర్వాత్మా" "அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜ
நாநாம்ஸர்வாத்மா"(௬௭௬)என்றும், "యస్యాత్మాశరీరంయస్యపృథివీశరీరం" "ய
ஸ்யாத்மாஶரீரம்,யஸ்யப்ருதிவீஶரீரம்"(௬௭௭)என்றும்இப்படி உன்னை
எனக்கு ஶேஷபூதனாகச்சொல்லுகையாலே என்றான். (" ஏதச்சாநா
தி ஸித்தாதநுபவவிபவாத்") அநாத்யநுபவம் என்னதன்றோ என்
றான். (" தர்ஹி ஸாக்ரோஶ ஏவ") ஆனால் அதுக்கு ஆக்ஷேபமுண்டு
காண் என்றான். (" க்வாக்ரோஶ: கஸ்ய") ஆர் எங்கே ஆக்ஷேபனை
பண்ணிநார் ? என்ன. ("கீதாதிஷுமமவிதித:") கீதாதிகளிலே 'நாம்
ஆக்ஷேபனைபண்ணினோம்' என்ன. ஆக்ஷேபநாப்ரகாரமென்னென்றான்.
" ద్వావిమౌపురుషౌలోకేక్షరశ్చాక్షరఏవచ। క్షరస్సర్వాణిభూతాని కూటస్థోక్షరఉచ్యతే॥
ఉత్తమః పురుషస్త్వన్యః పరమాత్మేత్యుదాహృతః। యోలోకత్రయమావిశ్యబిభర్త్యవ్యయ
ఈశ్వరః॥" " த்வாவிமௌபுருஷௌலோகேக்ஷரஶ்சாக்ஷரஏவச | க்ஷர
ஸ்ஸர்வாணிபூதாநி கூடஸ்தோக்ஷர உச்யதே|| உத்தம:புருஷஸ்த்வ
ந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: | யோலோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய
ஈஶ்வர:||" (௬௭௮)என்று காணென்றான். (" கோத்ர ஸாக்ஷீ") அது
க்கு ஸாக்ஷியார் ? என்ன. ("ஸுதீஸ்யாத்") ஜ்ஞாநீ ஸாக்ஷீ என்றான்.
(" ஹந்தத்வத்பக்ஷபாதீஸ:") அல்லனவோ ? " ప్రియోహిజ్ఞానినోత్యర్థ
మహంసచమమప్రియః" " ப்ரியோஹிஜ்ஞாநி நோத்யர்த்தமஹம்ஸசமம
ப்ரிய:" (௬௭௯) என்கிறபடியே தேவரீருக்கு பக்ஷபாதியாகையாலே
' கூடஸாக்ஷீ' யென்ன. (" இதிந்ஶலஹோ") இப்படி தேவரீரோடே
சேதநனவன் விவாதம்பண்ணுகிறவளவில.

மூ.—யோக்யதையுங்கூட அழியும்.

மூ.—அஉ. இத்தால்விரோதியைக்கழிக்கிறது.

மூ.—அரு. விரோதிதான் மூன்று.

---

வ்யா.—மீட்கைக்கு (யோக்யதையுங்கூட) இல்லையாய்விடுமென்கை.

அஉ.— இந்நமஸ்ஸால்செய்கிற அம்ஸந்தானேதென்ன அருளிச்செய்கிறார்

(இத்தால் விரோதியைக்கழிக்கிறது) என்று.

அரு.—அதுதான் ஒன்றோ? பலவோ? என்ன அருளிச்செய்கிறார் (விரோதிதான்மூன்று) என்று.

---

எ.—("மர்க்யமத்யஸ்தவத்த்வம்") அவனாலே அவித்திபண்ணப்போகாதபடி யத்நம்பண்ண இருக்கிறாப்போலே இராநின்றது; "ప్రమాణంకర్తుముద్యుక్తో మర్క్యమధ్యస్థతారితః" "ப்ரமாணம்கர்த்துமுத்யுக்தோ மர்க்யமத்யஸ்த்த்தாரிதः" (கூஅ0).

இத்தாலே க்ரூரமான அந்யஶேஷத்வத்திலும் ஸ்வஶேஷத்வம் அதிக்ரூரம் என்றுகருத்து. இவ்வர்த்தம் அதிலேஸ்பஷ்டம்.

[பிறர்க்குரியனானவன்று] – (அந்யஶேஷபூதனானவன்று), [தன்னைவலக்ஷண்யத்தைக்காட்டி] – (அந்யரில்காட்டில்) ஸர்வேஶ்வரனான (தனக்குண்டான ஸர்வகாரணத்வஸர்வரக்ஷகத்வ ஸர்வஶேஷித்வாதியான) [வைலக்ஷண்யத்தைக்காட்டி], [மீட்கலாம்] – (அந்நிலையில் நின்றும்) [மீட்கலாம்]; [தனக்கென்னுமன்று] – சேதநன் 'நான் எனக்குரியன்' என்றிருக்குமன்று, [யோக்யதையுங்கூட அழியும்] – (மீட்கைக்கு) [யோக்யதையுங்கூட] (இல்லையாய்விடும்) என்றுமூலார்த்தம்.

அஉ.—மேலுக்கவதாரிகை (இந்நமஸ்ஸால்) என்றுதுடங்கி.

அரு.— மேலுக்கவதாரிகை (அதுதான்) இத்யாதி.

---

தொ.—அஉ.— மேலுக்கவதாரிகை (இந்நமஸ்ஸால்) இத்யாதி.

(இந்நமஸ்ஸால்) என்றது – ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவர்த்தகமான (இந்நமஸ்ஸால்) என்றபடி. (செய்கிற அம்ஸந்தான்) என்றது-செய்கிற கார்யந்தானென்றபடி.

அரு.— மேலுக்கவதாரிகை (அதுதான்) இத்யாதி.

மூ.—அ௪. அதாவது - ஸ்வரூபவிரோதியும், உபாய
விரோதியும், ப்ராப்யவிரோதியும்.

---

வ்யா.—அ௪.— அம்மூன்றுந்தானேதென்ன அருளிச்செய்கிறார் (அதாவது - ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்ய விரோதியும்) என்று. இத்தால் ப்ரதமபதத்திற்சொன்ன ஸ்வரூபத்துக்கு விரோதியும், இப்பதத்திலார்த்தமாக ஸித்திக்கிற உபாயத்துக்கு விரோதியும், உத்தரபதத்திற் சொல்லுகிற ப்ராப்யத்துக்கு விரோதியுமென்கை ;

---

எ.—அ௪.— (ப்ரதமபதத்திற்சொன்ன ஸ்வரூபத்துக்கு) என்றது- ப்ரதமபதமான ப்ரணவத்தில் லுப்தசதுர்த்தியாலசொன்ன பகவச்சேஷத்வமாகிற ஸ்வரூபத்துக்கு என்றபடி. (இப்பதத்தில) என்றது- இந்நம: பதத்தில் என்றபடி. (ஆர்த்தமாகஸித்திக்கிற) என்றது - ம: ந என்று ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ர்த்தியைச் சொல்லுகையாகிற அர்த்தபலத்தாலே ஸித்திக்கிற என்றபடி. (உபாயத்துக்கு) என்றது- பகவானாகிற ஸித்தோபாயத்துக்கு என்றபடி. ( உத்தரபதத்தில் ) என்றது – ஸ்வோத்தரமான நாராயணபதத்திலென்றபடி. (ப்ராப்யத்துக்கு ) என்றது - ப்ராப்யமான பகவதநுபவத்துக்கு என்றபடி ; ப்ராப்யமானகைங்கர்யத்துக்கு என்றுமாம். [ விரோதி ] என்றது - '𑌸𑍍𑌵𑌾𑌭𑍀𑌷𑍍𑌟𑌂-𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣-𑌰𑍁𑌣𑌦𑍍𑌧𑌿-𑌵𑌿𑌰𑍋𑌧𑌿' 'ஸ்வாபீஷ்டம்-விஶேஷேண-ருணத்தி-[விரோதி]' என்று வ்யுத்பத்தியாகக்கடவது ; "𑌸𑍍𑌵𑌾𑌭𑍀𑌷𑍍𑌟𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌨𑌿𑌗𑌦𑍍𑌯𑌤𑍇" "ஸ்வாபீஷ்டம்ப்ரதிபத்நாதிதத்விரோதிநிகத்யதே", ௬௪௧).

---

தொ.—அ௪.— மேலுக்கவதாரிகை (அம் மூன்றுந்தான்) இத்யாதி. உகாரார்த்தத்தை விஶதீகரிக்கிறார் (இத்தால்) இத்யாதி.

(இத்தால்) என்றது - இந்நமஸ்ஸால் என்றபடி. (ப்ரதமபதத்தில்) என்றது - திருமந்த்ரத்தில் ப்ரதமபதமான ப்ரணவத்திலென்றபடி. (ஸ்வரூபத்துக்கு) என்றது - பகவதநந்யார்ஹஶேஷத்வ (ஸ்வரூபத்துக்கு) என்றபடி. (இப்பதத்தில்) என்றது - நம:பதத்திலென்றபடி. (ஆர்த்தமாகஸித்திக்கிற) என்றது - இப்பதத்துக்கு வாக்யார்த்தமான ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ர்த்தியாகிற அர்த்தபலத்தாலே (ஸித்திக்கிற)வென்றபடி. (உத்தரபதத்தில்) என்றது- நம:பதோத்தரமான நாராயணபதத்திலென்றபடி.

---

பி.—அ௪.— ( உபாயத்துக்கு விரோதியும்) என்கிறவிடத்தில் நமஸ்ஸிலே உபாயத்வம் ஆர்த்தமாக ஸித்திக்கிறபடி யெங்ஙனே ? என்னில் ; கீழ் ப்ரணவத்திலே சதுர்த்தியிலே ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மாவுக்கு த்ருதீயாக்ஷரமான மகாரத்திலே தாதுஸித்தமான ஜ்ஞாத்ர்த்வபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் ஸித்திக்கும் ; அது இந்நமஸ்ஸாலகழிகையாலே பாரதந்த்ர்யம்ஸித்திக்கும் ; பாரதந்த்ர்யமாவது - "𑌤𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌸𑌦𑍃𑌶𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍" " தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்று அவன்ரக்ஷிக்கும்போது காண்கிறோம் என்று அத்தலையிலே பரந்யாஸம்பண்ணியிருக்குமதாகையாலே 'அவனே உபாயம்' என்னுமிடம் ஸித்கம்.

வ்யா.—இந்நமஸ்ஸுதான் காகாக்ஷிந்யாயத்தாலே பூர்வோத்தரபதங்களிற் சொல்லுகிற ஸ்வரூபப்ராப்யங்களினுடைய விரோதிகளைக் கழிக்கக்கடவதாயிறே யிருப்பது.

---

எ.—அதுதன்னை விவரித்தருளுகிறார் (இந்நமஸ்ஸுதான்) என்று துடங்கி.

(காகாக்ஷிந்யாய) மாவது - பிராட்டிவிஷயத்திலே அபராதத்தைப்பண்ணின காகத்தைக்குறித்து "పరిద్యూనంవిషణ్ణంచ సతమాయాంతమబ్రవీత్ । మోఘంకర్తుంనశక్యంహి బ్రాహ్మమస్త్రంతదుచ్యతాం॥ తత స్తస్యాక్షికాకస్యహినస్తిస్మసదక్షిణం।" "பரித்யூநம்விஷண்ணம்சஸதமாயாந்தமப்ரவீத் । மோகம்கர்த்தும்நஸக்யம்ஹிப்ராஹ்மமஸ்த்ரம்ததுச்யதாம்॥ ததஸ்தஸ்யாக்ஷிகாகஸ்யஹிநஸ்திஸ்மஸதக்ஷிணம் ।" (சு அஉ) என்று வலக்கண்ணினுடைய தாரகத்தைப் போக்குகையாலே இடக்கண்தாரகமே வலக்கண்ணிலும் ப்ரவேசிப்பித்து இரண்டிடத்திலும் பார்க்குமாப்போலே இரண்டிடத்திலும் அந்வயிக்கை. அஷ்டச்லோக்யாம "మంత్రబ్రహ్మణిమధ్యమేననమసాపుంసస్స్వరూపంగతిర్గమ్యంశిక్షితమీక్షితేనపురతః పశ్చాదపిస్థానతః । స్వాతంత్ర్యంనిజరక్షణం సముచితావృత్తిశ్చనాన్యోచితాతస్యైవేతిహరేర్వివిచ్యకథితం స్వస్యాపి నార్హం తతః॥" "மந்த்ரப்ராஹ்மணிமத்யமேந நமஸாபும்ஸஸ்ஸ்வரூபம் கதிர்கம்யம்சிக்ஷிதமீக்ஷிதேநபுரதః பச்சாதபிஸ்த்தாநதः । ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதாவ்ருத்திச்சநாந்யோசிதாதஸ்யைவேதிஹரேர் விவிச்யகதிதம்ஸ்வஸ்யாபிநார்ஹம்ததः॥" (சு அந),என்னக்கடவதிறே.

---

தா.—(இந்நமஸ்ஸுதான்) ஏகதேசஸ்த்தமாயிருக்க, ஸ்வரூபாதி விரோதித்ரயத்தையும் கழிக்கிறபடிதான் எங்ஙனே? என்ன அருளிச்செய்கிறார்

(இந்நமஸ்ஸுதான்) இத்யாதி. (காகாக்ஷிந்யாயத்தாலே) என்றது-காகத்துக்கு நேத்ரகோளக மொன்றாயிருக்கச்செய்தேயும அதுதானே இரண்டுபார்ச்வத்திலும் ஸஞ்சரிக்குமாப்போலே மத்யஸ்த்தமானபதம் பூர்வோத்தரபதங்களோடே அந்வயிக்கை. (பூர்வோத்தரபதங்களில்) என்றது - தனக்குபூர்வமான ப்ரணவத்திலும், உத்தரபதமான நாராயணபதத்திலுமென்றபடி.

---

பி.—இநதபதத்தில் ஆர்த்தமாகச்சொன்ன உபாயவிரோதியை இந்நமஸ்ஸு கழிக்கிறதொழிய ஸ்வரூபப்ராப்யவிரோதிகளைக் கழிக்கிறபடியென்னென்ன அருளிச்செய்கிறார்

(இந்நமஸ்ஸுதான் காகாக்ஷிந்யாயத்தாலே) என்று துடங்கி.

மூ.—அரு. ஸ்வரூபவிரோதிகழிகையாவது- "யானேநீயென்னுடைமையு நீயே" என்றிருக்கை;

வ்யா.—அரு.—இவ்விரோதித்ரயமும் கழிகையாவதுதான் ஏதென்ன? அதுதன்னை அடைவே அருளிச்செய்கிறார் மேல்மூன்றுவாக்யத்தாலே.

(ஸ்வரூபவிரோதி) இத்யாதி. அதாவது-ஸ்வரூபத்துக்குவிரோதி, "யானேயென்றனதே" என்றிருக்கையாகையாலே, அது கழிகையாவது "யானே நீயென்னுடைமையும்நீயே" என்று ஆத்மாத்மீயங்களிரண்டும் அத்தலைக்குப்ரகாரதயா ஶேஷமென்றிருக்கையென்கை.

எ.—அரு.— மேலுக்கவதாரிகை (இவ்விரோதித்ரயமும்) இத்யாதி.

திருவாய்மொழி-உ-பத்து-௯-திரு-௯-பாட்டு.

["யானேயென்னையறியகிலாதே
யானேயென்றனதேயென்றிருந்தேன்
யானேநீயென்னுடைமையுநீயே
வானேயேத்துமெம்வானவரேறே."]

[" அவ.—"மிக்கார்வேதவிமலர் விழுங்கும்" என்று நித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணுகிறபடியை அநுஸந்தித்தார்; அவர்களோடொத்தப்ராப்தி தமக்குண்டாயிருக்க, இழந்திருக்கிறபடியையும் அநுஸந்தித்து அநர்த்தப்பட்டேனென்கிறார்.

தா.—அரு.—மேலுக்கவதாரிகை (இவ்விரோதித்ரயமும்) இத்யாதி.

(அதுதன்னை) என்றது – அவ்விரோதித்ரய நிவ்ருத்தியையென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (ஸ்வரூபத்துக்கு) என்றது-ப்ரணவோக்தமான அநந்யார்ஹ ஶேஷத்வமாகிற ஸ்வரூபஜ்ஞானத்துக்கென்றபடி. ("யானேயென்றனதே" என்றிருக்கையாலே) என்றது – யான் – யானேயென்றிருக்கையும், இது என்றனதே யென்றிருக்கையுமாகையாலேயென்றபடி. (அது) என்றது – அவ்விரண்டாகாரமுமென்றபடி. ["யானே நீயென்னுடைமையு நீயே"] என்றது - யானும் நீயே, என்னுடைமையும் நீயேயென்றபடி. (ஆத்மாத்மீயங்கள்) என்றது – தானும் தன்னுடைமையுமென்றபடி. (அத்தலைக்கு ப்ரகாரதயாஶேஷமென்றிருக்கை) என்றது – "[illegible]" "தத் ஸர்வம்வைஹரேஸ்தநு:" என்கிறபடியே சேதநாசேதநங்களிரண்டும் ஈஶ்வரனுக்கு ஶரீரதயா ஶேஷமாகையாலே தானும் தன்னுடைமையும் அவனுக்கு ஶரீரதயா ஶேஷமென்று அத்யவஸித்திருக்கையென்றபடி.

எ.—வ்யா.—(யானே) என்னிறவு பகவத்க்ருதமல்ல, அவன் எதிர்சூழல் புக்குத்திரியாநிற்க, நானேநிடீர் விநாசத்தைச் சூழ்த்துக்கொண்டே னென்கிறார். (என்னையறியகிலாதே) ராஜபுத்ரன் வேடன்கையிலே அகப்பட்டுத் தன்னைவேடனாக ப்ரதிபத்திபண்ணுமாப்போலே, ஸர்வே ச்வரனுக்கு ப்ரகாரபூதனான என்னையறியாதே, (யானேயென்றனதே யென்றிருந்தேன்) 'அவனும் அவனுடைமையும்' என்றிருக்கை த விர்ந்து, 'நானும் என்னுடைமையும்' என்று வகுத்துக்கொண்டுபோந் தேன். (இருந்தேன்) இப்படிநெடுநாள் போருகிறவிடத்தில் ஒருநா ள் அநுதாபம் பிறக்கவுமாமிறே! அதின்றிக்கே க்ருதக்ருத்யனாய் நிர்ப்பர னாயிருந்தேன்; [தீவினையேன்வாளாவிருந்தேன்] என்னுமாப்போலே- "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (௬௮௪) என்கைக்கு ப்ராப்தியுண்டாயிருக்க, ஒருகார்யமில்லாதாரைப்போலே கையொழிந் திருந்தேன்; "முடிந்தேன்" என்றாற்போலே யிருக்கிறதிறே! ஒருநா ளையிழவேபோந்திருக்க, அநாதிகால மிழந்துபோந்தேன்.

அங்ஙனன்றே அர்த்ததத்வமென்ன (யானேநீ) "அஹம்மநுரபவம் ஸூர்யச்ச" "அஹம் மநுரபவம்ஸூர்யச்ச" (௬௮௫) என்னுநிற்பர்களா யிற்று முக்தர்; "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" "மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" (௬௮௬) என்னுநிற்பர் ஸம்ஸாரத்தில் தெளிவுடையார்; "அஹம்ப்ரஹ்மாஸ்மி" "அஹம் ப்ரஹ்மாஸ்மி" "நான்ராஜபுத்ரன்" என்னுமாப்போலே, "நான்ப்ர ஹ்மம்" என்னலாம்படியிறேஸம்பந்தமிருக்கும்படி. "ஸ வாஸுதேவ:" "ஸ வாஸுதேவ:" என்றது-வாஸுதேவ சரீரமென்றபடியிறே! (என்னுடை மையும் நீயே) "யஸ்யைதேதஸ்யதத்தநம்" "யஸ்யைதேதஸ்யதத்தநம்" (௬௮௭) என்னுமாப்போலே. இதெங்கேபரிமாறக்கண்டு சொல்லும்வார்த்தை யென்ன; நித்யஸூரிகளுடைய இப்படியன்றே உன்னையநுபவிப்பது. "மஞ்சா:க்ரோசந்தி" "மஞ்சா:க்ரோசந்தி" (௬௮௮) என்கிறபடியே (வானே யேத்தும்) என்கிறது. (எம்வானவரேறே) அவர்கள்தங்கள் சேஷத்வாநு ரூபமாக அடிமைசெய்யாநிற்க, இவனும் தன்சேஷித்வத்தால்வந்த உத் கர்ஷந்தோற்ற இருக்குமிருப்பு. (எம்) என்று-எனக்கும் அவர்களோ டொத்தப்ராப்தியுண்டாயிருக்க, இழந்தநர்த்தப்பட்டே னென்கிறார்

மூ.—உபாயவிரோதிகழிகையாவது —"களைவாய்துன்பங் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை ;

---

வ்யா.—(உபாயவிரோதி)இத்யாதி. அதாவது-உபாயத்துக்குவிரோதி, ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாகையாலே அதுகழியையாவது "களைவாய்து ன்பங் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்று துஃகத்தைப் போக்குவாய், போக்காதொழிவாய் வேறொரு ரக்ஷகவஸ்துவையுடை யேனல்லேன் என்றிருக்கை என்கை.

---

எ.— திருவாய்மொழி-௫-பத்து-அ-திரு-அ-பாட்டு.

["களைவாய்துன்பங்களையாதொழிவாய்களைகண்மற்றிலேன்
வளைவாய்நேமிப்படையாய்குடந்தைக்கிடந்தமாமாயா
தளராவுடலமெனதாவிசரிந்துபோம்போ
திளையாதுனதாளொருங்கப்பிடித்துப்போதவிசைநீயே"].

["அவ.—"தரியேன்" என்றபின்பும் முகங்கிடையாமையாலே கலங்கி அநுபவம்பெற்றிலேனேயாகிலும், 'உன்திருவடிகளே தஞ்சம்' என்று பிறந்தவிச்வாஸம் குலைகிறதோ என்றஞ்சாநின்றேன்; அதுகுலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார்.

வ்யா.—(களைவாய்துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்) நீ உன்காரியம் செய்யிலும்செய், தவிரிலும் தவிர்; நான் குறைவற்றேன்; '𑌤𑍍𑌵𑌮𑍇𑌵𑍋𑌪𑌾𑌯𑌭𑍂𑌤𑍋 𑌮𑍇 𑌭𑌵' 'த்வமேவோபாயபூதோமே பவ' என்கிற அம்சத்தில்குறையில்லை; "𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿" "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (கூ அகூ)என்னு மூன் கூறுசெய் யிலும் செய், தவிரிலும்தவிர்.

அப்படி செய்கிறோம் என்னுமையாலே என்னுடையரக்ஷணத் துக்கன்றோ இக்கிடையென்கிறார் மேல். (வளைவாய் நேமிப்படை யாய்) பார்த்தவிடமெங்கும் வாயானதிருவாழியை ஆயுதமாக உடை யவனே! களையாதொழிகைக்குச் சொல்லலாம் கண்ணழிவுண்டோ? உன்கையிலாயுதத்துக்குவாயல்லாதவிடமுண்டோ? அது வாய்படைத்த ப்ரயோஜநம் பெறவேண்டாவோ? பரிகரமில்லை என்னப்போமோ? 'கைகழிந்துபோயிற்று, இனிப் படைதிரட்டவேணும்' என்னும் கண்ணழிவுண்டோ?

---

தொ.—(உபாயத்துக்கு) என்றது—உபாயாத்யவஸாயத்துக் கென்றபடி. ["களைகண்"] என்றது - பிடிப்பானஇடமாய், ரக்ஷகமென்கிறது.

மூ.—ப்ராப்யவிரோதி கழிகையாவது - “மற்றைநங் காமங்கள்மாற்று” என்றிருக்கை.

வ்யா.—(ப்ராப்யவிரோதி)இத்யாதி.அதாவது-ப்ராப்யத்துக்குவிரோதி, ஸ்வப்ரயோஜநபுத்தியாகையாலே அதுகழிகையாவது, “மற்றைநங் காமங்கள்மாற்று” என்று உன் உகப்புக்குப்புறம்பான எங்களுடைய ஆசையைப்போக்கு (என்றிருக்கை) என்கை.

எ.—(நேமிப்படையாய் - களைகண மற்றிலேன்) அப்படியிருப்பது என் கையிலோராயுதமுண்டோ? பிறர்கையிலோராயுதமுண்டோ? உன்கையிலாயுதமில்லையோ? (குடந்தைக்கிடந்த மாமாயா) நீ “மாம்” என்றதுக்குப் பின்பு இவ்வருகுள்ள ஏற்றமெல்லாம் பாராய். இத்தால்—அவதாரதசையிலும அர்ச்சாவதாரம் ஸுலபமென்றபடி. திருக்குடந்தையிலேவந்து ஆஸ்சர்யமான அழகோடே கண்வளர்ந்தருளுகிறது ஆஸ்ரிதர்க்காகவன்றோ! ஶக்திவைகல்யம் சொல்லவொண்ணாது, ‘சுலபனன்று’ எனவொண்ணாது, ‘ருச்யுத்பாதகனல்லன்’ என்னவொண்ணாது. (தளராவுடலம) ஶரீரமானது கட்டுக்குலையா. தளரா — தளர. (எனதாவிசரிந்து போம்போது) என் ப்ராணனானது முடிந்துபோமளவாயிற்றுக்கிடாய். (போம்போது) போம்போதாயிற்று. இதுதான் அந்திமஸ்ம்ருதியாலோவென்னில்; “[illegible]” “காஷ்டபாஷாணஸந்நிபம்” (௬௨0) என்றும், “[illegible]” “அஹம்ஸ்மராமி” (௬௨௧) என்றும் சொல்லுகிறது இவரறியாரன்றே! இவர்தாமவ்வதிகாரிகளுமன்றே! விஸ்லேஷவ்யஸநத்தாலே ஶரீரமும்தளர்ந்து ப்ராணனும் ஶரீரத்தைவிட்டுப்போம் தசையாயிற்றிப்போதென்கை. (இளையாது) இத்யாதி. அபேக்ஷிதம் பெற்றிலேனேயாகிலும், என்னபேக்ஷிதம் ஸித்திக்கும்படி உன் திருவடிகளைப் பற்றினபற்று நெகிழாமற்பண்ணியருளவேணும். அநுபவம் கிடையாமையாலே, ‘அதுக்கடியான உபாயாத்யவஸாயமும் குலைகிறதோ’ என்றஞ்சி இது குலையாமல் பார்த்தருளவேணுமென்கிறார். ஒருங்க - ஒருபடிப்பட”] ..........................*

திருப்பாவை - உ௯ - பாட்டு.

[“சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்துன்
பொற்றாமரையடியேபோற்றும்பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணுங்குலத்திற்பிறந்தநீ
குற்றேவலெங்களைக்கொள்ளாமற்போகா
திற்றைப்பறைகொள்வானன்றுகாண்கோவிந்தா
எற்றைக்குமேழேழ்பிறவிக்குமுன்றன்னோ
டுற்றோமேயாவோமுனக்கேநாமாட்செய்வோம்
மற்றைநங்காமங்கள்மாற்றேலோரெம்பாவாய்”].

தொ.—[“மற்றைநங்காமங்கள்” ] என்றது - உன்னுடைய அபிமாநத்துக்கு வேறுபட்ட நம்முடைய [காமங்களை] யென்றபடி. [இருக்கை] என்றது-ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கையென்றபடி.

எ.—[“அவ.—இருபத்தொன்பதாம்பாட்டு. “நமக்கே பறைதருவான்” என்று ஸங்க்ரஹேண முதல் சொன்ன ப்ராப்யப்ராபகங்கள் இரண்டையும் இந்த இரண்டுபாட்டாலும் விவரிக்கிறார்களாய், பலந்தருகிற ப்ராபகத்தை நிர்ணயித்து ஸ்வீகரித்தார்கள் கீழ்ப்பாட்டில்; அதில் “பறை” என்று சொன்ன ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்து ப்ரார்த்திக்கிறார்கள் இப்பாட்டில். “பறை” என்று ப்ராப்யத்தை முற்படச்சொல்லி, “தருவான்” என்று கொண்டு ஸாதநரூபத்தை அநந்தரம் சொல்லிற்று ப்ராப்யருசியடியாக ப்ராபகாந்வேஷணம் பண்ணவேண்டுகையாலே. அவ்விடத்தில், ப்ராப்யஸித்தியில்ப்ராபகஸ்வீகார ஸாபேக்ஷதை உண்டாகையாலே உபாயஸ்வீகாரம்பண்ணி பலப்ரார்த்தநம் பண்ணுகிறது; இங்கு, “நமக்கே” என்கிற அதிகாரிஸ்வரூபம் இரண்டு பாட்டாலும் விஶதமாகிறது. அநந்யபோக்யத்வமும் அநந்யோபாயத்வமும் அநந்யார்ஹத்வமும் ஸ்வரூபமிறே! “செல்வச்சிறுமீர்காள்” “வையத்து வாழ்வீர்காள்நாமும்” “நாங்கள் நம்பாவைக்கு” “நாங்களும் மார்கழி நீராட” “எம்மை நீராட்டு” “யாம் வந்தோம்” “யாம்பெறு சம்மாநம்” “புண்ணியம் நாமுடையோம்” நாங்களென்பது, எங்களுடைய என்பதாய்ப் பாட்டுத்தோறும். தங்களையுறைத்துக்காட்டிற்று ஸ்வரூபத்திலும் உபாயத்திலும் பலத்திலும் தாஙகளிருக்குமிருப்பை வெளியிடாநின்று கொண்டு “நமக்கே” என்றபதத்தைவிவரித்தபடியிறே! “தூயோமாய்வந்து நாம்” என்றும், “தூயோமாய்வந்தோம்” என்றும் இரண்டு ஶங்கையுண்டிறே கீழ்ச்சொல்லிற்று; அதில் ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணினவர்களுக்கு ஸாத்யோபாயத்தில் ருசிவாஸனையாதல், ஸ்வீகாரத்தில் உபாயபுத்தியாதல், ஸ்பர்ஶிக்கில் ஶவஸ்பர்ஶம் போலேயும் நீசஸ்பர்ஶம்போலேயும் இருப்பதொன்றிறே! அவையிரண்டுமாஶங்கியுமில்லையென்னுமிடம் கீழ்ப்பாட்டிலே வெளியிட்டார்கள்; ஸாத்யத்திலும் வந்தால் ப்ரயோஜநாந்தர ஸங்கம் நடப்புதல், அகவாயிலே போக்த்ருத்வபுத்தி நடப்புதல் செய்தால் விஷபோஜநம்போலேயும் உச்சிஷ்டாஶநம்போலேயும் வருவதொரு அஶங்கியுண்டிறே! அந்தளச் சிலறுத்து போகஶங்கி பண்ணுகிறார்கள் இப்பாட்டில். “ஆசற்றார்” “மாசற்றார்” என்கிறது-இரண்டு தோஷமும்அற்றவர்களையிறே! “𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 - 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌾𑌂𑌶𑍍𑌚” “ஸர்வதர்மாந்—ஸர்வகாமாம்ஶ்ச” “தொழுமின் தூயமனத்தராய்” உபாயபரிக்ரஹத்தினுடைய அநந்தரத்திலே ருசிகார்யமாய் வருவதொருபேற்றில் த்வரையும், ஸாத்யத்திலே ஸாதநபுத்தி நடக்கும்படியானகலக்கமும், ஆர்த்தியை ஆவிஷ்கரித்து வளைக்கையும்,

ஏ.—ப்ராப்யாந்தர ஸ்ரத்தைகுலேகையும், புருஷார்த்தத்தில் அவிச்சி ந்நமான பாரிப்பும், ப்ராப்யம் ஸபலமாம்படியான அபேக்ஷையும் இவைஆறும் பரிக்ரஹித்த உபாயபலமாய் விளையுமவையிறே! காலமே கண்ணுறங்காதேவந்து துவளும்படியான த்வரையும், போற்றுதற்குப் பொருள் தேடும்படியான கலக்கமும், தங்கள வடிவைக்காட்டி வளைக் கும்படியான ஆர்த்தியும், நோன்பை வ்யாஜமாக்கி வேண்டினவற்றி லபேக்ஷை அற்றபடியும், பரிபூர்ணமாக கைங்கர்யத்தை அபேக்ஷிக்கி றபடியையும், அதில் களையறுத்துத்தரவேணுமென்று சொல்லும்படி ப்ரார்த்திக்கிறபடியையும் காட்டி "நாமுடையோம்" என்ற புண்யத்தி னுடைய பலங்களை வெளியிடுகிறார்கள். கீழ்ச்சொன்ன உபாயத்துக்கு வேறொன்றை பலமாக்குகையாவது-மாணிக்கத்தையிட்டு தவிடு கொ ள்வாரைப்போலேயிறே! அந்த உபாயத்துக்கு உபாயாந்தர நிவ்ர்த்தி போலே ஸகலபலஸாதாரணமென்று விரோதியான பலத்தை அபே க்ஷிக்கலாகாதிறே! ஸ்வரூபாநுரூபமான பலத்தில் தங்களுடைய அபிநி வேஸத்தைஅறிவிக்கவேணுமென்று ஸ்ருதிஸதஸிரஸ்ஸித்தமாய், கரு த்தறியும் மூதுவர் கைப்பட்டுக்கிடக்குமதாய், கருந்தரையில் வாஸ னையாலே அவர்கள் பிறந்தவிடத்தில் அபேக்ஷிக்குமதாய், அவர்க ளோடொத்த ப்ராப்தியை உணர்ந்தவர்கள் பாரிக்குமதாய், பகவ தநந்யார்ஹஸேஷமான வேஷத்துக்கு அத்யந்தமநுரூபமாய், ஈஸ்வ ரனுடைய முகவிகாஸத்துக்கு ஹேதுவாயிருந்துள்ள பரம ப்ராப்யத் தை, ப்ரபந்த நிகமநம்பண்ணுகையாலே, எல்லார்க்கும் தெரியும்படி வெளியிட வேண்டுகையாலே, நாட்டார் இசைகைக்கு நோன்பு என்று ஒன்றை வ்யாஜீகரித்துப் புகுந்தோமித்தனை, எங்களுக்கு உத்தேஸ்யம் உன் திருவடிகளிலே நித்யகைங்கர்யம்என்று ப்ராப்ய நிஷ்கர்ஷம் பண் ணுகிறார்கள். எம்மாவீட்டிலர்த்தத்தோடே தலைக்கட்டுகிறது. எம்மா வீட்டிலே ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்து, ஒழிவில் காலத்திலே ப்ரார்த்தி த்து, அதுதன்னுடைய எல்லைநிலமான பாகவதாநுபவத்தை "நாளும் வாய்க்க" என்று நெடுமாற்கடிமையிலே ப்ரார்த்தித்தார்ஆழ்வார்; அவரிற்காட்டில் இவர்களுக்குள்ளவாசி, "நீராடப்போதுவீர்" "எல் லாரும்போந்தாரோ" என்றுபுருஷார்த்தத்தில் சரமாவதியிலே முதல டியிலே நின்று, அது நிலைநிற்கைக்காக ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணி ஆர்த்திக்கிறார்கள்."ஆவாவென்றாராய்ந்தருள்""எம்மேல்விழியாவோ" என்று பெண்கள், அக்ரூரன் மநோரதித்தாப்போலே மநோரதித்துக் கொண்டு வந்தபடியே, நாமும் பெரிய ஆதரத்தோடே புறப்பட்டி ருந்து, வந்தகாரியங்களைச் சொல்லுங்கோளென்றுகேட்டு, வேண் டுவனவும் கொடுக்க இசைந்து, பறைகொண்டகாலத்துக்குப்பெறும் ஸம்மாநம்பண்ணுவதாகஇசைந்துவந்தகாரியம் தலைக்கட்டிவிட்டோம்,

எ.—வ்யா.— (ஒழிவில்காலமெல்லாம்) முடிவில்லாதகாலமெல்லாம்; அநந்தமானகாலமெல்லாமென்றபடி. "ஒழிவில்காலமெல்லாமென்று—கீழ்கழிந்தகாலத்தையுங்கூட்டி யடிமைசெய்யப்பாரிக்கிறார்" என்றிங்ஙனே அதிப்ராஸங்கம் சொல்லுவாருமுண்டு. அது ஆகிறது - "கீழ்கழிந்தகாலத்தை மீட்கை" என்றொருபொருளில்லையிறே! "[Grantha] [Grantha]" "நோபஜநம்ஸ்மரந்" என்கிறபடியே - கீழ் கழிந்தகாலத்திலிழவு நெஞ்சிற் படாதபடி மறப்பிக்கையேயிறேயுள்ளது; "[Grantha]" "நமேதுஃகம்"(எ அ0) இத்யாதி; ஆகையாலே இனி மேலுள்ளகாலமெல்லாமென்றபடி. (உடனாய்) காலமெல்லாம் வேண்டினவோபாதி தேசாநுபந்தமு மபேக்ஷிதமாயிருக்கிறதுகாணு மிவர்க்கு. இளையபெருமாள், படைவீட்டிலுமடிமைசெய்து வநவாஸத்திலுமடிமைசெய்தாப்போலே. (மன்னி) ஸர்வேஶ்வரனும் பிராட்டியுமாய்த் திரளையைவிளைத்துக்கொண்டிருந்தாலும், படிக்கம் குத்துவிளக்குப்போலே அவ்வளவிலும் நின்று அந்தரங்கமான வ்ருத்திகளைப்பண்ணவேணும். இத்தால் - ஸர்வாவஸ்த்தைகளையும் நினைக்கிறது. "[Grantha]" "ரமமாணுவநேத்ரயஃ" என்னக்கடவதிறே! இருவருக்குண்டானவநுபவத்திலே மூவரைச்சொல்லுகிறதிறே! அவ்விருவர்க்கும் பரஸ்பரஸம்ஶ்லேஷத்தால்பிறக்கும் ரஸம்அச்சேர்த்தியைக் கண்டவனுக்கும்பிறக்கையாலே. (ஒழிவில்காலம்) இத்யாதி. ஸர்வகாலத்தையும் ஸர்வதேசத்தையும் ஸர்வாவஸ்த்தையையும் நினைக்கிறது. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் இத்திருவாய்மொழி பாடப்புக்கால், "ஒழிவில்காலமெல்லாம், காலமெலலாம், காலமெல்லாம்" என்றிங்ஙனே நெடும்போதெல்லாம்பாடி, மேல்போகமாட்டாதே அவ்வளவிலே தலைக்கட்டிப்போவராம். (வழுவிலாவடிமைசெய்யவேண்டும்) அடிமையிலொன்றுமொருவர்க்கும் கூறுகொடுக்கவொண்ணுதாய்த்து. எல்லாவடிமையும் நான் செய்யவேணும் - இளையபெருமாள், பிரியாதே காட்டிலேயுங்கூடப்போந்துசெய்த வடிமைகளும் செய்யவேணும்; ஸ்ரீபரதாழ்வான், படைவீட்டிலேபிரிந்திருந்து செய்தவடிமைகளும்செய்யவேணும். ஸ்ரீபரதாழ்வானை கைகேயி, "ராஜன்" என்ன, அப்போதந்த ஸ்வாதந்த்ர்யம் பொறுக்கமாட்டாமே படுதலை பட்டாப்போலே "[Grantha]" "விலலாப" (எ அக)என்று கூப்பிட்டானிறே! பாரதந்த்ர்யரஸமறிவார்க்கு "[Grantha]" "ஸ்வாதந்த்ர்யமநர்த்தம்" என்றுதோற்றுமிறே! "[Grantha]" "ஏபிஶ்சஸசிவைஸ்ஸார்த்தம்"(எ அ உ தன்னிற்காட்டிலும் கண்குழிவுடையா ரித்தனைபேருண்டாயிற்று. தன்னோடொத்த ஆற்றாமையுடையாரநேகரைக் கூட்டிக்கொண்டுபோந்தன். எனக்கன்றோ "இவன்தம்பி" என்று ஸ்வாதந்த்ர்யம்பண்ணி அவர்க்கு:

எ.—கண்ணழிக்கலாவது, இவர்களுக்குச் சொல்லிற்றுச்செய்யவேணு மே-இவர்கள் தாங்களே கார்யத்தைவிசாரித்தறுதியிட்டு, 'நீரிப்படிசெய்யும்' என்று அவர்களேவினால் அப்படி செய்யவேண்டிவருமிறே யவர்க்கு. அவருடைய வ்யதிரேகத்தில் தனக்குண்டான ஆற்றாமையை அறிவிக்கப்போகிறானாகில் தனியேபோ யறிவிக்கவுமாமிறே! இவர்களை யெல்லாம் திரட்டிக்கொண்டுபோனதுக்குக் கருத்தென்னென்னில்; நம்மொருவர் முகத்துக் கண்ணீர்கண்டால் பொறுக்கமாட்டாதவர், தம்மைப்பிரிந்தபிரிவு பொறுக்கமாட்டாதே கண்ணுங் கண்ணீருமாயிருப்பாரித்தனைபேரைக்கண்டால் மீளாரோவென்னும் கருத்தாலே. பூசலுக்குப் போவாரைப்போலே யானைகுதிரை யகப்படக்கொண்டு போகிறானிறே! அவற்றுக்கு மவ்வாற்றாமையுண்டாகையாலே. "𑌶𑌿𑌰𑌸𑌾𑌯𑌾𑌚𑌿𑌤𑌃" "ஶிரஸாயாசிதः"(எ அரு)என்பேற்றுக்குத்தாமபேக்ஷித்துத் தருமவர், நானென்றலையாலே யிரந்தால்மறுப்பரோ? "𑌮𑌯𑌾" "மயா" அத்தலை இத்தலையானால்செய்யாதொழிவரோ?"𑌭𑍍𑌰𑌾𑌤𑌾" "ப்ராதா" "𑌭𑌸𑍍𑌮𑌸𑌾𑌤𑍍𑌕𑍁𑌰𑍁𑌤𑌾𑌂𑌶𑌿𑌖𑍀" "பஸ்மஸாத்குருதாம்ஶிகீ"(எ அச)என்னும்படி, தம்பின் பிறந்தவனல்லேனோநான். என்தம்பிமார்க்குதவாத என்னுடைமையை அக்நிக்குவிருந்திட்டேனென்றாரிறே! "𑌯𑌦𑍍𑌵𑌿𑌨𑌾" "யத்விநா" இத்யாதி. "𑌶𑌿𑌷𑍍𑌯𑌸𑍍𑌯" "ஶிஷ்யஸ்ய" ப்ராதாவாகக்கூறுகொண்டு முடிசூடியிருக்குமவனோநான், அசேஷரஹஸ்யமும் தம்மோடேயன்றோ அதிகரித்தது. "𑌦𑌾𑌸𑌸𑍍𑌯" "தாஸஸ்ய" ஶிஷ்யனாய் க்ரயவிக்ரயார்ஹனன்றிக்கேயிருந்தேனோ? ஆனபின்பு நானபேக்ஷித்தகாரியத்தை மறுப்பரோ? இதிறே கைங்கர்யத்தில் சாபலமுடையாரிருக்கும்படி. (வழுவிலாவடிமை) ஓரடிமைகுறையிலும் உண்டறுக்காட்டாதாயிற்றிவர்க்கு. (செய்ய) முன்புமுண்டிறே இக்கைங்கர்யமநோரதம், இப்போதிவ்வளவால்போராது, அநுஷ்டாநபர்யந்தமாகவேணும். (அடிமை செய்யவேண்டும்) கைங்கர்யமநோரதமேபிடித்து உத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்றிவர்க்கு. 'க்ஷுத்ரவிஷயாநுபவம்பண்ணவேணும்' என்றுபுக்கால், இரண்டுதலைக்குமொக்க ரஸமானபோகத்துக்கு ஒருதலையிலே த்ரவ்யத்தைநியமித்து, போககாலம்வருமளவும் லீலையாலேபோதுபோக்கி, போககாலம்வந்தவாறே புறப்படத்தள்ளிவிடுவர்கள்; இனி 'ஸ்வர்க்காநுபவம்பண்ணவேணும்' என்று புக்கால், "𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 𑌪𑌾𑌤𑌭𑍀𑌤𑌸𑍍𑌯 𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑍃𑌤𑌿𑌃" "ஸ்வர்க்கேபிபாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" (எ அகு) என்கிறபடியே; அருகே சிலர் நரகாநுபவம் பண்ணக்காண்கையாலே இருந்தநுபவிக்கிற இதுதானுமுண்டறுக்காட்டாதபடியாயிருக்கும்;

எ.— இனித் தானவ்விருப்புக்கடியான புண்யமானது சாலிசொ டுத்தநீர்போலே க்ஷயித்தவாறே "க்ஷீணே" "த்வம்ஸ" என்று முகம் கீழ்ப்படத்தள்ளுவர்கள்; இப்படி ஸ்வரூபத்துக்கநுரூபமாய் அஹங்காரமமகாரங்களடியாகவரு மிவ்வநுபவங்கள்போலன்றிக்கே, ஸ்வரூபத்தோடே சேர்ந்ததுமாய், அடிமைகொள்ளுகிறவனும் நித் யனாய், அடிமைசெய்கிறவனும் நித்யனாய், காலமும் நித்யமாய், தேசமும் நித்யமாய், ஒருகாலமும் மீளவேண்டாதபடி அபுநராவ் ர்த்தி லக்ஷணமோக்ஷமாய், க்ஷுத்ரவிஷயாநுபவம்போலே துக்க மிஶ்ரமாயிருக்கையன்றிக்கே நிரதிஶயஸுகமாயிருப்பதொன்றிறேயிது. (நாம்) தம்திருவுள்ளத்தையுங்கூட்டி - நாமென்கிறாராதல்; அன் றிக்கே, கேசவன்றமர்க்குப்பின்பு இவர்தாம் தனியரல்லாமையாலே, திருவுள்ளம்போலேயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களையுங் கூட்டிக்கொ ண்டு - நாமென்கிறாராதல். (தெழிகுரல்) இத்யாதி. அடிமைசெய்யக் கோலுகிற இவருடைய பாரிப்பேயன்றிக்கே, அடிமைகொள்ளக்கோ லுகிறவனுடைய பாரிப்பிருக்கிறபடி சொல்லுகிறதுமேல்; இருந்த விடத்திலேயிருந்து மநோரதிக்கிறாரித்தனையிறேயிவர்; அவன்தனக் குக்கலவிருக்கையான கலங்காப்பெருநகரத்தைவிட்டு இவ்வளவும்வர வந்து திருமலையிலேநின்று, தன்னநுஷ்டாநத்தாலே தெரிவிக்கிறா னிறே தன்பாரிப்பை. (தெழிகுரல்) இத்யாதி. கம்பீரமான த்வநியையு டைத்தான அருவியையுடைய. திருவருவியின் த்வநியுங்கூட உபா தேயமாயிருக்கிறதாயிற்றிவர்க்கு, அந்நிலத்திலேயுள்ளதொன்றாகை யாலே. "கைங்கர்யருசியுடையார் அடிமைசெய்யவாருங்கோள்" என் றாற்போலேயிருக்கிறதாயிற்றிவர்க்கு இத்த்வநி. இவர்க்கிந்த திருவரு வியின் த்வநியுங்கூட உத்தேஶ்யமாகச்சொல்லவேணுமோ, "சிலைக்கை வேடர்தெழிப்பராத" என்று அங்குத்தைத் திருவேடர்பறிக்கிறபோ தை ஆரவாரமுமகப்பட உத்தேஶ்யமாயிருக்கச்செய்தே. திருவேங்கட யாத்ரைபோகிறவர்களைப்பறிக்கிற வேடருடைய ஆரவாரமு முத்தேஶ் யமாயிருக்கிறதிறே அந்நிலத்திலுள்ளதாகையாலே. (திருவேங்கடத் தெழில்கொள்சோதி) 'அடிமைகொள்ளுகைக்குப் பாங்கானநிலமிது' என்று அவன்வந்துவர்த்திக்கிற தேஶமாயிற்று. இஶ்ஶரீர ஸம்பந்தம ற்று அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேஶவிஶேஷத்திலே போனால் இவன் செய்யக்கடவ அடிமையை இந்நிலத்திலிவனுக்குச் செய்யலாம் படி அவன்வந்து வர்த்திக்கிறதேஶமிறே! (எழில்கொள்சோதி) அஸ ந்நிஹிதனேயாகிலும் மேல்விழவேண்டும்படியாயிற்று வடிவழகிருப் பது. (வேங்கடத்தெழில்கொள்சோதி) வானோர்சோதியையும் நீலா ழிச்சோதியையும் வ்யாவர்த்திக்கிறது;

மூ.—௧0௬. "கண்ணாரக்கண்டுகழிவதோர்காதலுற்றார்க்குமுண் டோகண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே

வ்யா.—௧0௬.—இனி, இந்த கைங்கர்ய ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கைக் குறுப்பான ப்ராப்யருசியுடையார்படியை அருளிச்செய்கிறார் ("கண்ணாரக்கண்டு") என்று தொடங்கி. அதாவது-"இமையோர்கள் குழாங்கொழுவதுஞ் சூழ்வதுஞ் செய்தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோகண்கள் துஞ்சுதல்" என்று நித்ய ஸூரிகளுடைய திரளானது, நிரந்தரம் அநுபவம் பண்ணுகிற ஸர்வேச்வரனைக் கண்கள் நிறையும்படி, கண்டொழியக் கழியாதபடியான காதலிலே நிலைநின்றவர்களுக்கும், கண்களுறங்குதலுண்டோ? என்னுமாப்போலே,

ஏ.—வாழுர்சோதி பகல்விளக்குப்பட்டிருக்கும், நீலாழிச்சோதி கடல் கொண்டுகிடக்கும், வேங்கடத்தெழில்கொள்சோதி குன்றத்திட்ட விளக்காயிருக்கும்; வேங்கடமேயவிளக்கிறே. அந்நிலம் மிகியாலே அழகுநிறம்பெற்றபடி. (எந்தை) விரூபனேயாகிலும் விடவொண்ணாதபடியாயிற்று ப்ராப்தியிருப்பது. ஸௌலப்யத்தாலு மழகாலும் தம்மைத்தோற்பித்தபடியென்றுமாம். (தந்தைதந்தைக்கே) பரமசேஷியென்றபடி.

இப்பாட்டில் – ப்ராப்யப்ரதாநமான திருமந்த்ரத்தி லர்த்தத்தையருளிச்செய்கிறார். ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்யவேண்டுமென்கிறவித்தால் – சதுர்த்தியில் ப்ரார்த்தனையைச்சொல்லுகிறது; நாமென்கிறவிடம் - ப்ரணவ ப்ரதிபாத்யனான இவனுடைய ஸ்வரூபத்தைச்சொல்லுகிறது; "இதுபப்தஸ்வபாவத்தைக்கொண்டு சொன்னோம்" என்றருளிச்செய்தருளின வார்த்தை; தெழிகுரலித்யாதியால்-நாராயணபதார்த்தத்தை யருளிச்செய்கிறார்; ப்ராப்தவிஷயத்தில் பண்ணும் கைங்கர்யமிறே ப்ராப்யமாவது; இனி, ஸௌலப்யமும் வடிவழகும் ஸ்வாமித்வமுமெல்லாம் – நாராயணபதத்துக்கர்த்தமிறே"! ... ... ... ※

௧0௬.— மேலுக்கவதாரிகை (இனி) என்று தொடங்கி.

["கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோகண்கள்துஞ்சுதல்" என்கிறபடியே] – (நித்யஸூரிகளுடைய திரளானது நிரந்தரம் அநுபவம்பண்ணுகிறஸர்வேச்வரனை கண்கள்நிறையும்படி கண்டொழிய க்கழியாதபடியான காதலிலே நிலைநின்றவர்களுக்கும் கண்கள் உறங்குதலுண்டோ? என்னுமாப்போலே,)

தொ.—௧0௬.—மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. (இனி) என்றது-கைங்கர்ய ப்ரார்த்தனையைச்சொன்ன அநந்தரமென்றபடி. (இடைவிடாமல்) என்றது-மத்யேவிச்சேதியாமலென்றபடி. (உறுப்பான) என்றது-யோக்யமானவென்றபடி. (படியை) என்றது-ரீதியையென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (காதலிலே) என்றது-அபேக்ஷையிலே என்றபடி. (நிலைநின்றவர்களுக்கு) என்றது-நிலையாய் நின்றவர்களுக்கென்றபடி. (உறங்குதல்) என்றது – நித்ரையென்றபடி.

எ.—[காண்பதற்கு முன்புறக்கமில்லை] - (விஷயத்தைக் காண்பதற்கு முன்பு ஜ்ஞாநஸங்கோசரூபமான உறக்கமில்லை) ; [கண்டால்] - (கண்டகாலத்தில்), [" ஸதாபஶ்யந்தி" ஆகையாலே] - (ஸதாநுபவம் பண்ணுகையாலே), [உறக்கமில்லை] என்று மூலார்த்தம்.

திருவிருத்தம் - கூஎ - பாட்டு.

[" எழுவதும்மீண்டேபடுவதும் பட்டெனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லாலிமையோர்கள்குழாம்
தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய்தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோகண்கள்துஞ்சுதலே".]

[" பெருங்கிறியானையல்லால் அடியேன் நெஞ்சம்பேணலதே" என்றும், " நின்கண்வேட்கையெழுவிப்பனே" என்றும் இவ்விஷயத்திலே இங்ஙனேகிடந்து அலமாவாநின்றீர் ; இவ்விஷயத்தில் கைவைக்கில் உமக்காகவும் பிறர்க்காகவும் க்லேஶம்தவிராதாயிராநின்றது ; அல்லாதாரைக்கண்டீரே புறம்புள்ளவிஷயங்களில் நெஞ்சைவைத்து அவற்றாலே உண்டு உடுத்து உறங்கிப்போதுபோக்குகிறபடி. அப்படியே நீரும் நம்பக்கல்நின்றும் நெஞ்சைமாற்றி புறம்பேவைத்துப்போது போக்கவல்லீரே என்ன, ஓம் அதுசெய்யலாய்த்திறே ! உன்பக்கல் கைவைத்திலேனாகில் உன்னைக்கண்டாலல்லது மீளாத ஆசையையுடைய எனக்கு வேறொன்றால் ஆறியிருக்கப்போமோ என்கிறார். பின்னை அல்லாதார் அங்ஙனே செய்யும்படியென் என்ன, அவர்கள் உன்னை அறியாமையாலே யென்கிறார்.

வ்யா.— (எழுவதும்) இத்யாதி. இரண்டுபடி; உத்பந்நமாவது, அநந்தரத்திலே நஶிப்பது ; உத்பந்நமாய் சிலநாளில் ஜீவிப்பது, பின்னை நஶிப்பதுமாயிறே ! இருப்பது. "ஜாயஸ்வம்ரியஸ்வ" " ஜாயஸ்வம்ர்யஸ்வ" (எஅகூ) என்கிறபடியே உத்பத்திக்ஷணமே விநாஶக்ஷணமாயிருப்பன சிலவும், கல்பாதியிலே உண்டாய் கல்பாந்தத்திலே விநாஶமாயிருப்பார் சிலருமாயிறே! இருப்பது. அவையெல்லாம் உருவெளியாய்த் தோற்றுகிறதாய்த்திவர்க்கு.

மூ.— காண்பதற்குமுன்பு உறக்கமில்லை; கண்டால் "ஸதாபஶ்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.

மூ.—கக0. "பழுதே

வ்யா.— விஷயத்தைக் காண்பதற்குமுனபு ஜ்ஞாநஸங்கோசரூபமான (உறக்கமில்லை); கண்டகாலத்தில் ("ஸதாபஶ்யந்தி") என்கிறபடியே ஸதாநுபவம் பண்ணுகையாலே (உறக்கமில்லை) என்கை.

கக0.—இன்னமும் ஒரு ஹேதுவாலே இவனுக்குறக்கமில்லாமையை அருளிச்செய்கிறார் ("பழுதே") என்று துடங்கி. அதாவது-

எ.—(கண்டுகண்டெள்கலல்லால்) இப்படியிருக்கிற இதினுடைய அவஸ்த்தையைக்கண்டால் இழக்கலாயிருக்கும்; உன்பக்கலிலே கைவைத்தார்க்கு விடப்போமோ? எள்கையாகிறது - இகழ்கை, அவற்றிலே விரக்தராகலாமிறே! அவற்றின்தோஷதர்ஶநம்பண்ணினவாறே. (எழுவதும்) இத்யாதி. அன்றிக்கே, உதிப்பது அஸ்தமிப்பதாய் இப்படி அநேகநாள் கழியக்காணாநின்றாலும் எள்கலல்லால் - ஈடுபடுமித்தனை போக்கி நாள்சென்றதென்றுகை வாங்குப்படியாயோ உன்படியிருப்பது. இப்போது எழுகையாவது-இரங்குகை. இவை ஸதோஷமாயிருக்கையாலே விடலாம்; விலக்ஷணவிஷயமானத்திலே பாவபந்தமுண்டானால் விடப்போமோ? (இமையோர்) இத்யாதி. வேறொன்றிலே நெஞ்சுவைக்கக்கடவரின்றிக்கேயிருக்கிற நித்யஸூரிகளுடைய திரளானது "నిత్యాఞ్జలిపుటాహృష్టాః" "நித்யாஞ்சலிபுடாஹ்ருஷ்டா:", என்கிறபடியே தொழுவது - "నమః పురస్తాదథపృష్ఠతస్తే నమోఽస్తుతే," "நம:புரஸ்தாதபர்ஷ்டதஸ்தே நமோஸ்துதே" (எஅஎ) என்கிறபடியே, முன்னேவருவது, பின்னேவருதாய் அலமந்து, இப்படிசெய்து போருகையாலே, இதுவே யாத்ரையாம்படி பழையனான ஸர்வேஶ்வரனை. (கண்ணாரக்கண்டு) - "గాత్రైశ్శోకాభికర్శితైస్సంస్పృశేయం" "காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதைஸ்ஸம்ஸ்பர்ஶேயம்" (எஅஅ) என்கிறபடியே, தான் வேணுமென்னுமாசை கண்டாலல்லது கழியாதபடியாயிருக்கிறவர்களுக்கும் காணவேணும் என்றகாதல் கண்டவாறேதீருமே. மேல்வருவது - விஷயாதீநமானகாதலிறே! (உற்றார்க்கும்) - காதல் முருடுகொளுந்தினார்க்கும். (உண்டோ) இத்யாதி. ஸ்வதந்த்ரரான பெருமாள் உறங்கினர் என்று கேட்குமித்தனைபோக்கி அவரை அநுவர்த்தித்துப்போன இளையபெருமாளுக்குக் கண்ணுறங்கிற்றோ? பகவத்விஷயத்தில் கைவைத்தாரிலிதுக்கு முன்கண்ணுறங்கினாருண்டோ என்று கேட்டறிவாருண்டோ?"].

கக0.—மேலுக்கவதாரிகை (இன்னமுமொரு ஹேதுவாலே) என்று துடங்கி.

தொ.— கக0.—மேலுக்கவதாரிகை (இன்னமும்) இத்யாதி. (இன்னமும்) என்றது-இதுக்குமேலேயு மென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி.

மூ.—பலபகலும் போயினவென்று” இழந்தநாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்கவிரகில்லை.

---

வ்யா.—“செங்கணடலோதவண்ணரடி அரவணைமேற் கண்டு தொழுதேன் (பலபகலும் பழுதேபோயினவென்று) அழுதேன்” என்று, விஷயத்தைக் கண்டநுபவித்தவாறே இப்படி அநுபவிக்கைக்குடலான அநேககாலமெல்லாம் வ்யர்த்தமே போய்விட்டதே என்று இழந்த நாளை நினைத்து க்லேசித்துக் (கூப்பிடுகிறவனுக்கு) மேலுள்ளநாளில் உறக்கம்வர வழியில்லை என்கை.

---

எ.—[“பலபகலும் பழுதேபோயின” என்று] - (அநுபவிக்கைக்குடலான அநேககாலமெல்லாம் வ்யர்த்தமே போய்விட்டதே என்று), [இழந்தநாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு] - (இழந்தநாளை நினைத்துக்லேசித்து)க் [கூப்பிடுகிறவனுக்கு], [உறங்கவிரகில்லை] - (மேல் உள்ளநாளில் உறக்கம் வரவழியில்லையென்கை) என்று மூலார்த்தம்.

முதல்திருவந்தாதி - ௧௬ - பாட்டு.

[“பழுதேபலபகலும்போயினவென்றஞ்சி
யழுதேனரவணைமேற்கண்டு—தொழுதேன்
கடலோதங்காலலைப்பக் கண்வளருஞ்செங்க
ணடலோதவண்ணரடி”.]

[“அவ.— இதர தேவதைகளைப் பற்றி இவ்விஷயத்தை யிழந்த நாட்டாரிழவை பரத்வநிஷ்கர்ஷமுகத்தாலே பரிஹரித்தவர், அநாதிகாலம் இதர தேவதைகளையும், இதர ஸாதநங்களையும் பற்றி இவ்விஷயத்தை அகன்று திரிந்த தம் இழவைநினைத்து ஸோகிக்கிறார்.

---

தொ.—(“செங்கண்”)–பரத்துவத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்த கண்களையுடையவராய், (“அடலோதவண்ணரடி”)–ஆஸ்ரிதவிரோதிநிரஸநத்துக்குடலாயிருக்கையுடையவராய், ஸமுத்ரம்போன்ற காம்பீர்யத்தையும் திருமேனி வர்ணத்தையுமுடையரான எம்பெருமானுடைய திருவடிகளை, திருவநந்தாழ்வானாகிற படுக்கைமேல் கண்டு ஸேவித்தேன்; இப்படி கண்டு ஸேவிக்கைக்கு உடலான அநேகதிநங்களும் வ்யர்த்தமே போயிற்றேயென்று க்லேசித்தேன், என்று பாசுரார்த்தம். (இப்படி) என்றது-கண்டேனென்றபடி.

எ.—ப — ரை. (ஸௌகுமார்யாநுரூபமாக) கடல் ஓதம்- கடலின் சிறு திவலைகளானவை, (தொடைகுத்துவாரைப்போலே அநுகூலமாக) கால் அலைப்ப — திருவடிகளை ஸ்பர்ஶிக்க, (அத்தாலே) கண்வளரும் - பள்ளிகொண்டருளுமவனுமாய், (வாத்ஸல்யத்தாலும் ஐஶ்வர்யத்தாலும்) செம்-குதறிச்சிவந்த, கண் — திருக்கண்களையுடையனுமாய், அடல்—(அநுபவிக்கப்புக்கவர்களை அபிபவித்து) எழ வீசுகிற, ஓதம் - (ஸௌந்தர்ய) தரங்கங்களோடு கூடின, வண்ணர்-வடிவையுடையனுமானவனுடைய, அடி-திருவடிகளை, (வெளுத்தநிறத்தையுடையனான) அரவு-திருவநந்தாழ்வானாகிற, அணைமேல்-படுக்கையின்மேலே, (ஜ்ஞாநஸாக்ஷாத்காரமுகேந) கண்டு - கண்டநுபவித்து, தொழுதேன் - (ததநந்தரபாவியான) தொழுகையிலும் அந்வயிக்கப்பெற்றேன் ; (இப்படி அநுபவத்தோடே அடிக்கழஞ்சுபெற்று செல்லுகைக்குறுப்பான) பலபகலும்-கழிந்த காலமெல்லாம், (ஒன்றொழியாதபடி) பழுதே- வ்யர்த்தமே, போயின என்று - போய்விட்டதே என்று, அஞ்சி-(கண்ணநீர்) வெள்ளமிட இருந்து, அழுதேன் - ஶோகித்தேன்.

கீழ் இழவுக்கு அடியான நம்முடைய கர்மம் இப்போதும் குறியழியாதே கிடக்கையாலே, மேல் உள்ளகாலத்திலும் இவ்வநுபவத்துக்குக்குறைத்தல்வரில் செய்வது என்? என்று பயப்பட்டு அழுதேன்.

அவ.— நல்லான் அருள்பெற்ற எனக்கு ஶோகம் உண்டாய்த்து என்கிறார்.

வ்யா.— (பழுதே பல பகலும் போயின வென்றஞ்சி யழுதேன்) போனகாலம் அநாதி, வருங்காலம் அநந்தம் ; இத்தோடொத்தகாலமிறே! போயிற்று என்று அழுதேன். இழவுக்கு அழுதாராகில் அச்சமாவது என்? வருமத்தைக்குறித்தன்றோ அஞ்சிற்று என்னில் ; அதிகாரி நானாகில் போனகாலம் போலேயாகிறதோ வருங்காலமும் என்கிறார். “ యశ్చ రామం న పశ్యేత్తు యంచ రామో న పశ్యతి|నిందితస్సవసేల్లోకే స్వాత్మాప్యేనం విగర్హతే॥” “யஶ்சராமம்நபஶ்யேத்துயம்சராமோநபஶ்யதி।நிந்திதஸ்ஸவஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம்விகர்ஹதே॥”(எ அகூ)என்றுசொல்லுகிறது, பெருமாளுடைய ஒருநாளை இழவுக்கிறே! (கடலோதங்காலலைப்ப)திருவடிகளை கடலோதமானது தொடைகுத்துமாப்போலே அலைப்ப. (கண்வளரும்)இத்யாதி. (அரவணைமேல் கண்டுதொழுதேன்) தகட்டில்அழுத்தின மாணிக்கம்போலே. பண்டு உபாயாந்தரங்களிலும், தேவதாந்தரங்களிலும் ப்ரவணனாய் இழந்தேனென்று சொல்லுகிறார். (பழுதே) பழுதும் பழுதல்லாததும் கூடப்பெற்றேனோ? (பலபகல்) இழந்த அநாதிகாலம் பலவாய் அதுக்கு அந்தரம் அநந்தகாலமானபடி.

மூ.—கககூ. "அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன்" என்றுநின்றார்களிறே!

---

வ்யா.—கககூ.—இன்னமும் இவ்விஷயத்தில் அறிவு பிறந்தார்க்கு மறக்கப்போகாதென்னுமத்தை இசைவிக்கிறார்.

("அன்றுநான்") என்று துடங்கி. அதாவது—அவனென்னைப் பெறுகைக்காகத் திருப்பதிகளிலே, நிற்பது இருப்பது கிடப்பதாகா நிற்க, அக்காலத்தில் நான் ஜ்ஞாநலாபரூபமான ஜந்மத்தையுடையனாகப் பெற்றிலேன்; அந்தஜந்மமுண்டானபின்பு, அவனை யொருக்காலு ("மறந்திலேன்") என்று சொல்லா (நின்றார்களிறே!) என்கை.

---

எ.—(போயின) போன நீர்களைக்கோலவோ? வருங்காலமும் பழைய காலமும் ஒன்று; பழையநானே இன்னம் அப்படியாகில் செய்வதென் என்கிறார். "ஈலீஷ்வபிச" "காலேஷ்வபிச" (எகூ0) (அரவணைமேல்கண்டு)பர்யங்க வித்யையிற்படியே பூர்ணமாகக்கண்டேன். (கண்டுதொழுதேன்) கண்டால் செய்யுந்தொழில். (காலலைப்ப) சிறு திவலைதொடைக்குத்த. (செங்கண்) வாத்ஸல்யந்தோற்றுகை. (அடலோதம்) நெருங்கின ஓதம்."] ... ... ... ... ...

கககூ.— மேல்வாக்யத்துக்கு அவதாரிகை (இன்னமும்) என்று துடங்கி.

(இசைவிக்கிறார்) என்றது - அறிவிக்கிறார் என்றபடி.

["அன்று நான்பிறந்திலேன்"] - அவன் என்னைப்பெறுகைக்காகத் திருப்பதிகளிலே நிற்பது இருப்பது கிடப்பதாகாநிற்க அக்காலத்தில், நான் ஜ்ஞாநலாபரூபமான ஜந்மத்தையுடையனாகப் பெற்றிலேன்); ["பிறந்தபின் மறந்திலேன்" என்றுநின்றார்களிறே!]-(அந்த ஜந்மமுண்டானபின்பு அவனை ஒருக்காலும் மறந்திலேனென்று சொல்லாநின்றார்களிறே!) என்று மூலார்த்தம்.

---

தொ.—கககூ.—மேலுக்கவதாரிகை(இன்னமும்)இத்யாதி. (இன்னமும்) என்றது – இதுக்குமேலேயு மென்றபடி. (இவ்விஷயத்தி லறிவுபிறந்தார்க்கு) என்றது—ப்ராப்யமான பகவத்விஷயத்தில் வைலக்ஷண்யஜ்ஞாநம் பிறந்தார்க்கு என்றபடி.(இசைவிக்கிறார்)என்றது—ஸம்மதிப்படுத்தினாரென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (பெறுகைக்காக) என்றது - லபிக்கைக்காக வென்றபடி. (அக்காலத்தில்) என்றது—நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் செய்கிறகாலத்திலே யென்றபடி. (அந்தஜந்மம்)என்றது-ஜ்ஞாநலாபரூபமான ஜந்மமென்றபடி.(அவனை) என்றது-ப்ராப்யனான எம்பெருமானையென்றபடி.

மூ.—கக௨. இவ்வடிமைதான் " ஒழிவில்காலமெல்லாம்

வ்யா.— ஆக ப்ராப்யவைலக்ஷண்ய ஜ்ஞாநம்பிறந்தார்படி இதுவாகையாலே, இந்த கைங்கர்ய ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கும் என்று கருத்து.

கக௨.—இனி, இந்த கைங்கர்யத்துக்கு தேஶகாலாதி நியமமில்லாமையை அருளிச்செய்கிறார்

(இவ்வடிமைதான்) என்று துடங்கி. அதாவது-இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமான இந்த கைங்கர்யந்தான், ("ஒழிவில்காலமெல்லாம்

எ.—பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார்

(ஆக) என்று துடங்கி.

கக௨.— மேலுக்கவதாரிகை (இனி) என்றுதுடங்கி.

[இவ்வடிமைதான்] - (இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமான இந்த கைங்கர்யந்தான்), [" ஒழிவில்காலமெல்லாம்"]- (ஒழிவில்லாதகாலமெல்லாம்),

தொ.—[ஆய] என்றுதுடங்கி இவ்வளவும் அவர் அருளிச்செய்த அர்த்தத்தை நிகமித்தருளுகிறார் (ஆக) இத்யாதியால். (ஆக) என்றது-கீழ்ச்சொன்னஹேதுக்கள் எல்லாவற்றாலுமென்றபடி. கீழ்ச்சொன்ன ஹேதுக்களாவன-சதுர்த்தியினாலே கைங்கர்ய ப்ரார்த்தனையைச் சொல்லுகையும், கைங்கர்யந்தானில்லாதபோது ஶேஷத்வமில்லையாம்படி ஶேஷத்வோபஷ்டம்பகமாயிருக்கையும், இஶ்ஶேஷத்வந்தான் ஆத்மாவுக்கு அஸாதாரண நிரூபகமாயிருக்கையும், ஆத்மா தான் நித்யனாயிருக்கையும், ப்ராப்யவைலக்ஷண்யஜ்ஞாநமடியாக ப்ராப்யருசியுடையார்படிகளும். ஆக ப்ரமாணப்ரமேய ப்ரமாதாக்களை அருளிச்செய்தாராய்த்து.

கக௨.—மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி. (இனி) என்றது-கைங்கர்யப்ரார்த்தனையை யருளிச்செய்த அநந்தரமென்றபடி. (இந்த கைங்கர்யத்துக்கு) என்றது-நித்யமான ஆத்மஸ்வரூபத்துக்கு நிரூபகமான ஶேஷத்வத்துக்கு உபஷ்டம்பகமாய், அத ஏவ நித்யப்ரார்த்தநாவிஷயமான கைங்கர்யத்துக்கென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (ஸ்வரூபாநுரூப)மான என்றது-ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபாநுரூபமாய், அத ஏவ ஸ்வப்ரயோஜகத்வஸ்வகர்த்ர்கத்வபுத்த்யகோசரமாய், பரப்ரயோஜநத்வைகவேஷமாய் பரநியோஜ்யமான வென்றபடி. (புருஷார்த்தமான) என்றது-புருஷார்த்தப்ரார்த்தநாவிஷயமானவென்றபடி.

மூ.—உடனாய்மன்னி'' என்கிறபடியே, ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும் அநுவர்த்திக்கும்.

---

வ்யா.— உடனாய்மன்னி'') என்று, ''ஒழிவில்லாத காலமெல்லாம் ஸர்வதேஶத்திலும் (உடனாய்) ஸர்வாவஸ்த்தையிலும்பிரியாது நின்று'' என்கிறபடியே, ஸர்வதேஶத்திலும், ஸர்வகாலத்திலும், ஸர்வாவஸ்த்தையிலும் நடந்து செல்லும் என்கை.

---

எ.— ['' உடனாய்''] - (ஸர்வதேஶத்திலும்) உடன்பட்டவனாய், ['' மன்னி''] - (ஸர்வாவஸ்த்தையிலும் பிரியாதுநின்று), [என்கிறபடியே ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும்] [அநுவர்த்திக்கும்] - (நடந்துசெல்லும்) என்று மூலார்த்தம்.

[''ஒழிவில்காலமெல்லாம்''] என்கிறபாசுரோதாஹரணத்துக்கும், [ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும் அநுவர்த்திக்கும்] என்கிற ஸ்ரீஸூக்திக்கும் நாராயணபதத்தில் ஸூசகம்; போக்த்ர் போக்யரூபமான ஆத்ம பரமாத்மாக்களை நித்யராகச்சொல்லுகையாலே ஸர்வகாலத்திலும் உண்டாம்; இந்த ஸ்வரூபங்களுடைய அஸங்கோசத்தாலும் அபரிச்சேதத்தாலும் ஸர்வதேஶத்திலுமுண்டாம்; அப்ரதக்ஸித்த ஸம்பந்தமாகையாலே ஸர்வாவஸ்த்தைகளிலும் அநுஸஞ்சரணமுண்டாகையாலே ஸர்வாவஸ்த்தமாயிருக்குமதென்று கண்டுகொள்வது.

---

தொ.—[''உடனாய்மன்னி'']என்கையாலே (ஸர்வதேஶத்திலும் ஸர்வாவஸ்த்தையிலும்) என்கிற அர்த்தத்தைக்காட்டுமோவென்னில்; [''உடனா'']கையாவது-கூடியிருக்கையாகையாலும், [''மன்'']னுதலாவது-ஒரு வஸ்து என்னலாம்படியிருக்கையாகையாலும், அவனோடே ஏக வஸ்துவென்னலாம்படி கலந்திருக்கும் வஸ்துவுக்கு அவனிருக்கும்(தேஶத்திலும்) அவனுக்குண்டாம் அவஸ்த்தைகள்தோறும் அவனோடு கூடியிருக்க நியதமாகையாலும், [''உடனாய் மன்னி''] என்றால் ஸர்வதேஶ ஸர்வாவஸ்த்தைகளையுங்காட்டும்.

சூ.—௧௧௩. எட்டிழையாய் மூன்றுசரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம்போலே திருமந்த்ரம்.

---

வ்யா.— ௧௧௩.—பார்யைக்கு மங்களஸூத்ரதாரணம், பர்த்தாவுக்கு அநந்யார்ஹை என்று காட்டுமாப்போலே, திருமந்த்ரதாரணம், சேதநர்க்கு பகவதநந்யார்ஹத்வ ப்ரகாசகமென்னுமிடம் தோற்ற, இத்தை யொருமங்களஸூத்ரமாக நிரூபித்தருளிச்செய்கிறார்.

(எட்டிழையாய்) என்றுதுடங்கி. அதாவது – பதினாறிழையாய், இரண்டுசரடாயிருக்கும் லௌகிகமானமங்களஸூத்ரம்போலன்றிக்கே, (எட்டிழையாய், மூன்றுசரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம் போலே,) எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்கிற இத்திருமந்த்ரமென்கை.

---

எ.—௧௧௩.– மேல்வாக்யத்துக்கவதாரிகை(பார்யைக்கு)என்றுதுடங்கி.

(பகவதநந்யார்ஹத்வ ப்ரகாசகமென்னுமிடம் தோற்ற) என்றது— உகாரத்தில் சொன்ன பகவதநந்யார்ஹத்வ ப்ரகாசகமென்னுமர்த்தம் தோற்றவென்றபடி.

[எட்டிழையாய் மூன்றுசரடா யிருப்பதொரு மங்களஸூத்ரம் போலே திருமந்த்ரம்] –(எட்டுத்திருவக்ஷரமாய் மூன்றுபதமா யிருக்கிற, [இத்திருமந்த்ரம்] என்று மூலார்த்தம்.

---

தொ.—௧௧௩.—மேலுக்கவதாரிகை(பார்யைக்கு) இத்யாதி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (லௌகிகமான மங்களஸூத்ரம்) என்றது-லோகத்திலுள்ளார் ஆதரிக்கும் மங்களஸூத்ரமென்றபடி. [எட்டிழையாய், மூன்றுசரடாயிருக்கும் மங்களஸூத்ரம்] மதாந்தரஸ்த்தர்பக்கலிலே காணலாம். நம்மாசார்யர்கள், திருமந்த்ரம் எட்டுத் திருவக்ஷரமாய், த்விதியமந்த்ரமாயிருக்கைக்கு ஸ்மாரகமாகவாய்த்து ஒன்பதுவடமான மங்களஸூத்ரத்தை தரிப்பிப்பது.

மூ.—௧௧௪. இத்தால் ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் ரக்ஷிக்கும் என்கிறது.

---

வ்யா.—௧௧௪.— இப்படி நிரூபித்துச்சொன்ன இத்தால் எவ்வர்த்தம் சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிறார்

(இத்தால்) என்று தொடங்கி. அதாவது - இத்தை மங்களஸூத்ரமாகச்சொன்ன (இத்தால்) ஈஶ்வரன் இத்தோடந்வயமுடைய (ஆத்மாக்களுக்குப்பதியாய்) நின்றுகொண்டு (ரக்ஷிக்கும்) என்று சொல்லுகிறதென்கை.

---

எ.— ௧௧௪.—மேலுக்கவதாரிகை (இப்படி) இத்யாதி.

[ஆத்மாக்களுக்குப்பதியாய் ரக்ஷிக்கும்] என்றருளிச்செய்தது — "స ఏవ వాసుదేవో హి సాక్షాత్పురుష ఉచ్యతే। స్త్రీప్రాయమితరత్సర్వం జగత్ బ్రహ్మపురస్సరం॥ నైసర్గికత్వభర్తృత్వాదాత్మేశత్వాజ్జగత్పతేః॥" "ஸ ஏவ வாஸுதேவோ ஹி ஸாக்ஷாத்புருஷ உச்யதே । ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம் ஜகத்ப்ரஹ்மபுரஸ்ஸரம்॥ நைஸர்கிகத்வபர்த்ர்த்வாதாத்மேஶத்வாஜ்ஜகத்பதே:॥" (௭௯௧) என்னும் ப்ரமாணத்தைத் திருவுள்ளம்பற்றி. திருமந்த்ரத்தை மங்களஸூத்ரமாக நிரூபித்தத்தால் அதிலே த்வயமாகிற அச்சுத்தாலியும், மூலைத்தாலியும், வைரமணி ஸ்தாநத்திலே முப்பத்திரண்டு எழுத்தான சரமஶ்லோகத்தையுஞ்சேர்த்து "ఆచ్ఛాద్య నూతనం వాసో వరో మాంగళ్యసూత్రకం। సువర్ణమణిసంయుక్తం బధ్నీయాత్ కన్యకాగళే॥" "ஆச்சாத்ய நூதநம்வாஸோ வரோமாங்கள்யஸூத்ரகம் । ஸுவர்ணமணிஸம்யுக்தம் பத்நீயாத்கந்யகாகளே॥" (௭௯௨) என்கிறபடியே—ஆத்மாக்களுக்கநந்யார்ஹத்வ ப்ரகாஶகமாகக் கட்டினான் என்றருளிச்செய்வர்; "స్వామిత్వాత్మత్వశేషిత్వపుంస్త్వాద్యాస్స్వామినో గుణాః। స్వత్వదాసత్వకాయత్వశేషత్వస్త్రీత్వదాయినః॥" "ஸ்வாமித்வாத்மத்வஶேஷித்வபும்ஸ்த்வாத்யாஸ்ஸ்வாமிநோகுணா:। ஸ்வத்வதாஸத்வகாயத்வஶேஷத்வ ஸ்த்ரீத்வதாயிந:॥" (௭௯௩).

---

தொ.—௧௧௪.—மேலுக்கவதாரிகை (இப்படி) இத்யாதி. (இப்படி) என்றது – மங்களஸூத்ரமாகவென்றபடி. மூலார்த்தம் (அதாவது) இத்யாதி. (இத்தோடு) என்றது - இத்திருமந்த்ரத்தோடென்றபடி. (அந்வயமுடைய) என்றது – ஆசார்யோபதேஶத்வாரா ஸம்பந்தமுடையவென்றபடி. (பதியாய்நின்றுகொண்டு ரக்ஷிக்கும்) என்றது – தான் பெருகநின்றுகொண்டு ரக்ஷிக்குமென்றபடி.

எ.—இது தன்னை இவர் திருத்தம்பியாரும் முகாந்தரேண அருளிச்செய்தாரிறே! ஆசார்யஹ்ருதயத்திலே:— "வித்யை தாயாகப்பெற்று, பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள்போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை மற்றொருவர்க்கும் பேச்சுப்படாமல் விஷ்வபதி லோகபர்த்தாவென்னும் மணவாளரை, நாலிரண்டிழைகொண்டு மூப்புரியான ப்ரஹ்மஸூத்ரபந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன்கைக்கொண்டபின் சதுர்த்தியுள்புக்கு இடையீடுநடுக்கிடக்கும் நாள்கழித்து ஜந்மபூமியை விட்டகன்று சூழ்விசும்பிற்படியே உடன்சென்று குடைந்து நீராடி வியந்துழாய் அஞ்சநத்தின்நீறு, நானப்பொடி, பீதகவாடை பல்கலன்கொண்டு நோக்கி அலங்கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய, நிறை குடவிளக்கமேந்தி இளமங்கையர் எதிர்கொள்ள வைகுந்தம் புக்கிருந்து வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர்போகமுண்டு கோப்புடைய கோட்டுக்காற்கட்டில் மிதித்தாரோகித்து பரதாக்ரூரமாருதிகளை பரிஷ்வங்கித்த மணிமிகுமார்விலே குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று".

அஸ்யார்த்தः—(வித்யைதாயாகப்பெற்று) "ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி" "ஸஹி வித்யாதஸ்தம்ஜநயதி" (எகூச) என்கிறபடியே ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞாநத்தைஉண்டாக்கினபோது இவ்வாத்மவஸ்துஸத்பாவமாகையாலே வித்யைமாதாவாகக்கொண்டு இவ்வாத்மவஸ்துவைஜநிப்பித்து. (பாலுமமுதுமானதிருநாமத்தாலே திருமகள்போல வளர்த்த) "தேனும்பாலுமமுதுமாயதிருமால்திருநாமம்" என்கிறபோக்யபதார்த்தமானதிருமந்த்ரத்தாலே "திருமகள்போலவளர்த்த" என்கிறபடியே அநந்யார்ஹஶேஷத்வாதிகளாலே லக்ஷ்மீஸதர்ஶமாக வளர்த்துக்கொண்டு போந்த. (தஞ்சமாகியதந்தை) தேஹோத்பாதகனாய் "பித்ரா" "ஸபித்ராச" (எகூடு) இத்யாதிப்படியே ஆபத்தஶைகளிலேகைவிடும்பிதாவைப்போலன்றிக்கே "பூதாநாம் யோऽவ்யய: பிதா" "பூதாநாம்யோவ்யய:பிதா" (எகூசு) என்கிறபடியேஸம்பந்தம் கண்ணழிவற்றிருக்க, "பவமோக்ஷணயோஸ்த்வயைவ ஜந்துः க்ரியதே" "பவமோக்ஷணயோஸ்த்வயைவஜந்துःக்ரியதே" (எகூஎ) என்னும்படிஸம்ஸாரமோக்ஷங்களிரண்டுக்கும்பொதுவாயிருக்கும்பிதாவைப்போலன்றிக்கே ஸ்வரூபோத்பாதகனாய்ஒருதஶையிலுங்கைவிடாதேஹிதைஷியாய் உஜ்ஜீவநைகபரனாய்க்கொண்டு மோக்ஷைகஹேதுவாயிருக்கையாலே, ஆபத்ரக்ஷகனான ஆசார்யனாகிறபிதா. (மற்றொருவர்க்கும் பேச்சுப்படாமல்) "மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன்" "மானிடவர்க்கென்று பேச்சுப்படில்" என்கிறபடியே அந்யஶேஷத்வ

எ.—ப்ரஸங்கம்வாராதபடி.(விச்வபதிலோகபர்த்தாவென்னும்மணவாளனை) "பதிம் விச்வஸ்ய" "பதிம்விச்வஸ்ய" (௭௯௮) "கௌஸல்யா லோகபர்த்தாரம்" "கௌஸல்யாலோகபர்த்தாரம்" என்று (௭௯௯) பதிசப்தத்தாலும் பர்த்ருசப்தத்தாலும் ஸர்வலோகநாயகனாகச்சொல்லப்படுகிற மணவாளனை. (நாலிரண்டிழைகொண்டு முப்புரியான ப்ரஹ்மஸூத்ர பந்தத்தோடே) எட்டிழையாய் மூன்றுசரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே எட்டக்ஷரமாய் மூன்றுபதமாய் ஈச்வரஸம்பந்த ப்ரகாசகமான திருமந்த்ரமாகிற மங்களஸூத்ரபந்தத்தோடே. (வரிப்பிக்க) "பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணினா" "பாணிம்க்ர்ண்ஹீஷ்வபாணிநா" (௮௦௦) என்கிறபடியே வரிக்கும்படிபண்ண. (பரம்புருடன் கைக்கொண்டபின்) "பரம்புருடா நீயென்னைக் கைக்கொண்டபின்" என்கிறபடியே பரமபுருஷரான மணவாளர் பரிக்ரஹித்த அநந்தரம். (சதுர்த்தியுள்புக்கு) விவாஹாநந்தரம் சேஷசேஷாமபர்யந்தமான சதுர்திவஸத்திலும், அகலுதலணுகுதலற்று அநந்யார்ஹ சேஷத்வாநுகுணமான பரிமாற்றத்துக்கர்ஹமென்னுமளவை ப்ரகாசிப்பித்துக்கொண்டிருக்குமோபாதி ப்ரணவோக்தமான அநந்யார்ஹ சேஷத்வத்தில் கண்ணழிவற அங்கீகரிக்கையாலும், ததநுகுணமாகக் கிட்டிபரிமாறப் பெருமையாலும் அகலுதலும் அணுகுதலு மற்று கைங்கர்ய ப்ரார்த்தனையோடே செல்லும் சரமசதுர்த்தியிலே உள்புக்கு. (இடையீடு நடுக்கிடக்கும் நாள்கழித்து) தம்பதிகளிருவரும் ஏகசய்யையிலே வர்த்திக்கச்செய்தே அந்யோந்யஸ்பர்சயோக்யதை யில்லாதபடி யிடையீடான ஸோமாதிகள் நடுவே கிடக்கும் நாள்போலே சேஷத்வஜ்ஞாநமும் சேஷவ்ருத்தி ப்ரார்த்தனையு முண்டாகையாலே இரண்டுதலைக்கும் அண்ணிமை உண்டாயிருக்கவும் சேர்த்துப்பரிமாறவொண்ணாதபடி "நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு" என்கிறபடியே அநுபவவிரோதியாய் இடையீடான சரீரம் நடுவே கிடக்கிற நாளுநாளையும் "நாள்கடலைக்கழிமின்" என்கிறபடியே கழித்து. (ஜந்மபூமியை விட்டகன்று) "முற்றிலும் பைங்கிளியும் பந்து மூசலும் பேசுகின்ற சிற்றில்மென் பூவையும்விட்டகன்ற செழுங்கோதை" என்கிறபடியே ஒருவராலும் விட அரிதான ஜந்மபூமியான இவ்விபூதியை முன்பாதரணீயமாய்ப்போந்த வஸ்துக்களோடே கூடப்பொருந்திபரிமாறவிட்டு நீங்கி; அன்றிக்கே "அன்று நான் பிறந்திலேன்" என்னும்படிக்கிடந்த தனக்கு ஆசார்யன், திருமந்த்ரத்தாலுண்டாக்கின ஜந்மம் பெற்றதிங்கே யாகையாலே ஜந்மபூமியான இவ்விபூதியை பகவதநுபவ ப்ராவண்யத்தாலே "முற்றிலும் பைங்கிளியும்" இத்யாதிட்

ஏ.—படியே முன்பாதராணியமாய்ப்போந்த வஸ்துக்களோடே கூடவிட்டகன்றென்னவுமாம். பிறந்தகத்தை விட்டுப் புக்ககத்துக்குப்போகிறதாகச்சொல்லுகிற ரூபகத்துக்கு இது மிகவும்சேருமிறே! (சூழ்விசும்பிற்படியே உடன்சென்று) "சூழ் விசும்பு" என்கிற திருவாய்மொழியில் சொல்லுகிறபடியே அர்ச்சிராதிமார்க்கத்தாலே வழியிலுள்ளாருடைய ஸத்கரிக்க "அங்கவரொடுமுடன்சென்று" என்கிறபடியே "நயாமி" என்கிற நாயகன் முன்னேபோக பின்னேபோய். (குடைந்துநீராடி) "குள்ளக்குளிரக் குடைந்துநீராடி" என்கிறபடியே பர்த்ர்க்ருஹத்துக்குப்போகிற பெண் அவ்வூரெல்லையிலே சென்றவாறே அவர்கள் குளிப்பாட்டக் குளிக்குமாப்போலே அம்ர்தவாஹிநியான விரஜையிலே இப்பாலுள்ள அழுக்கறும்படிநீராடி. (வியந்துழாயஞ்சநத்தின்நீறு, நானப்பொடி, பீதகவாடை, பல்கலன்கொண்டு நோக்கி அலங்கரித்து) குளித்தேறின பெண்ணை பர்த்ர்பந்துக்களான ஸ்த்ரீகள் வந்து அலங்கரிக்குமாப்போலே "வியந்துழாய்க்கற்பென்று சூடுங்கருங் குழல்" "ஆராயில் வேய்ங்கணைஞ்சநத்தின் நீறணிந்து" "மெய்திமிருநானப்பொடி" "உடுத்துக்களைந்த நின்பீதகவாடை" "பல்கலனும் யாமணிவோம்" என்கிறபடியே-அலங்காரோபகரணங்களான திவ்யமால்யம், திவ்யாஞ்சநம், திவ்யசூர்ணம் திவ்யவஸ்த்ரம், திவ்யாபரணங்களை, "తంపంచశతాన్యప్సరసాంప్రతిధావన్తి, శతంమాలాహస్తాః, శతమంజనహస్తాః, శతంచూర్ణహస్తాః, శతంవాసోహస్తాః, శతంభూషణహస్తాః" "தம்பஞ்சஶதாந்யப்ஸரஸாம்ப்ரதிதாவந்தி, ஶதம்மாலாஹஸ்தா:, ஶதமஞ்சநஹஸ்தா:, ஶதம்சூர்ணஹஸ்தா:, ஶதம்வாஸோஹஸ்தா:, ஶதம்பூஷணஹஸ்தா:," (அ௦க) என்கிறபடியே ஏந்திக்கொண்டு மானேய்நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரேவந்து "తంబ్రహ్మాలంకారేణాలంకుర్వన్తి" "தம்ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி" (அ௦உ) என்கிறபடியேபோக்த்ர்பூதேஶ்வரபோக்யமாம்படிஅலங்கரித்து. (பல்லாண்டிசைத்துக்கவரிசெய்ய) "தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரி செய்வரேழையரே" என்கிறபடியே இவ்விஷயத்தில் கிஞ்சித்கரிக்கையிலுண்டான சாபலந்தோற்றத்திரளநின்று மங்களாஶாஸநம்பண்ணி சாமரம்பணிமாற. (நிறைகுடவிளக்கமேந்தி இளமங்கையர் எதிர்கொள்ள) அலங்க்ர்தையாய் உபலாலநத்தோடே செல்லுகிறபெண், பர்த்ர்க்ருஹத்தை அணுகச்சென்றவாறே அங்குள்ள ஸ்த்ரீகள் மங்களதீபாதிகளை ஏந்திக்கொண்டெதிரேவந்து ஸத்கரிக்குமாப்போலே, "மதியுநற்கண்ணமு நிறைகுடவிளக்கமும் மதிமுகமடந்தைய ரேந்தினர்" என்கிறபடியே மங்களாவஹமான பூர்ணகும்பதீபாதிகளை தரித்துக்கொண்டு "சதிரிளமங்கையர்தாம்வந்தெ

ஏ.—திர்கொள்ள" என்கிறபடியே நித்யநவயௌவநஸ்வபாவைகளான வேறே சில திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிர்கொள்ள. (வைகுந்தம்புக்கிருந்து) உபலாலநத்தோடே சென்றபெண், பர்த்ர்க்ர்ஹத்திலே புக்கிருக்குமாப் போலே "மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பார்" என்கிறபடியே ஸ்ரிய:பதியானவனுக்கு போகஸ்தாநமான ஸ்ரீவைகுண்டத்தைப் ப்ராபித்து அவனோடேகூட இருந்து. (வாய்மடுத்துப்பெருங்களிச்சியாகவானவர்போகமுண்டு) பர்த்ர்க்ர்ஹத்திலே பெண் வந்தபின்பு தம்பதிகளும் மற்றுமுள்ள பந்துக்களும் கூடியிருந்து பெருங்களிச்சியுண்ணுமாப்போலே, அடியார்கள் குழாங்களுமவனுமாக இருக்கிற சேர்த்தியிலே அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனென்று பெருங்களிச்சியாக மூழ்மிடர்செய்து "கட்டெழில்வானவர்போகமுண்பாரே" என்கிறபடியே, நித்யஸூரிகள் புஜிக்கிறபோகத்தை "సోఽశ్నుతే సర్వాన్ కామాన్ సహ బ్రహ్మణా విపశ్చితా" "ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹப்ரஹ்மணாவிபஶ்சிதா" (அ௦௩)என்கிறபடியே புஜித்து. (கோப்புடையகோட்டுக்காற்கட்டின்மிதித்தாரோஹித்து) பர்த்ர்ஸம்ஶ்லேஷத்துக்கு படுக்கையிலே ஏறுமாப்போலே "கோப்புடைய சீரியசிங்காசநம்" என்றும் "கோட்டுக்காற்கட்டில்" என்றுஞ்சொல்லுகிறபடியே உபயவிபூதியும் தொழிலாகவகுப்புண்டு ஸர்வாஶ்சர்யமயமான திவ்யபர்யங்கத்திலே "తమేవంవిత్పాదేనాధ్యారోహతి" "தமேவம்வித்பாதேநாத்யாரோஹதி" (அ௦௪) என்கிறபடியே பாதபீடத்திலே அடியிட்டேறி. (பரதாக்ரூரமாருதிகளைபரிஷ்வங்கித்த மணிமிகுமார்விலே) "తం సముత్థాప్య కాకుత్స్థశ్చిరస్యాక్షిపథంగతం। అంకే భరతమారోప్య ముదితః పరిషస్వజే॥" "தம்ஸமுத்தாப்யகாகுஸ்த்த ஶ்சிரஸ்யாக்ஷிபதங்கதம்। அங்கேபரதமாரோப்யமுதித:பரிஷஸ்வஜே॥" (அ௦௫) என்றும், "సోఽపీనం ధ్వజవజ్రాబ్జకృతచిహ్నేన పాణినా। సంస్పృశ్యాకృష్య చ ప్రీత్యా సుగాఢం పరిషస్వజే॥" "ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜ க்ர்தசிந்ஹேந பாணிநா। ஸம்ஸ்பர்ஶ்யாக்ர்ஷ்யசப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே॥" (அ௦௬) என்றும், "ఏష సర్వస్వభూతస్తు పరిష్వంగో హనూమతః। మయా కాలమిమం ప్రాప్య దత్తస్తస్య మహాత్మనః॥" "ஏஷஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோஹநூமத:। மாயாகாலமிமம்ப்ராப்யதத்தஸ்தஸ்யமஹாத்மந:॥" (அ௦எ) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ரீபரதாழ்வானையும், அக்ரூரனையும், திருவடியையும் ஆதரித்தணைத்துக்கொண்ட மணிமிகுமார்பென்று ஸ்ரீகௌஸ்துபம் நிறம்பெறும்படி அழகிய திருமார்விலே. (குருமாமணியாயணையும் வஸ்துவுக்கு) "குருமாமணிப்பூண் குலாவி" என்று ஶ்லாக்யமாய் ஈஶ்வரத்வசிந்ஹமான ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி போக்யமாய் தேஜஸ்கரமாய்க்கொண்டு அணைகிற ஆத்மவஸ்துவுக்கு (மணிவல்லிப்பேச்சு வந்தேழியன்று) வண்பூமணிவல்லியென்று உதாரமாய் போக்யமாய் தனக்குத்தானே ஆபர

எ.—ணமாம்படி அழகியதாய் கொள்கொம்புபெறுவிடில் தலையெடுக்கமாட்டாமே தறைப்பட்டுக்கிடக்குங்கொடிபோன்றவளென்கிற ஸ்த்ரீத்வப்ரயுக்தமாய் வரும்பேச்சு வந்தேறியன்று, ஸ்வாபாவிகமென்றபடி.

இத்தால் ஸ்த்ரீத்வம் ஆத்மவஸ்துவுக்கு ஸ்வாபாவிகமாகையாலே அத்தை உள்ளபடி தர்ஸித்த இவர்க்கு தத்ப்ரயுக்தமான பேச்சு ஸ்வாபாவிகமென்று சொல்லிற்றாய்த்து.

[இத்தால்] - (இத்தை மங்கள ஸூத்ரமாகச்சொன்ன இத்தால்),[ஈஸ்வரன்] [ஆத்மாக்களுக்கு]-(இத்தோடன்வயமுடைய)[ஆத்மாக்களுக்கு], [பதியாய் ரக்ஷிக்குமென்கிறது] - (பதியாய்க்கொண்டு ரக்ஷிக்கு)மென்று மூலார்த்தம்.

இப்படி அருளிச்செய்தத்தால் "పితాచ రక్షకశ్శేషీ భర్తా జ్ఞేయో రమాపతిః। స్వామ్యాధారో మమాత్మా చ భోక్తా చాద్యమనూదితః॥" "பிதாச ரக்ஷகஶ்ஶேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: । ஸ்வாம்யாதாரோ மமாத்மாச போக்தாசாத்யமநூதித:॥" (அ0அ)என்கிறபடியே நவவிதஸம்பந்தமும் ஸூசிதமாய்த்து.

அகாரத்தாலே பித்ர் புத்ர ஸம்பந்தமும், "அவ-ரக்ஷணே" என்கிறதாதுவாலே ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தமும்,சதுர்த்தியாலே ஶேஷஶேஷிபாவ ஸம்பந்தமும், உகாரத்தாலே பர்த்ர்பார்யா ஸம்பந்தமும், மகாரத்தாலே ஜ்ஞாதாஜ்ஞேய ஸம்பந்தமும், நமஸ்ஸாலே ஸ்வ ஸ்வாமிபாவஸம்பந்தமும், நாராயணபதத்தாலே ஶரீரஶரீரிஸம்பந்தமும், அயநபதத்தாலே ஆதாராதேய ஸம்பந்தமும், ஆய பதத்தாலே போக்தா போக்யஸம்பந்தமும், சொல்லித்தலைக்கட்டுகிறது.

[இதில் அகாரம் ஸகலஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச்சொல்லுகிறது] என்றத்தாலே பித்ர்புத்ர ஸம்பந்தமும், ரக்ஷ்யரக்ஷகபாவஸம்பந்தமும் சொல்லிற்றாய்த்து.

[இத்தாலீஸ்வரனுக்கு ஶேஷமென்கிறது] என்றத்தாலே ஶேஷத்வப்ரதிஸம்பந்தியான ஶேஷியும் அர்த்தாதுக்தமாகையாலே ஶேஷஶேஷிபாவஸம்பந்தமும் சொல்லிற்றாய்த்து.

[இத்தால் பிறர்க்கு ஶேஷமன்றென்கிறது] என்றத்தாலே பர்த்ர்பார்யாஸம்பந்தமும் சொல்லிற்றாய்த்து.

[இத்தால் ஆத்மாஜ்ஞாதா] என்கையாலே ஜ்ஞாத்ர்ஜ்ஞேய ஸம்பந்தமும சொல்லிற்றாய்த்து.

[தனக்குரியனன்றென்கிறது] என்றத்தாலே ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தமுஞ்சொல்லிற்றாய்த்து.

மூ.—ககரு. ஆக, திருமந்த்ரத்தால், எம்பெருமானுக்கே யுரியேனான நான்,

---

வ்யா.—ககரு.— இனி, இம்மந்த்ரத்தால் ப்ரதிபாதித்த அர்த்தத்தை ஸங்க்ரஹித்துச் சொல்லி இத்தை நிகமித்தருளுகிறார்

(ஆகத்திருமந்த்ரத்தால்) என்று தொடங்கி. (ஆக) வென்றது-கீழ் பரக்க அருளிச்செய்த எல்லாவற்றையும் தொகுத்தருளிச் செய்கிறாரென்னுமிடந்தோற்ற. (எம்பெருமானுக்கேயுரியேனான நான்) இதில் (எம்பெருமானுக்கே) என்று சதுர்த்யந்தமான ப்ரதமாக்ஷரத்தில அர்த்தத்தையும், அவதாரணத்தாலே மத்யமாக்ஷரத்தில் அர்த்தத்தையும், (உரியேனான நான்) என்று த்ருதீயாக்ஷரத்தில் அர்த்தத்தையும்

---

எ.— [நாரங்களுக்கயநமென்றபடி] என்கையாலே ஆதாராதேய ஸம்பந்தமுஞ்சொல்லிற்றாய்த்து.

[இவைதன்னை யாஸ்ரயமாகவுடையனென்னவுமாம்]என்றத்தாலே ஶரீராத்மபாவஸம்பந்தமுஞ் சொல்லிற்றாய்த்து.

[ஆய என்கிற இத்தால்] என்றத்தாலே போக்த்ர்போக்ய ஸம்பந்தமும் சொலலிற்றாய்த்து.

ககரு.— மேலுக்கவதாரிகை (இனி இம்மந்த்ரத்தால்) என்று தொடங்கி.

[ஆக]-(கீழ்ச்சொன்னவெல்லாவற்றாலுமாக), [திருமந்த்ரத்தா [எம்பெருமானுக்கே உரியேனானநான்] - [எம்பெருமானுக்கே] ஶே மானநான்,

---

தொ.—ககரு.— மேலுக்கவதாரிகை (இனி) இத்யாதி.

(இனி) என்றது - திருமந்த்ரத்துக்கு ப்ரதிபதம் விஸ்தரேண அர்த்தமருளிச்செய்த அநந்தரமென்றபடி. (ப்ரதிபாதித்த) என்றது விஸ்தரேணப்ரதிபாதித்த வென்றபடி. (ஸங்க்ரஹித்து) என்றது—ஸ ஙக்ஷேபித்தென்றபடி. (இத்தை) என்றது - திருமந்த்ரார்த்தத்தையெ ன்றபடி.

[ஆக] என்று தொடங்கி.

[ஆகத்திருமந்த்ரத்தால்] இத்யாதி வாக்யத்ரயத்தாலே ப்ரண நமோநாராயணபதங்களை ஸங்க்ரஹித்தருளிச்செய்தபடியை விஶ மாக அருளிச்செய்யாநின்றுகொண்டு ப்ரதமப்ரகரணார்த்தத்தை நி மித்தருளுகிறார்.

(பரக்க) என்றது - விஸ்தரமாகவென்றபடி. (தொகுத்து) என்றது - சேர்த்தென்றபடி. (இதில்) என்றது-கீழ்ச்சொன்னவாக்யத்திலென்றபடி. [எம்பெருமானுக்கே] என்றது - லுப்தசதுர்த்தியாலே சொல்லப்பட்ட ஶேஷத்வப்ரதிஸம்பந்தியான ஶேஷித்வமுடையவனுக்கென்றபடி.

மூ.— எனக்குரியனன்றிக்கேயொழியவேணும் ; ஸர்வசேஷியான நாராயணனுக்கே எல்லாவடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும் என்றதாய்த்து.

---

வ்யா.— சொல்லுகையாலே, ப்ரதமபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி.

(எனக்குரியனன்றிக்கேயொழியவேணும்) இதில், (எனக்குரியன்) என்று ஷஷ்ட்யந்தமான மகாரார்த்தத்தையும், (அன்றிக்கேயொழிய) என்கையாலே, நகாரார்த்தத்தையும், (வேணும்) என்கையாலே இவ்வர்த்தம் சேதநனுக்கு ப்ரார்த்தநீயமென்னுமத்தையும் ப்ரதிபாதிக்கையாலே, மத்யமபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி.

(ஸர்வசேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும்செய்யப்பெறுவேனாகவேணும்,) இதில், (ஸர்வசேஷியான நாராயணனுக்கே) என்று கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியையும், கைங்கர்யப்ரார்த்தநா ப்ரகாசிகையான சதுர்த்தியையும், (எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும்) என்று, கைங்கர்யப்ரார்த்தநா ப்ரகாரத்தையும சொல்லுகையாலே த்ருதீயபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி.

என்றதாய்த்து) என்றது-என்று சொல்லிற்றாய்த்து என்கை. விஸ்தரேண அருளிச்செய்ததை மீளவும் இப்படி ஸங்க்ரஹித்தருளிச்செய்தது-இத்திருமந்த்ரார்த்தத்தை எல்லாருமறிந்து அநுஸந்திக்கைக்காக. ஆகையாலே

---

அ.— [எனக்குரியனன்றிக்கே ஒழியவேணும்] - (எனக்கு) சேஷமன்றென்று [ஒழியவேணும்]; [ஸர்வசேஷியான நாராயணனுக்கே]-(கைங்கர்யப்ரதிஸம்பந்தி) யான [நாராயணனுக்கே] [எல்லாவடிமைகளும்]-ஸர்வவிதகைங்கர்யங்களும், [செய்யப் பெறுவேனாகவேணும்] - செய்யக்கடவேனாகவேணும; [என்றதாய்த்து] - (என்று சொல்லிற்றாய்த்து) என்று மூலார்த்தம்.

---

தா.— விஸ்தரேண சொன்ன அர்த்தத்தை ஸங்க்ரஹித்ததுக்கு தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (விஸ்தரேண) இத்யாதியால். (மீளவும்) என்றது – புந: என்றபடி. (இப்படி) என்றது – இவ்விதமாக வென்றபடி. (எல்லாரும்) என்றது – பஹுஜ்ஞரும் அல்பஜ்ஞருமென்றபடி ; பெண்களும் பேதைகளுமென்றபடியாகவுமாம். இத்தால் பலிதாம்சத்தை அருளிச்செய்கிறார ( ஆகையாலே ) இத்யாதியால். (ஆகையாலே) என்றது-[இது தன்னிற்சொல்லுகிற அர்த்தம்] என்று துடங்கி இவ்வளவும் அவர ப்ரபந்தத்தாலே பரக்க அருளிசசெய்த திருமந்த்ரார்த்தததை ஸங்க்ரஹித்தருளிச்செய்து எல்லாரும் மந்த்ரார்த்தத்தை எப்போதும் அநுஸந்திக்கவேணுமென்னும் திருவுள்ளத்தாலாகையாலே என்றபடி.

மூ.— லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த முமுக்ஷுப்படியுள்,
ப்ரதமப்ரகரணமான திருமந்த்ரப்ரகரணம் ஸம்பூர்ணம்.

---

வ்யா.— எல்லார்க்கும் இவ்வர்த்தம் எப்போதும் அநுஸந்தேயம்.
லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
ப்ரதமப்ரகரணமான திருமந்த்ரப்ரகரணத்துக்கு நம்மணவாள மாமுனிகள் அருளிச்செய்த திருமந்த்ரார்த்த வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

---

எ.— லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
ப்ரதமப்ரகரணமான திருமந்த்ரப்ரகரணத்தின் திருமந்த்ரார்த்த வ்யாக்யாநத்துக்கு ஸாத்விகம் எம்பாவய்யங்கார் அருளிச் செய்த அரும்பதம் ஸம்பூர்ணம்.

---

தொ.—(எல்லார்க்கும்) என்றது – ஸர்வவர்ணங்களிலுமுள்ள ஸ்த்ரீகளுக்கும் புருஷர்களுக்கு மென்றபடி. (எப்போதும்) என்றது – அநாதத்யயநகாலமென்கிறயிலே நித்யங்களைப்போலே எல்லாக்காலத்திலு மென்றபடி. (எப்போதும்) என்ற அநந்தரம் இம்மந்த்ரார்த்தமென்று கூட்டிக்கொள்ளவேணும். (அநுஸந்தேயம்) என்றது – அநுஸந்திக்க வேணுமென்றபடி.
லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
ப்ரதமப்ரகரணமான திருமந்த்ரப்ரகரணத்தின் திருமந்த்ரார்த்த வ்யாக்யாநத்துக்கு ஸாத்விகம் தொட்டாசார்யர் அருளிச் செய்த அரும்பதம் ஸம்பூர்ணம்.

---

பி.— லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.
ப்ரதமப்ரகரணமான திருமந்த்ரப்ரகரணத்தின் திருமந்த்ரார்த்த வ்யாக்யாநத்துக்கு பிள்ளைலோகஞ்ஜீயர் அருளிச்செய்த அரும்பதம் ஸம்பூர்ணம்.